உ

சிவமயம்.

கணபதிதுணை

# மாயூரப்புராணம்

திரிசிரபுரம் மஹாவித்துவான்

மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்கள்

இயற்றியது.

இஃது 13928

இந்நூல்செய்தவர்மாணாக்கருளொருவராகிய

சென்னைக்கவர்ன்மெண்டு நார்மல்பாடசாலைத்

தமிழ்ப்புலவர்

திரிசிரபுரம்

சோடசாவதானம்

சுப்பராயசெட்டியாரால்

பார்வையிடப்பட்டு,

மாயூரத்திலிருக்கும் அரங்கக்குடி

முருகப்பிள்ளையவர்கள்குமாரர்

வயித்திலிங்கம்பிள்ளையவர்களால்

சென்னை

சி. டிக்ருஸ்து,

மலைச்சாலையிலிருக்கும் அத்தினீயம் அண்ட் டேலிநியூஸ் பிரான்ச்
அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது.

விபவ௵ கார்த்திகை௴

சிவமயம்.

# சிறப்புப்பாயிரம்

## மாயூரப்புராணம்ரங்கேற்றுவித்தவர்மேல்

சென்னைக்கவர்ன்மெண்டுநார்மல்பாடசாலைத்தமிழ்ப்புலவர்

திரிசிரபுரம்.

சோடசாவதானம்

## சுப்பராயசெட்டியார்

இயற்றியது.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சீர்பூத்தபல்வளமுமல்குபெரும்பூங்குடியிற்செழித்துவாழ்வோ
னேர்பூத்தகனதனவானடுத்தவரைத்தாங்குமியல்பின்மிக்கான்
பேர்பூத்தசோணாட்டுவேளாளர்குலதிலகன்பிறங்குகீர்த்தித்
தார்பூத்தசைவசிகாமணிசுகுணசிதம்பரமாறவத்தில்வந்தோன். (௧)

மாமேவுபல்கலையுநுண்ணறிவிற்கற்றுணர்ந்தவாய்மைதோய்ந்து
பூமேவுமன்னவர்தங்கண்மணியாயதிகாரபொலிவின்மேவித்
தேமேவுகண்ணோட்டமுதற்பலநற்குணத்தாலுஞ்சிறந்துவாழ்வோ
னேமேவுமந்திரமென்றோதுசரவணபவப்பேருற்றவள்ளல். (௨)

அகமேறுமணிப்புரிசையரணேறுசிராப்பள்ளியினகத்துமோவா
விகமேறுமெனதிதயத்தகத்துமென்றுமிடையறாதுறைவோன்மெய்மைப்
புகழேறுநயவிபுலன்பொறையேறுமிருங்குணத்தோன்புவனிமீது
திகழேறுமீனாட்சிசுந்தரநாவலரேறுசிந்தையோர்ந்து. (௩)

துன்னியபாவலர்களிப்பவியற்றுதிருமயிலாடுதுறைப்புராண
மன்னியமான்மியமுமதன்சொற்சிறப்பும்பொருட்சிறப்பும்வயங்கத்தேர்ந்து
பின்னியபேரருள்வள்ளல்சந்நிதியிலியாவர்களும்விரும்பமேவி
நன்னியமந்தலையெடுப்பவரங்கேற்றுவித்தனவானலம்பெற்றானே. (௪)



## சிறப்புப்பாயிரம்.

இப்புராணமசெயயுஙகாலை

யுபசரிததவாமேல

செனனைபபரீசாம்ஷனபாடசாலைததமிழபபண்டிதா

# தெய்வசிகாமணிமுதலியார்

இயற்றியது.

கலிவிருததம.

சேதனவாழககையாகளசெறிதிகழமாயூரததமாவான
கோதமையவொணணுதகூடலுடைககோததிரததான
மாதயவானகோவிநதவளளறவததினிலுதிதத
மேதகையமிகுகுணததானவேங்கடாசலமகிபன. (க)

நலலகுணவிபவததோனலலநெறிவழுவாதோன
பலலநூலொருஙகுணாநதோன்பலலநூலொருஙகியறறும
வலலுனொனவலலோாவயஙகுறவோாநதிணையனெனச
சொலலவருமீனுட்சிசுநதரநாவலலோனை (உ)

தூயசீாமயிலாடுதுறைபபெருமானமானமியமாம
பாயபாயிரமாதிநைமிசதத்பபணணவாவந
தேயபூசனைபுரிதலீருகபாடளவு
நேயமுடனுபசரிததுநிரமபுபுகழபெறறனனே. (ங)



உ

சிவமயம்.

## சிறப்புப்பாயிரம்.

இப்புராணம்பதிப்பித்தவர்மேல்

கும்பகோணம் புரோவின்சியால்கலீஜ் தமிழ்ப்புலவர்

திரிசிரபுரம்

# தியாகராசசெட்டியார்

இயற்றியது.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

பொன்பூத்தமயிலாடுதுறையெனுமாயூரநகர்ப்பொலிந்துவாழ்வோன்
கொன்பூத்தவளவரங்கக்குடிவாழ்க்கைப்பூவனுடைக்கோத்திரத்தான்
மன்பூத்தகார்காத்தார்குலதிலகன்முருகப்பவள்ளன்மைந்தன்
றென்பூத்தகல்வியறிவொழுக்கநயகுணங்கூடித்திரண்டாற்போல்வான். (க)

ஆயபுகழ்வேளாளனெனப்புகலுங்காரணப்பேரருத்தந்தேர்ந்து
பாயபுவியிடைப்பலர்க்குமொப்புரவாதிகளினியபண்பினுற்றுந்
தூயவன்பல்கலைகளுங்கற்றுணர்ந்தவரோடளவளாந்துணிபேமேற்கொ
ணேயமுடையவன்கல்விநயந்தெரிவிற்பனவிநயநிரம்பப்பெற்றோன். (உ)

ஓங்குசிவனடியாரையவனெனக்கண்டுபசரிக்குமுண்மையாளன்
தேங்குசிவாலயங்கடொறுஞ்சென்றுசென்றுதொழும்விருப்பச்சிந்தையாளன்
பாங்குபெறவிருந்தின்றியுண்டபகல்பயன்செய்யாப்பகலென்றோர்வான்
வீங்குபுகழ்மேயவயித்தியலிங்கமாலெனும்பேர்மேயநல்லோன். (ங)

முன்னுளபல்புலவருளும்பின்னுளபல்புலவருளுமுதியீர்செஞ்சொன்
மன்னுபன்னூலொன்றேனுமொன்றுதோலாதுமாண்புபெறவகுப்போர்யாரோ
வென்னிலெவர்தமைக்குறிப்பேமினையனேயெனக்குறிப்பவிசைமைவாய்ந்த
துன்னுநயகுணமேலோன்மீனாட்சிசுந்தரநாவலவரேறே. (ச)

மன்னுமயிலாடுதுறைப்புராணம்பாடும்பொழுதுமருங்குமேவி
மின்னுசிறப்புறமுயன்றதன்றியுநித்தியகருமவிதிகள்யாவுந்
துன்னுமதிற்பொருந்துவிதம்பாடுவித்தொண்சிறப்பினைத்தாந்துணிபினோர்ந்த
பன்னுமதுபரவவொன்றையாயிரஞ்செய்தளவாதபயன்பெற்றானே. (ரு)

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# மாயூரப்புராணம்.

## கடவுள்வாழ்த்து.

### அகத்தியவிநாயகக்கடவுள்.

பூமேவுதன்னடியார்தமைவிளக்கிமூந்திருக்கைபுணர்ந்தல்லல
தேமேவுபெருங்கருணையாளனெனநெறிப்பமறைத்திருநாமங்கள்
பாமேவுபலவிருக்கவகத்தியமாலகனிறெனும்போபரித்துநாளு
மாமேவுமயிலாடுதுறைத்தனிவாழ்பெருமானைவணக்கஞ்செய்வாம். (க)

### பெரியவிநாயகக்கடவுள்.

* மன்னியபேருருவாய்ந்தமதாசலமாமுடிமேக்குமருந்த *நாமே
தன்னியபேருருவாய்ந்தபூதத்தினடிகீழ்க்குந்தோயத்தற்கேற்ப
மின்னியபேருருவாய்ந்துபெரியவாரணமெனும்பேர்விளங்கப்பூண்டு
பன்னியபேருருவாய்ந்தமாமயிலைத்தளியமரும்பரன்றாள்போற்றி. (உ)

### வதாணியீசர்.

ஏர்பூத்தவிமைபாரும் * அமையாருந்தோட்சிசேர்செல்வவேந்தும்
பார்பூத்ததிருவானும்பெருவானும்புகழ்புரவுபண்ணுவானுங்
கூர்பூத்தவேனேருந்தேனேருமலர் * இறைப்பக்குறித்தநல்கி
யோர்பூத்தமயிலாடுதுறையமரும்வள்ளலார்திருத்தாள்போற்றி. (ங)

### குதவனேசர்.

இச்சையறிவுறுதொழிலாயப்பரையாதியாதியாயெண்ணிலாத
விச்சைசெயாரணிமுதலாயச்சத்திவிந்துவாதியாயவேறாயினறு
மச்சையினிதோம்பிடுவானளவாதகருணையிறபல்லண்டமீனும
பச்சைமயில்போற்றெடுக்கமாவடிவீற்றிருப்பாளைப்பரவிவாழ்வாம். (ச)

### அபயப்பிரதாம்பிகை.

பரவுபிறரபயவரதம்புனைந்தும்பாவனையாம்படியாணை
வரவுமிகுமலைமலர்க்கையமைத்தமைத்தபடியகிலவுயிர்க்குமாறறிக்
கரவுதவாதரவனையவுபயமேதிருப்பெயராயக்கதிர்ப்பப்பூணுற
றரவுமதிபுனைவார்பாலமரஞ்சஞயகிதாளடைந்துவாழ்வாம். (ரு)

---

* அடியரைவிளக்கஞ்செய்து தேவாமுதலியயாவரினுமூந்தி யிருப்பச்செய் தல்தோன்ற, விநாயகக்கடவுள் திருநாமம் பலவிருக்கவும், தமது திருப்பெயர் முன், அடியார்பெயர்கொண்டாரென்பதுகருத்து.

* முடியும், அடியும், யானையும் பூதமுமாகிய பேருருவங் கோடலால் தற்கேற்பப் பெரிய விநாயக ரெனத்திருப்பெயர்பூண்டு, அத்திருவுருவிற் கேயப் பெரிய கோயிலி லெழுந்தருளினரென்பது கருத்து.

* நாம் அச்சம் "பேநாமுரு மெனவரூஉங்கிளவி, ஆ முறைமூன்று மச் பொருள" தொல்காப்பியம் உரியியல், சக. சூத்திரத்தானுணர்க.

* அமை, மூங்கில்.

* தேனேருமலர் வண்டாராயுமலர்.

### இ து வ்ம து.

பூந்தமலர்க்கருங்குழலுஞ்செவ்வாயும்வெண்ணகையும்பசுவேயத்தோளுஞ்
சேர்ந்தவருள்பொழியுமிருவிழியுமெழிலவிழ்முகமுந்துணைப்பொற்றோடுங்
காந்தத்திருவிடையுமொண்செம்பட்டுடையுமங்கலப்பொற்கழுத்துநாளு
மிரந்தவருக்கருளஞ்சலுயகிநூபுரப்பதமுமிறைஞ்சிவாழ்வாம். (சு)

### மயிலம்மை.

வாவிபொலிபிரமவனமாயூரமெனுமொருபேர்மருவியோங்கத்
தாவியனமுணராதமுடிச்சரபமொருமயிலாதத்தோன்றியாங்கு
மேவியமாதருவிடபமரங்கமாநடம்புரியவிழைந்துநோக்கி
யோவியெலாம் * முன்மகிழப்பூத்தமாந்துதொழும்பசுமயிலையுன்னிவாழ்வாம். (எ)

### சபாநாயகர்.

மாடுவானகைநோக்கநாடுவானவர்பலருமவணங்கிவாழ்த்த
வாடுவானபொழிவதெனப்பாடுவானபுலவர்துதியுரைப்பயாமு
நீடுவானமுதலியவையோடு * வானவளிபொருவல் * நீத்தானந்தங்
கூடுவானம்பலத்துளாடுவானகுஞ்சிதத்தாள்குறித்துவாழ்வாம். (அ)

### சிவகாமியம்மை.

கரமூன்றுமடியிரண்டுஞ்சிருட்டிமுதலைந்தொழிலுங்கதிப்பவாறச்
சிரமூன்றுநான்குமுளாரசேவிப்பவெண்முறுவல்செவ்வாயத்தோற்றிய
புரமூன்றுமெரித்தார்செயநடங்காண்டல் * அதுவலிக்கப்போதல் * ஆய
திரமூன்றுமிரண்டாறுகருமவினைமுதலாம்பராபரைதாள்சேர்ந்துவாழ்வாம். (கூ)

### தட்சணாமூர்த்திக்கடவுள்.

மானமலரவனமுனன்றோர்தொன்முதலெனவமுத்தறக்கேற்ற
ஞானமலர்கருணையாலோர்தொன்முதல் * அமர்ந்தானமாக்கள்
கானமலரடங்குமுண்மைகைமலர்க்காட்சியாலே
தானமலர்த்தரத்தெரிக்குந்தம்பிரானசரணஞ்சார்வாம். (ய)

### வயிரவக்கடவுள்.

ஓங்குசொற்படைமுன்னருகமொளருகிப்படையுந்தேசு
வீங்குசக்கரமுன்னுணவெம்படையஞ்சுமஞ்சுந
தாங்குசூற்படையுங்கொண்டோர்தலைநகலநெய்தத்தோற்ற
பாங்குசாவடுக்கப்புத்தேளபத்மலர்க்கன்புசெய்வாம். (கக)

---

* முன்மகிழ, மயிலுருவங் கொள்ளாமைக்கு முன்னமே திருநடனங்கண் டுமகிழ்ச்சி.
* வானமுதலியவை, ஆகாயமுதலியதத்துவம் ௩௬.
* வானவளிபொருவல், ஆகாயமுங்காற்றும்போலத் தத்துவங்களோடு, அ பேதமாவிருக்கை.
* அது, காண்டலைக்குறித்த குறிப்பு வினைமுற்றுப்பெயர்.
* வலிக்கப்போதல், காட்டல்.
* கொன்றைகல். அவம

## அகத்தியவிநாயகக்கடவுள்.

உயர்திணையுமஃறிணையுமாயவொருதிருவுருவமுற்றுமேவும்
பெயர்வில்கருணைக்கிணங்கவவ்விரண்டுதிணையுயிரும்பேணித்தாங்க
லயர்வுலகந்தெரிப்பவிளமதியுழுதுவரவுமுடியலங்கத்தாங்கி
மயர்வுதபவீற்றிருக்குமகத்தியவாரணத்தடிகள்வணக்கஞ்செயவாம். (௧௨)

## குமாரக்கடவுள்.

நெடுவரைவிற்பவன்வொளிபடுவரையைக்கூறுசெய்துநிலவுமண்டத் - தொடுவ
ரைவிலுயிர்க்குமுடன்முதலியதன்கூறுசெயுமொருவேல்கொண்டோர் - கொடுவ
ரையைக்கூறுசெய்துகடன்மாவுங்கூறுசெய்துகொடும்பக்கஞ்சார்ந - தடுவரை
யிற்பொலிமயின்மேறபொலிதருசேவகன்மலர்த்தாளடுத்துவாழ்வாம. (௧௩)

## நந்திதேவர்.

வண்ணம்பொலியுமேருமால்வரையைமேவுநகையினர்சீர்
விண்ணம்பொலியுமிளாவிரதமேவலெனமான்மறியிறெடு
தண்ணம்பொலியுங்கைப்பரமற்சாரும்விருப்பரறிவுடையோ
ரெண்ணம்பொலியுநதனைச்சாரவிருக்குமொருவன்பதம்பணிவாம். (௧௪)

## இடபதீர்த்தம்.

நதிநதமுநதிபதியு * நபப்புனலுமறறுமுளநாரம்யாவுந்
துதிகெழுவப்படிநதாடித்தாமீட்டும்பாவமெலாநதொலைத்துப்போயுங
கதியருணின்மலமாகியுயிரோம்புகவேரனருள்கனனித்தீர்த்த
மதிசெயதுலாத்தீர்த்தமெனுமிடபதீர்த்தத்தினையாமவணக்கஞ்செய்வாம். (௧௫)

## தமிழாசிரியர்.

மயிலைநிகரஞ்சாயன்மங்கையொடுமருள்பரப்பிவானோர்சூழக்
கயிலையமர்பெருமானினுலோபாமுத்திரையெனும்பேர்க்கறபுவாய்ந்த
குயிலையடுமொழியொடுஞ்செந்தமிழ்பரப்பிமுனிவர்குழாங்குலவிச்சூழ
வெயிலைவிடுமணிப்பொதியத்தமருமொருமுனிவரன்றாண்மேவிவாழ்வாம். (௧௬)

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

தமரொடுவெள்ளநீந்தத்தவமுயன்றெழுநாளாற்றி
யமர்கொடுங்கணையொன்றுய்த்துவருநதுமாலவன்போலாது
தமரொடுவெள்ளநீநதநாவாய்க்கட்டவிழ்த்துத்தாவா
தமரொருபதிகஞ்செவ்வாய்மலர்ந்தவர்க்கடிமைசெய்வாம். (௧௭)

## திருநாவுக்கரசுநாயனார்.

பெறுமணிநிறத்தமைத்தும்பிறங்குபொன்னுடம்பிற்போர்த்து
முறுபெருங்காவல்பூண்டோர்ந்துறங்குமாயவன்போலாது
பெறுமணிபொன்னெலாங்கைப்பேருழவாரத்தாற்சோ
வுறுபுறம்விட்டானநதவுறக்கஞ்செய்பவர்தாளுள்வாம். (௧௮)

## சுந்தரமூர்த்திநாயனார்.

எண்ணிமாலயன்முன்னோர்குற்றேவல்செய்பெரும்பேறென்று
நண்ணிநாமுய்வோமெனநனிநாளுங்காத்திருக்கவுள்ள
புண்ணியமுதல்வன்றனேபோந்துகுறறேவல்செய்ய
வண்ணியதோழமைப்பாலமைநதவர்க்கன்புசெய்வாம்.

---

* நபப்புனல் - ஆகாயகங்கை.

### மாணிக்கவாசகசுவாமிகள்

பரமனைப்புறந்தழீஇமுனபூறசுவடுறுத்தாளபோலா
துரவகந்தழீஇயனனுன்மண்சுமந்துழனறடியொனறேறறுக்
கரவின்மேலகீழ்பினனெனனககறைதருமொருமுபபாலுந
திரமுறுசுவடுகொண்மாாதிகழ்நதவாகசனபுசெயவாம. (௨௦)

### தண்டீசநாயனுர்.

பாதகவரககற்கொனறுபடுபழியலைககப்பட்டு
நோதகவடைநதுதீாநதநோனசிலையிராமனுண
மேதகவநதணுளனுருயிர்வியமாயதது
மாதகவலமையுமுதறிமருவினுாசரணஞ்சாாவாம் (௨௧)

### அறுபத்துமூன்றுநாயன்மார்.

தகைபெறுமுணமைவாயநததஞ்சரிததிரமேடாய
தொகைவகைவிரியோாமூனறுநதொழுபெரியோாககுச்சொறற
பகைதவிாகுரவனுவானபடாசடைபபிரானேயாக
நகைசொனுமறுபானமூவாநறுமலாப்பாதமயோறறி (௨௨)

### பஞசாககரதேசிகர்.

விலையொடுமிருளனுதிமேவியசெயலைநீககி
யனையினுமுயிாகருநலகியாவடுதுறைசகணமேய
தனைநிகாநமசிவாயகுருபரனசரணஞசாாநதாா
புனைமலரடியெனசெனனிககண்யெனபபொலியுமனறே (௨௩)

### குருவணககம.

வடுவகிர்ககண்ஞாாசைவலைபபடாாசெறிகோமுத்திர
தொடுகடலுலகமேததுஞசுபபிரமணியதேவ
னெடுகலநதமராாநிறகுமொருவனமபலவாணபபோ
கொடுவருசிவனெனனெஞசமகொணடனனகுறிபபறே றேந (௨௪)

### மறறையடியார்கள.

மன்னியமாமயிலாடுதுறைததனியுளவளளலாாவயங்குசீாத்தி
பனனியநாவுடையரகமபடிதததொணடினெறிநிறபோர்பரவுநீறுந
துன்னியகணமணிததொடையுமைநதெழுததும்பொருளாகததுணிநதோராய
முனனியவிநனியமரொவராயினுமறறவாசரணமுடிக்கொளவாமே (௨௫)

### கடவுளவாழத்துமுற்றிற்று

---

## அவையடக்கம்.

---

ணியநீராவடுதண்டுறைநமச்சிவாயகுருசாமிபொறறு
ன்ணியசிநதையன்கௌரிமாயூரப்பெருமான்கட்டளைமேறகொண்டு
ணியமேன்மேலுயரவளாபபவனறகுணசீலனபொறையிற்கூர்ந்தோன்
ணியமாமணிமுத்துக்குமாரமுனிவரனருட்கோாவைப்பாயுளளான். (௧)

வடமொழியிருந்ததெய்வமாயூரமான்மியத்தைத்
திடமொழிபெயர்த்தெடுத்துச்செந்தமிழ்மொழியாலின்பம்
படமொழியென்னவனனுன்பணித்தசொனமறுத்தற்கஞ்சித்
தடமொழிப்புலவர்முன்புசாற்றிடத்துணிந்தேன்மன்னே. (௨)

நன்மொழியமைந்தசான்றோர்கூடுமந்நகருள்யானென்ன
புன்மொழிகொண்டுசேறல்புவனங்களெடுத்துப்பேசும்
வன்மொழியமைந்தசாதிமலர்பயிலிடத்துநன்மை
யன்மொழியொருவனெல்லாவருக்கங்கொண்டணைதல்போலும். (௩)

தண்ணியவிமயப்பச்சைமயில்செய்பூசனைதழீஇய
புண்ணியமுதல்வனகாகபூசையுந்தழீஇயவாறு
லெண்ணிப்பெரியோர்செய்யுமினியபாவேற்றலோடு
கண்ணியஞானமில்லேன்பாடலுங்கைக்கொளவானல். (௪)

இலைமலர்தாங்கப்பட்டவிருவருமிறைஞ்சும்வெள்ளி
மலையவன்பெருமைக்கேற்றபாக்கொளின்வாய்ப்பாட்டென்னிற்
புலைமுடைத்தோலும்பாம்பும்புனற்றலைதொடையுமென்பு
மலைவினமற்றனையாற்கேற்றவாடைபூணுமோசொல்லீர். (௫)

நன்மொழியியலுணர்ந்தோர்நாயினேன்புகன்றபாடல்
* அன்மொழியாவதேனும் * அல்வழியாவதேனும்
புன்மொழிப் * போலியேனுமவேற்றுமைபொருந்திற்றேனும
வன்மொழிபுனைறுதளளலாவதோர்வழக்குமுண்டோ. (௬)

பரசிவபுராணமென்னும்பத்திசற்றேனுமில்லா
விரவுவகுற்றமென்றுவிளம்புவரோவாசொற்றூலு
மரவணியணையானிந்தையறையவுந்துணியுமந்தக்
கரவொன்கவிக்குக்குற்றங்கழறலோரிறும்பூதன்றே. (௭)

வாரியுட்கலந்தபுன்னீர்வாரிதிநீரேயாகுஞ்
சீரியபயங்கலந்ததீர்த்தமும்பாலேயாகும்
வேரியங்கடுக்கையண்ணன்மான்மியம்விரவாநின்ற
பூரியனுமென்சொலலும்புனிதமாய்ப்பொலியுமன்றே. (௮)

ஒடுங்கலில்குரவனாகியுண்மைபோதிக்குமம்மா
னெடுங்கணக்குணராரொல்லாநிகழ்தருகுரவனொன்றோ
படும்பெயர்பூண்டுமண்மேற்பயிலவும்வெறுத்திலானகை
விடுந்திறமுணராரெனசொனமேலவரானார்நாளும். (௯)

அவையடக்கம் முற்றிற்று.

## சிறப்புப்பாயிரம்.

துன்னுதிரைக்கருங்கடல்சூழ்புவிபுகழுமயிலாடுதுறைப்புராணம்
பன்னுவடமொழிநின்றுமொழிபெயர்த்துத்தென்மொழியிற்பாடித்தந்தா
னுன்னுசிவஞானகலைமுதலாயபல்கலையுமொருங்குதேர்ந்தோன
மன்னுதிரிசிரபுரம்வாழ்மீனாட்சிசுந்தரநாவலவரேறே.

சிறப்புப்பாயிரம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம். ௩௫

---

* அன்மொழி-தீயமொழி. * அல்வழி-தீயவழி. * போலி-உட்பொருளின்ம

# திருநாட்டுப்படலம்.

---

அரவுவார்சடையெம்வள்ளலாருயிர்ப்பொருட்டுவாசக்
குரவுவார்கூந்தற்செவ்வாய்க்கோற்றொடியோடும்வைகும்
பரவுவார்மயிலைமுன்னாப்பஃறலந்தன்னுட்கொண்டு
விரவுவார்சோழநாட்டின்வளஞ்சிலவிளம்பலுற்றாம். (௧)

பூவினுட்பதுமம்போலும்புருடருட்டிருமால்போலுங்
காவினுட்கற்பமபோலுங்கலைகளுண்ஞானம்போலு
மாவினுட்சுரரான்போலுமறத்துளில்லறமேபோலு
நாவினுண்மெய்ந்நாப்போலுநாட்டினுட்சோழநாடு. (௨)

மேக்குநீர்கிழக்குநீரொன்றுளாயிருநீருமேன்மே
லாக்குவாய்ப்புடையதாயவிலங்கலுமதனினின்று
தாக்குமாவாராநின்றதண்ணீரும்வடிவுதீத
னீக்குமாநகருமெனறுநிரம்பவுள்ளதுசோணாடு. (௩)

குன்றலில்விளைவுசெயயுங்குடிகளுநதுறவுபூண்ட
நன்றறிபவருமநதணாளர்முன்னாயினோருந்
துன்றவன்கலத்திறபண்டிகளிறபொருடொகுக்கும்வாழக்கை
யன்றலிலாருஞ்சேரவமைநததுவளவநாடு. (௪)

பெரும்பொருளுடைமையாலேயாவரும்பெட்பதாகி
யரும்புமோர்கேடுமின்றியாறறவுமவிளைவதாகி
வரும்பொறையனைத்துநதாங்கிமன்னவற்கிறையுமுனபோற்
றரும்புகழுடையநமமாதவாப்புகழ்ச்சென்னிநாடு. (௫)

மயின்முதலுருவநதாங்கிமலைமகளாயவன்னை
பயிலவும் * மந்திரங்களபலலகோணடுழியோங்குந
கயிலையெம்பெருமானமேவிக்கலபபவுநதவஞ்செய்தன்று
லெயில்வளைநகரமெங்குமினையதருமபயநாடு. (௬)

நோக்கியவிடங்களெல்லாநுவலருநதலஙகளாகத்
தேக்கியதீர்த்தமாகச்சிவலிங்கமூர்த்தியாக
வாக்கியதவததானுளுமடைநதவாக்கறமெனறோதும்
பாக்கியமாக்கிமேலுயபபதுமுறுசெனனிநாடு. (௭)

மறைநெறிதிறம்புவாரையாகமம்மறவியாரை
முறைதபவொழுகுவாரைமொய்பழிப்பொருள்வேட்பாரைக
குறையறவிருநதோம்பாரைக்குறிததனகொடாரைமுக்க
ணிறையடிபூசியாரையில்லதுகிள்ளிநாடு. (௮)

திருமிகப்பெருகலாலேதீயவெம்பசியுங்காலப்
பருவரலின்மையாலேபாறுறுநோயுமன்னற்
[illegible]ருவரும்படையினாலேயுடற்றுவெம்பகையுமில்ல
[illegible]ப்புகழநாளுமினையந்தசெம்பியர்தநாடு. (௯)

---

* மந்திரம் - கோயில்.

## திருநாட்டுப்படலம்.

தலையளமைசென்னிநாடுதவாவளங்கநா டு
நிலைபெறுமபயநாடுநிரம்பியவளவநா டு
தொலைவிலாப்பெருநீர்நாடென்றின்னமுஞ்சொல்லப்பெற்று
மலைவிலாப்பயன்செய்நாடுமற்றிதுபோலொன்றுண்டோ. (௰)

### வேறு.

பொங்குவெண்டிரைக்கங்கைமேற்படர்ந்ததுபோலத்
தங்குவெண்முகில்வான்வழிப்படர்ந்திறைச்சயிலம் *
* மூங்குதண்கடற்புனல்கொளீஇக்கருநிறமுற்றி
யங்குநின்றுகாளிந்திபோநதென்னவானணைந்த. (௧௧)

வாரியஃகுமாமால்குடித்தெழுதிறமதிக்கின்
வேரியந்தொடைத்தம்பிறையாகியவேந்தன
மூரிவெம்பகைவரையமரிடங்கண்டுமுற்றிச்
சோரிசிநதிடப்பறையரிவான்செயறுணையும். (௧௨)

விதிக்குமாறறல்செய் * கருமுகில்வானளாய்மினன
றுதிக்குமங்கதிர்காளிந்தியெனுமொருதோகை
மதிக்குமேனியிற்பொற்பணிபுனையமற்றவைதாங்
கதிக்குமாறவண்மெய்நின்றுமின்னுதல்கடுக்கும். (௧௩)

முற்றுசூற்பெருங்கொண்டல்கள்வானின்றுமுழங்க
லெற்றுதெண்டிரைநதிகளின்விளக்கமிக்கியைத
லுற்றுலாங்கதிர்ப்பால்வருதன்சிறபபுன்னி
மற்றுமேற்படர்காளிநதிமுழங்குதனமானும். (௧௪)

மீதுமூடிப்பயோதரம்வேனில்வெப்பழிய
மோதுவாமெனமுனிதரல்கூற்றெடும்பிறநத
மாதுமாநதியாதலிற்காளிநதிமாறுத்
தீதுநோக்குபுதண்டிக்கமுயல்வதுசிவணும. (௧௫)

கருநிறங்கொள்காளிநதியோர்பாதியிறசலப்பப்
பொருவில்குங்குமம்பூசிடப்பொலிதருநுதலபோல
வெருவில்வானதமெங்கணுமூடியமேக
மொருவில்வாங்கியதுறுகடுங்கோடைபோயொளிப்ப. (௧௬)

உள்ளமாநதிபல்லவுமூறுபெருவெப்பங்
கொள்ளவேனில்செய்கொடுமையுட்குறித்தகாளிந்தி
மெள்ளமெய்வெயர்த்திடவெயர்நிலத்துவீழ்ந்தென்னத்
தள்ளரும்பலவுறைசிதறினசலதரமே. (௧௭)

வெப்புநோய்செயும்வேனிலைவீட்டுவனென்று
பப்புகாளிந்திபல்வழிக்கொண்டுபாரிறங்கு
மப்பெருந்திறமெனவள்ளலாருளென்னச்
செப்பருஞ்சலதரம்பொழிந்தனசெழுமழையே. (௧௮)

---

* இறைச்சைலம் - சிறையையுடையமலை.
* மூங்கு - மூழ்கற்பொருளுணர்த்துமுதனிலைத்தொழிற்பெயர்.
* விதிக்குமாற்றல்செய் - பிரமனுக்குஞ் சிருட்டிவலிகுறையும்.

மலைகளெங்கணும்பொழிந்தனமரஞ்செறிகான
நிலைகளெங்கணும்பொழிந்தனநிரம்புகாலோடைத்
தலைகளெங்கணும்பொழிந்தனதாழையங்கழிசூ
ழலைகளெங்கணும்பொழிந்தனவள்ளியரருள்போல். (கக

செய்யகோல்வலியரசுசேர்த்தெழுதருகாலை
வெய்யகோனுடைக்குறும்புமாய்ந்தொடுங்குறுவிதம்போ
பொய்யுருமுகில்பொழிந்தநீர்பரவுறுகாலை
யெய்யுருவிளைத்தொடுங்கினவேனில்வெப்பெங்கும். (உ0)

கொண்டலாகியகவுணியகுலத்திளங்கன்று
கண்டல்சேர்புனற்கடலெனுங்கௌரிதன்முலைப்பா
லுண்டல்செய்தரும்பாமழைபொழிதலாலொழிந்த
மண்டல்கொண்டதீவேனில்வெப்பெனும்பரமதமே. (உக)

வரைநிரம்பினவருவிகான்யாறுபன்மரஞ்சார்
தரைநிரம்பினவோடைகாலேரிகடவாச்செய்
நிரைநிரம்பினசெய்தலங்கைதைசூழ்வேலித்
திரைநிரம்பினசிறுமணற்கேணிமிக்கூறி. (உஉ)

தரையடங்கலுமழைபொழிவெள்ளநீர்தவழ
வுரைசிறந்தபைம்புற்களங்குரித்தனவொருங்கு
விரைநறுங்குழன்மண்மகள்வெப்புநோய்தீர்ந்து
புரைசெய்பைம்படாங்குளிர்தபப்போர்த்ததுபொருவும். (உங)

விண்டபல்கமர்வெள்ளநீர்புகுதரவொன்றிக்
கண்டதேமெலாமேல்வழிந்தோடுமாகாணுங்
கொண்டனீர்தரைக்கேயன்றிப்பாதலங்குறித்து
மண்டனீதியன்றென்றுபோக்கறுப்பதுமான. (உச)

கொடிமரங்கண்முற்பல்லுயிர்களுநிலைகூட
முடிவிலாமுகில்பொழிதருபுவனமாழ்முநநீர்ப்
படியடங்கலும்போர்த்தமைநோக்கியப்படிக்கோ
ரொடிவில்வான்பெயர்புவனமென்றுரைத்தனருரவோர். (உரு)

குறிஞ்சி.

நலம்விராவியபொன்னிசூழ்சோழநன்னாட்டுப்
பலம்விராவியமழைவளம்யாவரேபகர்வார்
குலம்விராவியவைந்திணைவளத்துளுங்குறித்த
புலம்விராவியகுறிஞ்சியின்வளமுதற்புகல்வாம். (உசு)

ஈன்றதந்தைவாழிருக்கையினினமெனல்குறித்தோ
சான்றவன்னையைத்தந்ததன்குலமெனநேர்ந்தோ
வான்றகாதலியுயிர்த்தவரிடமெனவறிந்தோ
தோன்றமந்திரங்கொண்டுறும்வேள்வரைதோறும். (உஎ)

கோலவள்ளியாரொடுகுகனமர்தருகுணத்தா
நீலமாமயிலாவயினமருவநீங்கா
[illegible]லமற்றவைதழைவிரித்தாடுமாருங்கு
[illegible]மைந்தவிண்வேந்தனூர்கருமுகில்விரவும். (உஅ)

எங்கள்சாதியிலொன்றுமுன்வளர்த்தினிதெடுத்த
திங்கள்வாணுதற்றெய்வதப்பிடிபுணர்செல்வன்
றங்கமாரிடத்தகன்றிடோமெனாறுசூழ்ந்தாங்குப்
பொங்கமும்மதம்பொழியுவாப்பலவவட்பொலிவ. (௨௯)

மறையினந்தமுந்தொடரொணாஞன்மருகனாய்மருவு
முறைதெரிந்துபசரித்தல்போன்முழுவலிவேட
ரிறைகொள்சந்தகில்விரையெழும்படியெரியிடுவார்
நிறையுணாக்கொள நெடுங்குரற்செந்தினைவிளைப்பார். (௩0)

அறவனாகியகுமரவேட்காட்டவுமினிய
நறவுமேனலினிடியொடுகூட்டுபுநயந்து
குறவருட்டவுங்குறித்துநாடோறுமுய்த்தீட்டும்
புறவமுற்பலவிடமெலாம்போய்ப்புகூஉவருமீ. (௩௧)

ஒருமடங்கலுமொருமதமலையுமுன்னுடன்று
பொருதழிந்தனவழிபடிறபொலிவுளதென்றே
யிருநிலம்புகழ்குறிஞ்சிவேலிறைவன்மந்திரத்தை
மருவுநண்பொடுசூழுவமடங்கலுங்களிறும். (௩௨)

ஊடுமாதர்பாலாங்குறைநன்னுவார்வினையைச்
சாடுமண்ணல்பாற்றாழ்நலல்லாற்பிறதாழார்
நீடுவேங்கையேடமர்புரிகிறத்தினுணிறத்திற்
கூடுபல்வடுவன்றியோவடுவிலார்குறவர். (௩௩)

ஊரும்வான்மதிகாந்தளைப்பாந்தளெனாறுணவிட்
பேருமாலொருசாரொளிபிறங்குசெம்மணியைச்
சாருந்தீயெனவுளியமோடுறுமொருசாரமெய
தேருந்தன்மையவாராவிடிற்செறிவனபலவே. (௩௪)

நீலமாமணித்துறுகல்கீழ்ப்படிநரநிலவு
கோலமாமதிமேலுறநடுவிராக்குலவிச்
சாலமேலுயர்சோதியந்தருநிற்றலிருவர்
மாலவானுரீஇச்சிவபிரானின்றதுமானும். (௩௫)

சுனையிரும்பினாலிறவுளர்தொடுவதுகவலை
புனையிலாதவாவிளைத்தலும்போக்கரும் * கவலை
வனையின்மற்றவர்படுதலும் * மாதரக்கவலை
கனையிலாவவர்க்கென்றுமில்லாததுங்கவலை. (௩௬)

குன்றவாணர்தங்குறிச்சிசூழ்வேலியுஞ்சென்னி
யொன்றவைத்திடுமணியுமற்றவர்தமொள்ளிழையார்
நன்றவாவுகையுலக்கையுநகுதலைச்சீப்பு
மன்றநாடொறுமாவனயானைவெண்மருப்பே. (௩௭)

பொங்குசெம்மணிவிலங்கலுமரகதப்பொருப்புந
தங்குகற்குடிச்சைலமுமுலகெலாந்தழைய
வெங்கும்வாள்விடுமுத்தலையிரும்பெயர்க்கிரியு
நங்குதிரொறும்போங்கலுநயந்ததுகுறிஞ்சி. (௩௮)

---

* கவலை, தினை. * மாதரக்கவலை, பெண்களது கண்ணாகியவலை.

அரவுபூண்டஎம்பிரானமர்சுந்தரப்பொருப்புங்
குரவுபூண்டொருகுமரவேள்பொலிதருகுன்றும்
பரவுமற்றவுந்தன்னகம்பெறலிதரப்படைத்த
வுரவுசேர்பெருங்குறிஞ்சியினருந்தவமொன்றே. (௩௯)

முல்லை.

விண்டுவாநுயர்தொழப்பொலிவெற்றிவேலிறையே
மண்டுதற்கிறையாகருபுவாழுமொண்குறிஞ்சி
யண்டுபல்வளத்தெவனுரைத்தனமினியறைவாம்
வண்டுகிண்டுபன்முல்லைசூழநிலப்பெருவளமே. (௪௦)

வேறு.

பாயபலபெரும்புவனப்பகுதிபொதுக்கடிநதோம்பு
மாயன்மதித்திடுசிறப்புட்சிறபபாகவனமோம்பிற
றூயதிரைப்பாற்கடலோவைகுநதத்தொல்பதமோ
வாயவனமிவைக்கதிகமாகுமெனிலவரும்பழியென். (௪௧)

விரைமலர்செற்றியதருக்கண்மிகச்செறியும்பெருவனத்தைந்
திரையெறிபாற்கடலென்றுசெப்புவதறகையமில்லை
வரைவில்பசுக்கன்றூட்டிமடிந்தலநினறிழிந்திடுபால
புரையில்பெருக்கெடுததோங்கப்போற்றிமால்வசிர்தலிஞ (௪௨)

அண்டர்குழாம்பலசூழவாங்காங்குமலர்காயாக்
கொண்டபெருஞ்சாரூபத்தவரமாகோலநதெரிக்க
வண்டடையுநதண்டுழாய்மாயனினிதமர்தலின்ற
கண்டவனம்வைகுநதமெனக்கரைதறகையமெவன். (௪௩)

மழைமறுத்தகாலத்துங்காயாவாயமல்குதலாற்
றழைமலர்செய்காயாவென்பெயர்பெறறுத்ததையவறறை
விழைதருபைநதுழாய்சூழ்வமேயமாறம்பாறகொள
குழையும்விழைவுணர்நதவைகள்குழாங்கொடுசூழ்நதமைமாணும். (௪௪)

கொடியிடையாய்ச்சியர்திரட்டிக்கொண்டசுவைநவநீத
மொடிவறுதாழிபினமுல்வைததுருக்குமணங்கவர்வதறநம்
படியிலவர்முறிமேனிபரப்புமணங்கவர்வதறகு
நெடிவனம்பன்ஞசிபடைநீாமையெனக்குமிழுமலரும். (௪௫)

திரையெறிபாற்கடனடுவெட்டிருந்துயில்கொண்மணிமார்ப
புரையில்வனததாய்ச்சியரிற்பெருறும்புகுநதுபால்கவர்நது
விரைதரமத்தடியுண்டுங்கட்டுண்டும்விழைநதமர்வா
னுரைசெயவர்கையளையவுறுசுவையாதலையுணர்நதே. (௪௬)

அழன்மிசையுற்றுறுபாறனளவுசுருங்கியுங்கரிய
குழலிடைமின்னாரின்சொற்கொவ்வாமைகுறித்தனறே
நிழலுருவந்திரிநதனையார்கிளைவளைக்கைமத்துடைக்கச்
சுழலடைந்தும் * அலர்கலந்துந்தோற்றமுறக்கதறிடுதல். (௪௭)

தொறுவியர்தங்குவட்டுமுலைத்துணைக்கொவ்வாமையினன்றே
சுவைகொள்பாற்குடங்களுடம்புமுழுவதுங்கறுக்கு
றுகறபுடையவாதம்மருங்குலொவ்வாமையினன்றே
ளவக்கொடியனைத்துநதொலையாதவலர்படுமே. (௪௮)

* அலர் - நீர்,

திருமகளாகியவுமையைச்சேர்ந்தவிளமென்றுமுமையும்
பொருவிலவளொடும்பிறந்தான்புடையமருமுயற்கினமென்
றொருவில்பலமுயறகுலமுமுரிமைகடைப்பிடித்தொழியா
வருமணிமாாபுடைமாயோன்வீற்றிருக்குமாவயினே. (சக)

திங்கணுதற்றிருமகள்சேர்செல்வகனிதோம்பிடுங்கா
டங்கண்மலர்க்கடுக்கைத்தழைந்தமர்தலினாலறுகுறலாற்
கொங்களவின்மலர்செறியுங்கூவிளங்கள்பொருந்துதலா
லெங்கள்பிரான்செஞ்சடைநிகாடென்றுரைத்தற்கையமிலை. (ருo)

வெள்ளியகோத்திரவப்போர்மேலுயர்நதுதோன்றுதலால்
வள்ளியநீண்மணிவண்ணமால்காக்கும்புறவவள
மொள்ளியமால்வரைகாணவொருநகடைநதுநிறைல்பொருஉந்
தெள்ளியபல்பயறசேருங்கல்சிறுகுனறச்செறிவொக்கும். (ருக)

நீலமணிகண்டனமர்நெடுங்களமுநிரம்புதவச்
சீலமருவியமேலைத்திருக்காட்டுப்பள்ளியுமெய்க்
காலமுனைருங்கங்கைகண்டசோழீச்சரமுஞ்
சாலவனத்தமைநதவெனிறையஞ்சிறிதோபெரிதனறே. (ருஉ)

மன்னன்முதல்வானமொலாம்வநதுதொழவரங்கொடுத்து
முன்னவனெங்காலுமமா * முறகபுரமுதலாகப
பன்னரும்பஃறலநதனபாறபரம்பவுளதெனத்தெரிநதா
லென்னருமுலலையினபெருமையெடுததுரைக்கவல்லுநரோ. (ருந)

அம்மையர்ாகீழலில்யாமமாவோமென்றருள்செய்த
செம்மையாாவீறறிருநதுந்திருத்தஞ்சைமுதலாக
வெமமையாரருளியகநமிறைவர்தலம்பலவெனனில்
வெம்மையார்பெருவனநதைவிண்ணுலகுங்காக்குமோ. (ருச)

மருதம்.

சூழக்கன்றுபினறெடரக்குடஞ்சுட்டிபபலபயில
மழக்கன்றுகுணில்கொணடமாலகாக்கும்வனம்புகழ்உா
னெழக்கனறுநசையாறசறறியம்பிருமருதவளஞ்
சழக்கன்றுசிறிதுரைபபாம்பெரிதுரைகக்ததகாமையினால். (ருரு)

வேறு.

பன்னரும்பெருமைவாய்ந்துபடர்தருவைந்தனீழன்
மின்னருநிதிமுன்னெலலாம்பணிதலைமேவிநிறப
நன்னலவரம்பைமாதர்நடங்கண்டுவானங்காக்கு
மன்னவன்காக்குமேன்மைவாயந்ததுமருதவேலி. (ருசா)

வரைதரவருதலானுமாமலர்தாங்கலானும்
புரையில்பல்பேதமாகிப்பலபெயர்பொருந்தலானுந்
தரையகமோம்பலானுநதண்ணளிநீரினானுங்
கரையறப்பெருகும்பொன்னிகடுக்குமெம்பிராட்டியாரை. (ருஎ)

மலைபகிவயிரங்கொண்டுவருதலின்வானவேந்த
னிலைமலைமலர்மேலாகவியைதலினெண்கணுளன்
றலைவளைசுமத்தலான்மால்கடுக்கைசார்ந்திணைதலாலே
கலைமறைபுகழுமெம்மான்கடுக்குநீரருதபொன்னி.

---

* முற்கபுரம் - பயறணியீசம், அது, உடையார்பாளையமென வழங்குகின்

மணிமயிற்றழைமால்யானைமருப்பகினறுஞ்சந்தாதித்
துணியொளிர்சுவணநெய்பாறுதைமலர்கரும்புகாதி
யணிகெழுசாலிபல்பூவலங்குழித்திலந்துப்பாதிக்
கணிதமிலுறலாற்பொன்னிகலந்தபண்டாரம்போலும். (௫௯)

இருகரைமுறியக்குத்தியெங்கணும்வெள்ளமாகிப்
பெருகிமுன்னெழுந்தகங்கைப்பெருக்குமோர்திவலையென்ன
வருகொருவருஞ்சாராமலலையெறிந்தகடுகிணடு
கருகுபைங்கடல்கலக்குங்காமருதெய்வபொன்னி. (௬௦)

உடைகரையடைத்துமள்ளரொருவழிச்செலுத்தலாலே
யடைமனுத்தகைக்கப்பட்டவரவெனவடங்கிச்சென்று
மிடைதருபொறிவாய்தோறும்வினைநதுபோயப்புருமனம்போற்
புடையமர்மதகுதோறும்போய்ப்புகுந்ததுநீர்வெள்ளம். (௬௧)

கால்வழியோடியெல்லாக்கழனியும்புகுந்துமுனறுட்
பால்படுவேனில்செயதபற்பலகமருமொன்றச்
சால்புயர்தன்பாலாயபிளப்பெனச்சடுதிசெயது
கோல்வலிமன்னரார்ப்பக்குறையறுத்ததுநன்னீரசம் (௬௨)

சிவவியாபகமேயென்னச்செய்யெலாந்தகவிறபுக்க
உவமையில்வெள்ளநோக்கியுவகைமேறகொண்டம ...
கவலரும்பழையர்பாறபோயக்கடைவழிதரககண்ம ...
தவலருமுழன்மேற்கொண்டுசார்ந்தனாபழனமெங்கும. (௬௩)

பெருவலித்துணைக்கடாவின்பியலுறநுகர்கிடத்திப்
பொருவருமதறகுராபபட்பொருந்நிடவோர்கால்சேர்த்தி
மருவுறவிடக்கைமேழிபிடித்துமறமெருகூகமேவ
வொருகுழுமுட்கோல்பறறியுழுவாலுரப்பிமள்ளர் (௬௪)

குடதிசைநின்றுமள்ளர்குணதிசைச்செல்லவுய்த்தும்
வடதிசைநின்றுமறறைத்தென்றிசைமருவவுயத்து
மிடர்செய்புல்லாதிமாயவிரும்படைச்சானெருநசத்
தொடர்பலவிளாக்களகோலியுழுதனர்தொள்ளிசெயதார் (௬௫)

செறிபலவுயிர்காப்பாளர்சிதைவுசற்றடைவராயி
னறிதருபயன்கொள்வார்மறறதுதவிர்த்துயர்த்துவார்கள்
செறிபலபயிர்காத்தோம்பும்வரப்புறுசிதைவுநோக்கி
யறிதருமுழிவர்தாங்கங்கரிந்துயர்த்தினர்மென்மேலும். (௬௬)

உழுதொழில்புரிந்தகாலையழுந்தலோடேழ்த்தறந்தா
டழுவியதுணர்ந்துமாறறித்தனியிறுமாப்பேய்வார்போல்
வழுவறுபரம்புபூட்டிமறறதன்மேறகொண்டூர்ந்து
கொழுநிலமாடியென்னச்சமஞ்செய்தார்குலவுமள்ளர். (௬௭)

மருதநன்னிலத்துவேந்தைவயல்வளம்பொலிகவென்று
... வுகைகள்கூப்பிக்காமருமணிநூகாசெநெற
...மினைவாரிவித்திக்கொண்டநீர்மறுநாட்போக்கிப்
...லிமள்ளரோம்பமுளைத்தனபழுதொன்றின்றி. (௬௮)

உறுமழைப்பசியறிந்துபாலூட்டியோம்புந்தாய்போற்
குறுமுளையளவறிந்துதகுதியிற்குளிர்நீர்பாய்ச்சிச்
செறுவலிமள்ளரோம்பச்சிமருமகள்வெற்பீன்ற
நறுநுதலுருவுற்றென்னவிளைவொரீஇப்பசந்தனன்று. (௬௯)

பல்லுயிரடையமாயைப்பாலமைபோகமெல்லாம்
புல்லுறவளந்துநல்கும்புண்ணியப்பெருமான்போல
நல்லியற்கழனியேவமாற்றங்காணுறனைத்து
மொல்வகைப்பறித்துநட்டாரொன்றொழியாமண்மள்ளர். (௭௦)

ஈன்றவள்கிரகநின்றும்விருத்தியாங்கிரகமெய்துஞ்
சான்றவொண்ணுதலாராங்குத்தாழ்ந்தனவொழுதல்போல
வான்றபல்வயலுணட்டநாறெலாமமையத்தாழ்ந்து
தோன்றமேலெழுந்ததோம்புந்தொழிலினொழுந்துறுள்ள. (௭௧)

புலைமிடிபிணிமுன்னுனகல்வியைப்பொருந்திற்றென்ன
வலைதருகாமமாகியருந்தவத்தினைச்சூழ்ந்தென்ன
மலைமலமாயைகனமம்வளருணர்ச்சியைச்சார்ந்தென்னத்
தொலைவில்பல்களைகள்வந்துசூழ்ந்தனபயிரைமாதோ. (௭௨)

உயிர்மலமுழுதுமோப்பக்காலமோர்ந்துறுபெம்மானிற்
பயிரிடாமுழுதுந்தீர்ப்பபானபருவந்தேர்ந்தடைந்தவாட்க
ணயிரபடுமதுரத்தீஞ்சொலுழத்தியரடங்கக்கூடித்
தயிருடைமத்தேயென்னக்களைபலசாடலுற்றார். (௭௩)

முண்டகமனைத்துங்கொய்வார்கொய்தவைமுருங்குமாறு
கொண்டபங்கயப்பேர்தோந்துகுளிர்ந்தசேற்றிடுதல்செய்யார்
கண்டபல்குலையுஞ்சோப்பார்கதிருங்கணேணுட்டமின்றித்
தண்டலிலுணவாம்பைங்கூழ்க்கூறுதலுணர்ந்துசாடும். (௭௪)

அடிகரமுலைக்குமாறுவலரரும்படங்கக்கொண்ட
முடிவருமம்புயத்தைமுருகனெனக்கண்கள்காட்டத்
துடிதருமவாகைகாட்டுந்தாரைவன்பகையாமென்று
கடிதருங்குவளையெல்லாங்காமருகழனிமாட்டு. (௭௫)

பரம்பரன்முடிமேலேறும்பாங்குடைக்கமலமெல்லா
நிரம்புநீரோடையாவிநீத்துநீர்சிறிதேதங்கும்
வரம்பமைசெய்யுண்மொய்த்தவணைத்தாலுழத்திமாதர்
கரம்பறித்துதிர்க்கவனுறாகாறறுவைப்புண்டவெங்கும். (௭௬)

இடவியவாவியோடையெனப்படும்புக்கினீத்துத்
தடநெடுஞ்சாலிமேயசெறுவெனுந்துச்சில்சார்ந்த
மடமையாலிருகோணட்டுமற்றிருகாலப்பூவும்
படரடைந்தொழிந்தயாக்குமொதுக்கிடம்பண்பதன்றே. (௭௭)

பிடிநடையுழத்திமார்கள்பிறங்குகண்ணிலத்துவேந்தற்
கொடிதவில்செல்வமெல்லாமொழியமுன்செய்தநிந்த
கடிமலவொன்றேயென்றுகமலங்களனைத்துங்கொன்றார்
படியமற்றனுசார்பூவும்பாற்றினார்விடுவார்கொல்லோ.

விளைநலத்துழத்திமாதர்விரிசெழுங்கமலப்போதுங்
களைகெழுகுவளைப்போதுங்கைரவப்போதுமற்றை
வளையியல்கொடியுமஞ்சைவலங்களுநணிமுயன்று
தளைவிடப்புரிந்தாரல்லாரொனும்பெயரவர்க்கேசாலும். (௭௯)

நிலம்வெளிவழிச்செலுத்திநெடும்புரஞ்செற்றபெம்மான்
பலவகைதடிந்துசின்னம்பண்புறுமெய்ப்பூண்டாங்குச்
சிலமலர்குழலில்வேய்ந்தார்சிலமலர்கையிறகொண்டார்
சலமலிபண்ணைநீங்கித்தாமமரிருக்கைபுக்கார். (௮0)

களையொருங்கறுதலோடுவுகருநிறங்கொடுசெஞ்சாலி
விளைபயிர்காமமாதிமேவுறுத்தவதநீங்கி
வளைமதிமுடியான்பாதமலரடைந்தவர்கைத்தானத்
தளைபயன்கிளைத்தல்போலொனறனநதமாயகிளைததபண்ணை. (௮௧)

மனக்கினிதாயபூக்கண்மடிதரறகேதுவாஞ்சொ
லினக்குமேலெழறீாபபாமெனறெண்ணிவெங்கலியைநாளுஞ்
சினக்குமறறவைசூறகொண்டுவெளிவிடறெரிநதுமேனமேற
கனக்குமர்செயதநிநதுகதிர்கவிழ்த்ததுநீாதெவவி. (௮௨)

பதடியொனறேனுமின்றிபபழுத்தசெஞ்சாலிநோக்கி
மதவலிமள்ளாயாரும்வேதினமங்கைவாங்கி
முதலரிநதவணிவீழ்த்திமுதுசுமையாகயாததுச்
சுதமில்வண்களததுத்ததததலைமிசைசுமநதுசேர்ப்பார. (௮௩)

போற்றுசெஞ்சாலிபல்லபொன்மலையெனப்போர்செயறந
தோற்றுவெண்சாலிவெளளிக்கிரியெனதொகுபோரசெயது
மாற்றுபல்குறியுஞ்செயவாரடுகடாபலபிணைத்து
வீற்றுவீறருகவப்போர்தள்ளுபுமிதிக்கவிட்டார். (௮௪)

உழுதவர்நாளிலிந்நாளுவகைசெய்நன்றுளென்று
முழுவலியொருத்தலெல்லாமுதுகளஞ்சூழும்போது
கொழுவுவைவாயிற்கவ்விக்குதட்டுபுநணிமுயன்று
தழுவியபலாலநினறம்பிரிததனசாலிமுறறும. (௮௫)

சொற்றவையுதறிப்போக்கித்தூற்றிநெற்குவித்தளநது
கற்றவனமறையோர்முன்னுக்களச்செலவொருங்குசெய்து
கொறறவனுறிலொன்றுகொளக்கொடுத்தெச்சம்வாரி
முற்றவுமனைக்கணுய்ப்பார்முழக்கம்விண்செவிடுசெய்யும். (௮௬)

அரிசனஞ்செறியுமிஞ்சிவாதியவகழ்கின்றாரும்
விரிதலைக்கரும்புவெட்டியுடைத்தலைமேற்கொள்வாரு
மரிதரப்பாகுசெய்துகட்டிகளியைக்கின்றாரும்
ரியலைத்தேமாவாதிப்பூங்கனிகொள்கினறாரும். (௮௭)

கனீன்றதாற்றுப்பழம்பலகவர்கின்றாரும்
செய்நல்லாரோடுபுதுப்புனலாடுவாரு
யகிழத்திமார்தழூடலையுணர்த்துவாரு
யநகரெங்குமொயத்துளாரிடையருமே. (௮௮)

மன்னியவாரூர்நல்லம்வாஞ்சியமிழலையம்பர்
பன்னியபுகழ்க்கோமுததிபகரிடைமருதுநாரூ
மின்னியகுடந்தையையாறுயர்வளமிகுமாயூரந்
துன்னியபிறவுங்கொண்டமருதம்போற்றூயதுண்டே. (௯)

நெய்தல்.

வாய்ந்தவிண்ணுலகங்காக்கும்வள்ளலாயிரங்கண்கொண்ட
தேயந்தபல்வளமுநோக்கற்கெனப்பொலிமருதவைப்பி
னுய்ந்தசில்வளமுஞ்சொறறுமல்லம்யாமலாப்பூம்புனலை
தோய்நதபைங்கானநெய்தற்றெருகுவளஞ்சிறிதுசொல்வாம். (௧0)

வலிகெழுசுறவுகைக்கும்வருணனூற்புரக்கப்பட்ட
பொலிவுடையதுநீர்நெய்யிறபொலியழறகுண்டமாகி
மெலிவில்பல்பரதவர்க்கூண்விளைநிலமாகியோவாக்
கலியமைகடல்விராயகருங்கழிநெய்தல்வைப்பு. (௧௧)

மணிகளும்பொன்னுமாயமாண்பெருஞ்செல்வமேவிக்
கனிதமிலபெருமைவாயநதகடறகுவாபுலாலெனறுநா
தணிவரும்பழியிரண்டுநதபுததலிறபுகழாமெனறே
யணிகொள்புன்னாகமாதியலர்நதுதேனூறம்வீசும். (௧௨)

ஒருதினமுதல்வன்பாறபொய்யொனறுரைதோடீங்க
வருதினமெல்லாங்கைதைவருதிலாழூழ்காநிறகும்
கருதிதுகண்டுநதீராகனாயாபொயயெனறுஞாலத்
துருவினனொனனிறநீக்குமுபாயமெனனுணாநதார்கொல்லோ. (௧௩)

கூடியபவளக்காட்டிற்கூன்வளையூர்நதுசேற
லாடியபெருமானவேணியணிபிறைநவழ்தலேய்க்கு
நீடியவல்லியொனறுநிறகமீனசுறறுநறுளளல்
வாடியமருஙகுறகூத்திவாளாட்டுவிஞ்ஞேதநதேற்றும். (௧௪)

வடுவகிரனையவுண்கணவலைசசியர்மீன்பிளத்த
றொடுகடலுப்புமாட்டலுணக்கலசூழ்தருபுளளோப்பல்
விடுதல்செயதிடலானுணடாமேனியிறபுலவுநாறறந
கெடுவகையனையனாம்பாறகேதகைவாசம்வீசும். (௧௫)

கலத்துநினறிழியும்வேழங்கருநிறங்கெழுபுன்ன
நலத்தறல்குடித்தமேகநாடிவேறறியவேணடி
னிலத்தியைநடையாலெனறுநிலைகொடுநிறறலான்மேல்
வலத்துறவெழலாலன்றிமறறென்றுல்றியலாகா. (௧௬)

உறுதிமில்விடுக்குமோதையுமணருப்பளக்குமோதை
பெறுவலைவீசுமோதைபெறறமீன்கவருமோதை
மறுகுநீர்குளிக்குமோதைவளைபலபோழுமோதை
யிறுபன்மீனீர்க்குமோதையெழுகடலுடைக்குமோதை.

இழிபொருளுயர்வுசார்நதாலுயர்பொருளிழிவுசார்ந்தாற்
கெழியதன்குணமாமென்றேகிளத்தன்மெய்புலவுசார்நத
கழிநறுநீலைகதீயபுலானாறுங்கழிபுலான்மீன்
கொழிநறுநீலஞ்சார்நதுமலர்நாறுங்குணமீக்கொண்டே.

போதலிலாகூழுள்ளார்பொருண்முயன்றீட்டுங்காலே
கோதலிலாதுமந்தப்பொருளுறனுவலக்கேட்டோங்
காதலினுவாயுந்திக்கணக்கில்லமீன்குவிக்கும்போதே
யாதலுண்டாகத்துள்ளியாவயின்விழுவபன்மீன். (கக)

இடைநின்றுமெழுந்தமாலிற்கிளர்சரும்புன்னேநிற்குந்
தடையின்றிப்பவளவல்லிதழுவன்மாத்தழுவனோரு
முடையபொன்றழுவவம்மானகையொருங்குற்றுலென்ன
மிடைதருகுழைமுகத்துவெள்ளியவரும்புதோனறும். (க00)

வலேமடமகளிர்காயுமயிலேமுற்சாரவொட்டா
தலேபுரிகுவராறுமாவயினகலாபுட்டங்
கொலேபுரிமதனேவாயகொழுமலருண்டுமன்னர்
தலேயமைபோருண்டென்னுந்தன்மையுட்டெரிந்ததொத்தே. (க0க)

முடிவலேயெடுத்துவீசிமொய்த்தமீன்பலவுங்கொல்லுங்
குடிகளையிழிந்தவென்றுகூறுதற்கஞ்சுகின்று
முடிவலேயெடுத்துவீசிமொய்த்தமீன்பலவுங்கொன்றே
யடியரிலொருவராயவதிபத்தர்பெருமையெண்ணி. (க0உ)

மறையெலாமருச்சித்தேத்தவள்ளலாரமரும்வைப்பு
மறையுமோர்தவத்தினேக்காயத்தாரோகணித்து
முறையருள்செயதுநாளுமுதல்வனாரமரும்வைப்பு
நிறைதருதவத்தந்தநெய்தலோமறறுமொன்றே. (க0ங)

மயற்பகையனைத்தும்வென்றுமாதவத்துயர்ந்தோரும
வியற்பகையென்னும்வள்ளலெம்பெருமானேக்கண்டு
செயற்படுமொருசாய்க்காடுபல்லவனீசஞ்சேர்ந்த
தயற்படுநிலமோநெய்தலெனிலதன்றவஞ்சற்றுமோ. (க0ச)

பாலே.

வளமலிமுல்லேவாயின்மயேந்திரப்பள்ளிமுன்று
வளவறுதலங்கடன்னுளடக்கிமற்றளவினமேன்மை
யுளதெனவெவருங்கூறவுறுநெய்தல்வளமென்சொற்றும்
பளகறுபுலமைவாய்ந்தீர்பாலேயின்வளமுஞ்சொல்வாம். (க0ரு)

வேறு.

சொற்றநானிலவெல்லேயுட்சண்டலாயொதுங்கப்
பெற்றதெந்நிலமந்நிலம்பெருமுதுவேனி
லுற்றநண்பகற்பாலேயென்றொருபெயர்பூணுங்
கொற்றமேவுறக்காத்தினிதோம்புவாள்கொற்றி. (க0சு)

நீரிலாநிலமாயினும்வேம்புகணிரம்பிச்
சீரிலார்தருநிழற்றருமீந்துகடைதந்து
பேரிலாப்பசிபோர்தருகனிதருநெல்லி
யோரின்வாய்ப்புனலூறச்செயுமினப்புகழுதவே. (க0எ)

எந்நிலத்தருந்தோல்வியையெண்ணுநரல்லர்
தன்னிலத்தமர்ந்தென்பயனெனவதைநண்ணி
யந்நிலத்தமர்கொற்றிதனடிதொழுதந்த
மெந்நிலத்தமர்பூக்கோளினினியெவன்வேண்டும். (க0அ

## திருநாட்டுப்படலம்.

மன்னுபல்பரன்முரம்பினைவரையெனவாங்குத்
துன்னுநிம்பவண்கனிசிவக்குறியெனத்துணிந்து
பன்னுபல்கழுகளாவுவவாரணப்பறம்பின் *
மின்னுசோதியைச்சூழ்கழுகடைவதுவிழைந்தே. (௧0௯)

ஒல்லுமிந்நிலம்பயனிலதாகுமென்றுரைப்பார
புல்லுமற்றதனுண்மையைப்புந்தியுட்குறியார்
சொல்லுமெந்நிலத்துள்ளதாலிந்நிலந்துறைந்த
கல்லுநல்லுணவாயுயிரோம்புதல்கருதின். (௧௧0)

பரவுகோங்கஙகளெங்கணுமுருத்தமெனபஞ்சு
விரவுதன்மையானடப்பவரந்நிலமிதியார
கரவுதீாதரகோதலுமிலவொணிற்கரையு
முரவுசாலவர்சுரநிலத்தவரொனலொக்கும். (௧௧௧)

### திணை மயக்கம்.

செற்றமார்மறத்துவலை * யார்குரம்பைகள்செறியக்
கொற்றமேவியகொற்றிவாழ்கோட்டமுட்கொண்டாங்
குற்றயாவர்க்குங்கூடுமாறருள்சுரத்துறுசீர்
சொற்றனம்மினித்திணைமயக்கமுஞ்சிலசொல்வாம். (௧௧௨)

வரையகம்பொலியொருதருத்தேத்தடைவழியும்
புரையிலினமதுப்பொதுவியர்பாறகலததேற்ப
விரைசெய்கானவான்பான்மதுக்கலம்விழைநதேற்பா
ருரைசெயுங்கொடிச்சியர்பரிவருத்தனையுன்னி. (௧௧௩)

கானவேறுபுறநினைக் * குதாநதெழக்கடைகழனிபு
தானவான்பகடடிகொடுதரையினைவெட்டு
ஞானநாயகனூர்திகண்டொருநமனூர்தி
யானதஞ்சிமண்புகமுயனறிமிதிறனமையும. (௧௧௪)

நல்லநீர்வயனின்றெழுவயலைமாநரலைப்
புல்லெனனீரளாமுவாயபுனனின்றெழுபவள
மெலலவநதுசெயநல்லநீரளாமிருவினையா
லொல்லைமேனமையுங்கீழ்மையுமாறுறுமுயிரபோல் (௧௧௫)

குன்றமேவியவிறவுளர்சிறுமகார்குழுமி
வென்றவெம்புலித்தோலுகிர்பறித்தனர்வீச
வொனறநெய்தலங்குழமகாாஞாழலொள்ளரும்பு
நன்றவாவுபுபறித்தெதிர்வீசினர்நகுவாா. (௧௧௬)

கரியகுன்றமர்பசுமயிலாலுதல்கண்டு
பிரியமேயகானகதனுவானகோழிபேருலகந
தெரியவாடுவபறபலகலைகளுநதெளிநத
வரியர்போனறுபுன்கவிஞரும்பயிலுமத்திறம்போல். (௧௧௭)

குரவுதாங்கியபாவைக்கான்பால்வநங்கொடுக்கும்
விரவுவாரிமுத்தெறிதரும்பணைகழைவீசு
முரவுமால்வரைபொன்மணிமுதலியவுதவும்
பரவுபாவையென்றுற்கொடார்பாரிடத்தெவரோ. (௧௧௮)

---

* குதர்தல் சிதறுதல்.
* உவலை - ஓட்டை.
* ஆரணப்பறம்பு - வேதாசலம்.

நலமலிந்தவிவ்வளங்கெழுசோழநன்னாட்டு
வலமலிந்தபல்குடிகளுந்தமக்குரிமரபிற
புலமலிந்தநல்லொழுக்கமன்பமைதரப்பொருந்திப்
பலமலிந்தவான்றிருவொடும்பொலிவபனனூளும். (ககக)

பொன்னுநேர்தராப்புலவாபல்லோர்களும்புகழ
மன்னுநீர்வளநாட்டின்வான்சிறப்புறச்சொலவான
முன்னுமாசைமற்றொருவிதந்தணிதரமொழிந்தாந
துன்னுமேன்மைமாயூரத்தின்வளஞ்சிலசொல்வாம். (கஉ0)

திருநாட்டுப்படலமுற்றிறறு.

ஆ திருவிருத்தம். கருரு.

# திருநகரப்படலம்.

பாங்குசேர்தவமுடையரோவசித்திடுபண்பாற்
றூங்குவார்சடைப்பிரானுமையொடுமமாதகவால்
வீங்குபேரொளியாலழியாதமாவிறலா
லோங்குவானசிவலோகமேகௌரிமாயூரம். (க)

சொற்றபல்வகைநூலுந்தன்பானின்றுதோனறப்
பெற்றமேன்மையாற்பரன் * அகப்பொருளெனபபெறறு
மற்றவானவர்புறப்பொருளெனக்கொணடமாண்பா
லுறறமாமறைபோல்வதுகௌரிமாயூரம். (உ)

கரியமான்மகன்கண்டபன்னகரநதுளொன்றே
லரியவாமலர்த்தூயவன்வழிபடறகாமோ
பிரியமேவவெம்பிரான்புரிநகரெனல்பெறறு
மூரியநான்மறைமுழக்கருக்கௌரிமாயூரம். (ங)

மருவுமெண்டிசைப்பால கண்மலரவனமாயன
பொருவுதீர்தருமொவவொருபதமுறப்போறறந
திருவொடுந்தருவள்ளலாசெறிதிருநகரோ
லுருவமற்றுமொன்றொப்பதோகௌரிமாயூரம். (௪)

முத்தவாணகைச்செய்யவாயரம்பையர்மொயத்த
சுத்தமாநகராயதொல்வானகரொனறும்
* அத்தமாநகரொன்றெடுத்தியாவருமறைதற்
கொத்தவேதுவாமுழுநகர்கௌரிமாயூரம். (ரு)

தேனவாங்குழலஞ்சநாயகியொடுதெய்வ
வானநாயகர்வள்ளலார்மருவுமாயூர
மானமோவுபேரொளிகோடுவயங்கலால்வானத்
தானமாநகர் * நிசிநகரெனச்சொல்வர்சான்றோர். (சா)

---

* அகப்பொருள் - அகநகரத்துப்பொருள்.
* அத்தமாநகரம் - பெரியபாதிநகரம் எனவும், பெரியபொன்னகரம் என கொளக.
* நிசிநகர் பொன்னகர் எனவும், இருணகர் எனவுங்கொள்க.

வளைமூன் றாகியநால்வகைநிலவளமதித்தே
புளையிலாநிலஞ்சுரநிலமெனப்புகல்வதுபோ
லுளைசெய்மேன்மைமாயூரநான்கெல்லையுளோர்க்கே
களைவர்வானகர்சுரநகரெனப்பலகற்றோர். (௭)

பரித்தபல்வளக்கௌரிமாயூரமிப்பாரோ
யுரித்தவாயுறைவதற்கெனவுறையவும்வறுநீ
விரித்தமேலென்பூலமர்வதென்னெனமதிமிளிர்வான்
சிரித்ததாரும்பொன்னகரினைத்தாரகைச்செறிவு. (௮)

விரிதரும்புகழ்க்கௌரிமாயூரத்துவிளங்கும
பரிகள்குஞ்சரமபசுநிதிதருமணிபல்ல
தெரியுமிவ்வளமைதராச்சிறியபுன்னகளைப்
பிரியமிக்கதற்கொபபெனவெவர்சொல்லப்பெட்பார. (௯)

அளகையெனபதுமிகுபொருளுடையதேயானும்
பளகறப்பருத்தீதராமையினுவாபபரவை
தளர்விலாநிதிபடைத்தமாயூரஞ்சார்ந்தோர்கரு
வளநிலாவுறங்கொடுத்தலாலவயங்குபாற்புணரி. (௧௦)

வேறு.

அனபினையருள்சூழ்ந்தென்னவருளினையமலச்சோதி
வன்புறமபடிசூழ்நதென்னமயிலாடுதுறையெனறோது
மினபுகழ்மாயூரதனைதயெற்றைக்குஞ்சூழாநிறகும்
பொன்புலமெனக்கொண்டார்கருநிழலசெயும்பொஙகர்ச்சோலை. (௧௧)

தெருள்வளரருளைச்சூழ்நதசிவப்பிரகாசதனூடே
பெருருள்வளரிடையருதவானந்தம்பொலியுமாபோ
லருள்வளர்மயிலைசூழ்ந்தவநதளிர்ப்பொழிலினூடே
கருள்வளர்கலிதீர்செஞ்சொறகாமருகழனிமல்கும. (௧௨)

வயலகம்பொலியாநின்றவான்சமைக்கருபபய்காட்டோ
உயலமர்தருவிற்றேமாங்கனிவநம ராவுநதன்மை
யியல்வளாகாழிஞானசம்பநதவிளவேறறோடு
மயறவிர்ஞானவாய்மைவாகீசாகலநததொக்கும். (௧௩)

கரியபுன்றாநகிறறணிற்கினறவடுகறகாட்டுந
தெரியுமுக்கிளைக்கோடொன்றுதிருக்கையிறசூலஙகாட்டும்
புரிதரவருகுவெள்ளைமுழுமதிபொருந்தமேவ
லரியமற்றொருகைமேயவயனறலைமண்டைகாட்டும். (௧௪)

மதுவுசக்குழிந்ததேத்துவாழைமாங்கனிகள்சேரப்
புதுமணங்கொழிக்குமற்றைறக்கனிகளும்பொருந்துங்காட்சி
முதுபுகழ்ச்சிவத்தானத்துக்கவுணியமுதல்வாகீசர்
கதுமெனப்புகுதச்சூழுமடியரோகடுக்குமன்றே. (௧௫)

களையமர்கதலினீன்றகாமர்பாசிலைமேல்வீழ்ந்து
வளையுறைதவிர்செஞ்சாலிக்கதிர்பலவருடுந்தோற்றம்
புளைசெய்மேற்போர்வைநீத்துப்போறறுதண்டுலமாய்ச்சோறு
யுளைகெழப்பின்புமேவுமுரிமைமுன்னுறுதல்போலும், (௧௬

மயிலியலென்றுகூறும்வழக்கறமயிலேயாய
குயின்மொழியுமையாள்பூசைகுயிற்றியதானமென்று
வெயினிலவாகுஞ்சோலைவிரிமலர்க்கொம்பர்தோறும்
பயினடமியற்றுநிற்கும்பசுந்தழைத்தோகைமஞ்ஞை. (௧௭)

சோலைசூழோடைதோறுந்தொடுபுனற்பட்டந்தோறு
மாலைவாய்மலர்செவ்வாம்பன்மலர்பலசெறிந்துதோன்று
லாலைசூழ்திருவாரூரினமிநந்தியடிகணீர்மேற்
பாலையார்பற்பதீபம்பரப்பியகாட்சிமானும். (௧௮)

நால்வகைமலரும்பூத்தநந்தனவனங்கடோறு
மோல்வகையொழியாவண்டொருங்குறவலைக்குங்காட்
நூல்வகைமுழங்குந்தேவர்நூனந்திர்ந்தமர்தேமென்று
மால்வகையவுணர்பல்லோர்வந்துவந்தடைதல்போலும். (௧௯)

புறநகர்.

கலைபுகல்வளஞ்சான்மேன்மைக்களரிமாயூரச்சீர்த்தி
யலைவரும்பொதுமைதன்னிலறைந்தனஞ்சில்லவப்பா
னிலைபுறமிடையுள்ளென்றுநிகழ்த்திடுநகரமூன்று
ளிலைவறுபுறமென்றோதுநகர்வளஞ்சிலவுரைப்பாம். (௨௦)

உம்பராதியர்பல்லோர்க்குமூறுதீர்வலியேரம்பத்
தம்பிரானடைந்ததெங்களூறுப்பொன்றன்சார்பாலென்னிற்
பம்புபல்லூறுப்புஞ்சேர்ந்தவெம்வலிபகர்வார்யாரொன்
றிம்பரையுணர்த்தியாங்காங்கியங்குவவெண்ணில்யானை (௨௧)

தளைமுதலெட்டுமாயதம்பிரான்மேனிமுற்றும்
புளைதபமறைத்ததொன்றுபோர்த்தியதோலேயென்னிற்
களைசெயெம்முடம்பின்பாழிகணக்கிடப்படுமோவென்று
வளையுறமுழங்கியென்னமுழங்குவமதமால்யானை. (௨௨)

கறையடியென்றுந்தந்தாவளமென்றுங்கரியென்றும்பா
ரறைதருநால்வாயென்றுமவிர்புகர்முகமதென்று
மிறையிலொவ்வோருறுப்பான்மிகுதியும்பெயர்பெற்றேம்யாங்
குறையுளபிறவென்றெள்ளுங்குஞ்சரமனந்தமாங்கண். (௨௩)

எங்கடந்தலையிற்கோடொன்றில்லதையெய்தப்பெற்ற
திங்களஞ்சடையான்றுளிற்றிறனரமடங்கற்சென்னி
பங்கமுற்றொழியத்தாழும்படிகண்டுமரிதெவ்வென்பார்
தங்களொள்ளறிவென்னென்றுதந்தத்தான்கைக்கும்வேழம். (௨௪)

மருவலர்மருமம்போழுமருப்பினமகுடச்சென்னி
திருகுறுங்கரத்தயாக்கைசிதைதரத்தேய்க்குந்தாள
வெருவருமுகிலுமஞ்சுமுழக்கினவென்றிகோட
லொருவருமதமால்யானைவாரிகளுலப்பிலாத. (௨௫)

அரிவிறலுருவங்கொண்டவரியெனப்படுமோர்தேவும்
விரிதருமீற்றிலெங்களுருக்கொளல்வேண்டுமென்னிற்
புரியுமெம்முருவச்சீர்த்திபுகலுதற்கடங்காதென்று
தெரிதரமுழங்கல்போலச்சிலைத்தனதிரிவபாய்மா. (௨௬)

எங்கணின்குகூடியிமையவர்கூட்டத்தோடு
துங்கவெண்கயிலைமேயசோதியைப்புவிமேலேற்றிய
பொங்கமுன்னீர்த்தவென்பார்புகழதன்றென்றேசாலு
மங்கதுதெரிவார்யாரொன்றியம்பலினர்க்கும்வாசி. (௨௭)

மறைமொழியந்தணாளர்வழாதுமுப்பொழுதுஞ்செய்யு
நிறைபெருஞ்சகாயத்தாலேநிகழுமோராழிபூண்ட
பொறையிலாவொருதேரீர்த்துப்போமெழுபரிகளிவ்வூர்க்
குறைவிலாவொன்றேயீர்க்குஞ்சகாயமுங்குறிக்கொள்ளாதே. (௨௮)

ஆயதம்முருவங்கொள்ளுமலங்கலந்துளபமாயோன்
மேயநன்மனையாளென்னுமெய்யுளத்துணர்ந்ததேயோ
பாயபல்புரவியெல்லாம்பார்வடுப்படுமென்றஞ்சித்
தோயவுந்தோயாவாகவடியிடாத்துணைந்துசெல்லும். (௨௯)

செறுநர்தஞ்செம்பொன்மோலிச்சென்னிமேற்குரமழுத்து
மிறுதியினமயம்வந்தாலாழியோரேழுந்தாண்டும்
பெறுவதுவென்றியன்றிப்பெறறறியாதவென்று
மறுவறுவாசியாத்தமந்திரம்பல்லவாங்கண். (௩௦)

தளைகிழித்தேகுஞ்செய்யதாளும்விண்ணுலகமென்னும்
வளைகிழித்தேகுமம்பொற்சென்னியும்வாய்ந்தபொறறே
ருளைகிழித்தேகுஞ்சீர்த் * தீயுருவன்பூண்கரியவாசி
புளைகிழித்தேகும்வெள்ளைத்துவசாடிரண்டும்போலும். (௩௧)

தழுவியதளிரியற்குக்குழைந்தவன்பாதஞ்சார
வழுவியவச்சுவாய்ந்தசயநதனமாருநாணுண்
முழுகியாருறினுமச்சுமுறிதராவினையபொற்றே
றொழுகியசுமவாநிற்குந்தோற்றதற்குறுவதெனனே. (௩௨)

மறையெலாமெடுத்துக்கூறுமாதேவனேறும்பொற்றே
ரிறையிலோரவுணன்வெளவிக்கரப்பதற்கியைந்ததன்றே
நிறையொளியினையபொற்றேரதுபெருநிலைமையாலே
முறையின்மற்றதனோடொப்புமொழிதரல்குற்றமன்றோ. (௩௩)

விரைதரவீர்த்துச்செல்லும்வெம்பரிக்குழாத்தையோதும்
புரைதபுசயந்தனந்தான்றொடர்நததுபோகுங்காட்சி
யுரைமறைக்காட்டினின்றுமும்பர்நாதனைவாகீசா
திரைசெய்நீர்வளஞ்சால்வாய்மூர்சேர்தரத்தொடர்ந்ததேய்க்கும். (௩௪)

தரியலர்கூட்டமேவிற்றரைமிசைக்கிடத்தியேறி
விரிசுடர்மூளைநெய்த்தோர்பரந்திடமிகத்துவைக்கு
மரிமணிப்பொலந்தேருட்சொண்டலங்குயர்சாலைமேலாற்
றெரிதரவோராழித்தேர்முதலியதிரிவமாதோ. (௩௫)

விழித்தகண்ணிமைத்தல்செய்யார்வேலைதிர்வந்தபோதுங்
கொழித்தபொற்கழற்கால்பின்னர்வைத்திடார்கூற்றுற்றாலு
மழித்தபல்லூறுற்றாலும்பிடித்தவாளங்கைசோரா
ரிழித்தசொல்லடையுங்காலத்துயிர்ப்பொறையெய்தாவீரர். (௩௬)

---

* தீயுருவன், அக்கினி மலையாகிய சிவபெருமான்.

தரியலரம்புமார்புத்தையவாம்வடுக்களன்றி
யுரியபொற்கலங்கள்வேறென்றுவப்புறூர்தெவ்விலாமைப்
பெரியகண்டேதிதின்னப்பித்திற்றிரிவார்நேரிற்
சரியவென்றிடலாமென்றுதடம்புயம்வீங்கும்வீரர். (௩எ)

ஒருகையிற்பலகைமற்றையொருகையில்வடிவாடாங்கித்
திருகையுற்றமர்செய்வார்முற்செல்லுவரவர்பின்னிட்டாற்
பொருகைகொண்டமைக்குத்தம்மைப்புலந்துதாமேயிழிப்பார்
முருகையொப்பவரோரைந்துமுகமிலாக்குறையொன்றுண்டே. (௩அ)

இன்னபல்வீரர்வாழுமிருக்கையுமிவருக்கேவன்
மன்னநன்காற்றுவார்தம்வாழ்க்கையும்பரிமால்யானை
யுன்னதவிரதமற்றுமுள்ளவைதமக்குவேண்டு
மின்னகுபலவுமாற்றும்வினைஞர்தமிருப்பும்பல்ல. (௩௯)

## இடைநகர்.

அறநகவொன்றுபன்னூலறிந்தவரொடுத்துப்பேசுந்
திறநகராய்தீராச்செல்வஞ்சேர்மாயூரத்தின்
புறநகர்வளத்தென்சொற்றும்பொற்பொடுபொலிவுநாளு
முறநகராசாய்மன்னுமிடைநகருரைக்கலுற்றும். (௪0)

அளிவளர்கதுப்பினல்லாராடவரொடுங்குலாவு
மொளிவளர்மணிசெய்மாடமோங்கொளிபரப்பலாலே
களிவளர்கருப்புவில்லான்களிற்றிவர்ந்தேகல்செய்யா
னளிவளவொருதேரோறிச்சாளரநுழையுநாளும். (௪௧)

நன்னலங்கனிந்தமேனிநங்கையரிலக்கமாகக்
கன்னலஞ்சிலைபெய்வாளிக்சமலம்வாழ்வதனமுல்லை
பன்னலநறியநீலம்பார்வைகண்டனுகற்கஞ்சு
மின்னலமசோகமாம்பூவிரண்டுமஞ்சாதுமேவும். (௪௨)

மலையினும்பொலியுந்திண்டோண்மைந்தர்யாவரையும்வாங்குஞ்
சிலைநுதன்மடநலார்தந்திருமுகநினைப்புண்டாக்கும்
விலையில்வெண்ணகையேநாளுமிகுகிடைகாட்டுங்கண்ணே
கொலைசெயுமென்னிற்காமன்கொடுங்கணைமிகையாமன்றே. (௪௩)

மேலுயரிந்துகாந்தவெண்ணிலாமுற்றத்திட்ட
காலுயர்பரியங்கத்திற்கண்டுயின்மாதர்மைந்தர்
பாலுயர்மதியந்தோன்றப்பொழிந்தநீர்பரத்தலாலே
சேலுயர்கடலிற்றுஞ்சுந்திருவொடுமாயனொத்தார். (௪௪)

வெள்ளியவிந்துகாந்தவெண்ணிலாமுற்றநாப்ப
ணுள்ளியவாடலாற்றியணிமிசையுறங்குநல்லார்
வள்ளியமதிகண்டாங்குவண்புனல்பெருகலாலே
துள்ளியகடலிற்பற்பறுகிர்க்கொடிப்படர்ச்சிபோன்றார். (௪௫)

வானுயர்மாடமேலாற்றுகிற்கொடிவயங்கல்கண்ட
மீனுயர்கடல்வைப்போர்வான்றேனுரிவிதமென்னென்பார்
கானுயர்கற்புநாட்டார்கண்டுமண்முளைத்தெழுந்து
தானுயர்தருவின்பாலோர்தளிருறும்பெயர்யாதென்பார். (௪௬)

மேலுயர்செம்பொன்மாடவெண்ணிலாமுற்றஞ்சார்ந்த
பாலுயர்மொழியாரொட்டிக்கற்பகப்பழம்பறிப்பார்
மாலுயர்வானநாட்டுமாதர்சற்றேகுனிந்து
காலுயர்மனைப்பாற்றேமாங்கனிபலபறித்துவப்பார். (சஎ)

புயறவழ்மாடமேலாலரிசனமாதிபூசி
வியனெடுங்கண்ணார்மண்ணிவிடுபுனலனையதேத்துக்
கயலொழுகாற்றுவீழவதின்முழுகமரர்தாம்வே
றியன்மணமதித்தூடற்கலார்க்கிடைந்திரங்கிச்சோர்வார். (சஅ)

ஓங்குபொன்மாடமேலாலொள்ளிழைமடவார்கூட்டிப்
பாங்குசெய்மஞ்சளாடல்பயின்றிடவனையமஞ்சள்
வீங்குவாசனைசுலாவமெய்மணங்கமழ்வதோரார்
தேங்குவானரம்பையர்க்குச்செயற்கைவாசனையின்றென்பார். (சக)

கொழிசுவைத்தமிழ்நேரஞ்சொற்கோற்றொடிமடநல்லாரும்
பழிதபுமைந்தராரும்பயிலுபரிகையினமாட்டுக்
கெழியபனமடவார்போக்கல்செய்யவுங்கிளாந்தகுப்பை
கழிதரக்காணார்பஞ்சதருக்களைக்கனன்றுலைவரா. (ரு0)

வெள்ளியமுறுவற்செவ்வாயவிளங்கிழைமடநலார்சேர்
வள்ளியபொற்கீழ்மாடமண்ணுவபொன்னிநன்னீ
ரொள்ளியமணிச்சாலேகமுறந்தபொன்னொளிர்மேன்மாடந்
தெள்ளியபிறவுமண்ணுந்திருநதுவான்கங்கைநன்னீர். (ருக)

துன்னியசெம்பொன்மாடச்சோபானமாககஞ்செல்லின்
மன்னியசுவர்க்கலோகமருவுதற்சையமில்லை
மின்னியவவ்வாறேகாவிதமெவனெனவிளைவி
லுன்னியவஃதிவ்வூர்போற்சிறவாமையுணர்ந்தார்போலும். (ருஉ)

காரும்வாரறலுமஞ்சுங்கதுப்பினார்செல்வமாட
மேருவோடிகலிநின்றவிர்தமொத்துயர்ந்ததேனுஞ்
சாருநாள்கோளியங்கச்சாளரம்விடுத்தலாலே
யோருமோர்முனிகைசெய்வதொன்றுமின்றுயிற்றம்மா. (ருங)

வலிதருமைநதொல்லாமதனனேயென்றும்பொற்பார்
பொலிதருபரமன்மேலும்பூப்பலதூவுவாக
ளொலிதருநுதற்கணுக்காதொழிந்ததென்னெனவிளைவின்
மலிதருபூவைப்பூவென்றெண்ணுதல்வாய்ந்துளாரோ. (ருச)

பொருவில்வெண்சுதைசெய்மாடம்பொங்குபாற்கடலாமேலா
லொருவருமடநல்லாராங்குதித்தெழுஞ்செய்யாளொப்பார்
வெருவருமைந்தர்வேட்டுமேவியமாயோனொப்பார்
பருவரலில்லாப்பாலர்பசுங்கழைக்குமரனொப்பார். (ருரு)

நறுமலர்கட்டிமைந்தர்நகுமனக்கட்டவிழ்ப்பா
ருறுவகைநோக்கியன்னுரொன்றுநோக்காதுவெய்வா
ரிறுமருங்கலசக்கொங்கையெடுத்தவரொடுப்பொழிப்பார்
மறுவறநடந்தன்னார்நடையையொழித்திடுவர்மாதர். (ருசு)

கண்டத்தினழகைவெளவுங்களவறிந்தொறுத்தன்மானக்
கண்டொத்தமொழியார்கந்திக்கழுத்துறப்பாசம்பூட்டிக்
கண்டத்துகுழைகளாடக்காமர்பொன்னூசலாடக்
கண்டுற்றபுருடர்நெஞ்சுங்கலக்கமுற்றூசலாடும். (ருஎ)

வெயில்விடுமணிசெய்மாடமீமிசையநலாரை
மயிலெனவஞ்சியன்றேவானகத்திராகுகேதுப்
பயில்கதிர்மதியைநாளும்பறறல்செய்யாவாம்பற்ற
லயில்விழிமடவாரங்கணமர்தராக்காலத்தம்மா (ருஅ)

மாதரார்வதனங்கண்டம்வயங்கிருதிகளாக
வோதமுத்தாரக்கொங்கையுவக்கும்வெள்யானையாச
னோதகமருங்குல்கற்பக்கோடாகநுவலுமைநதர்
காதலிநதிரனபோலவார்மெய்க்கண்ணிலாக்குறையொனறுண்டே. (ருகூ)

முரிதிரைப்பரவையல்குன்முயங்குமந்தரம்போற்கொங்கை
வரியரவொருமருங்குல்வயங்குறுதாங்களெனறு
முரியவோடதிமடுத்திட்டுறுசுவையமுதங்கொணடு
தெரியவந்நகர்வாழ்மாந்தர்யாவருந்தேவரொத்தார். (சுய)

பெருகொளிமாடமேலாற்பிரசமென்கூந்தலோடு
முருகெழுமடநலாாதநதிருமுகத்துண்மைதேரா
கருமுகிலென்பதம்மாகலநிறைதருவீபத்தி
னருகமாநததுமறைத்தற்கஞ்சியதிறும்பூதெனபாா. (சுக)

செங்கயல்விழியாரொன்றுந்திருவளுருறுப்பேயென்றுந
தங்களுளுணராார்கனனிதவாச்சிலைகடகங்கும்பந
துங்கவண்மகரஞ்சிங்கமொவ்வொன்றேதுலங்குமிங்குப்
பங்கமில்பாரிற்பல்லவெனப்பகருவர்வாளுடர். (சுஉ)

வணக்கநன்குடையார்செல்வம்வாய்நதுமேலாவர்நாளும்
வணக்கமில்லவர்கீழாவாவறியராயெனறெரித்தாங்
கிணக்கவண்மூங்கின்மேல்கிழியைந்தயானத்துமேல்கொண
டிணக்கநன்குடையசெல்வரியங்குறுசிறப்புமல்கும. (சுங)

வடதிசைக்கிறையுநாணுமாப்பெருஞ்செல்வமுறறு
மிடமிகுமதைமதித்தலெனறுமில்லவொஞ்ஞான்றுந்
தடமுகிலாதிநாணுநதவாந்கொடையடைநதும்யார்க்கும
விடலிலரினியகூறல்விழையுமநநகரமாக்கள். (சுச)

பேரதிகாரத்தோடுபெருங்கண்ணோட்டமுநன்குள்ளாா
சாரருந்திறன்மையோடுதவாதவொப்புரவுமுள்ளார்
தேருமாசாரத்தோடுஞானமுஞ்சிறப்பவுள்ளார்
தீரரும்வளத்தாலோங்கிச்சிறக்குமந்நகர்வாழ்மாந்தர். (சுரு)

காவணமெங்குமிட்டுக்கரும்பொடுகதலியீாத்து
மாவணவிதானந்தூக்கிவயங்குபொற்றூடைகளோடு
பூவணத்தொடையுநாற்றிப்புதுப்புனலிறைத்துக்கைசெய்
தூவணியமவீதிஞுவர்க்கத்தைநரகஞ்செய்யும், (சுசு)

மங்கையர்பின்பான்முட்டுமைந்தர்கள்வடிவுவாய்ந்த
வங்கவர்முன்பான்முட்டுமவர்க்குளநாணுவார்க
டுங்கநன்மைந்தர்பின்பான்முட்டியதொடிக்கைநல்லார்
தங்கமற்றவர்முன்பான்முட்டவர்க்குளந்தநாண்கொள்வார். (சுஎ)

வரையகத்துள்ளயாவும்வயலகத்துள்ளயாவுந்
திரையகத்துள்ளயாவுஞ்செருத்தலான்குலங்கண்மல்கு
தரையகத்துள்ளயாவுந்தழைதலானியமவீதி
புரையறத்திணையோர்நான்கும்புக்கினிதமர்தல்போலும். (சுஅ)

மெல்லுவவொருபான்மல்கவிழுங்குவவொருபால்வீங்க
வொல்லுவபருகற்காயவுணுத்திறமொருபாலோங்கப்
புல்லுவபிறவுங்கொண்டுபொலிதருநியமவீதி
சொல்லுவபோகபூமித்தோற்றமேயனையதம்மா. (சுகூ)

உண்ணகர்.

மிடைதருமைந்தர்மாதர்வேட்டிலாம்விழவுமாறா
விடைநகர்வளத்திற்சில்லவியம்பவும்வல்லர்யாரோ
கடையுறலென்றுமில்லாக்காமருசிறப்புவாய்ப்புற்
றடையவிண்ணகருநாணுமுண்ணகரறையலுற்றாம். (எ0)

ஆசையின்மேலுமெய்தவள்ளலாரருள்வதெண்ணி
யோசையினுயர்பாலாழியொதுங்கிடநன்னீராழி
மாசையின்றாயமேன்மைவளம்பெறல்குறித்துச்சூழ்ந்தாங்
கேசையிலகிடங்குசூழுமகநகரிஞ்சிசூழ. (எக)

பாம்புரியெனவோர்நாமம்பகருவர்கிடங்கிற்கப்பேர்
நாம்புரியிதற்கேசாலுநாடுபல்பாம்புவாழ
வேம் * புரிவைப்பினுக்குமுரிமையின்மேவிச்சூழ்ந்து
தோம்புரிதெவ்வுமேவாவண்ணங்காப்பியற்றுஞ்சூழால். (எஉ)

எறிகளிறருகுமேவினுறப்புதைதொட்டீர்த்தல்செய்யா
தறியமாலாழியோடுமங்காந்துவிழுங்கவல்ல
செறிவலிக்கராங்கள்பல்லதிரிதருகிடங்குநன்னீர்
நெறியுயிர்திளையவாதாறகன்னியர்நிதம்பம்போலும். (எ௩)

தனையடைந்தவரையுள்ளேகொண்டுபின்வெளிச்சாராழ
வினைதரவொளிக்குங்குண்டுநீர்க்கிடங்கெந்தஞான்றுந்
தனையடைந்தவரையுள்ளேகொண்டுபின்வெளிச்சாராம
லினைதரவொளிக்குமெங்கணின்மலப்பிரானேதேரோம். (எச)

பெரும்புறக்கடலீதென்றுபெருங்கிடங்கரையுட்கொண்டு
விரும்புறமுகில்கள்வீழ்ந்துவிரிபுனனிறையவுண்டு
சுரும்புறமலருந்தாருச்சூழ்நேமிவரையீதென்று
தரும்புறமதின்மீதேறுந்தலையடையாதிளைக்கும். (எரு)

---

* வேம் - வெம்மை என்னும்பண்புப்பகுதியிலுள்ள எழுத்துக்கள் கெட்டுமுதனீண்டு, வருமெழுத்திற்கு இனவெழுத்துமிகுந்து, விருப்பமென்னும் பொருளைத் தந்தது.

அஞ்சனாயகியாரோடுமமர்ந்தளவிலாவுயிர்க்குந்
தஞ்சமேயாகயாவுந்தருமொருவள்ளலார்த
மஞ்சவாம்புகழேபோலவானகங்கிழித்தப்பாலும்
விஞ்சவேசென்றதம்மாவிறலுடைநொச்சியிஞ்சி. (௭௬)

பொறிபலவடக்கியோவாப்புண்ணியமுதல்விபாகப்
பறிநிகர்சடைப்பிரானைப்பரவுதன்னகத்தேகொண்டு
சிறிதசைவேனுமின்றித்திகழ்நிலையமைந்தவாறா
மறிவறநோற்றல்வன்மைமருவியயோகிபோலும். (௭௭)

கொடிபலசெறியநிற்குங்கோணைமாமதிற்கணென்பார்
படியின்மற்றுள்ளவாயபன்மதிலகத்துங்கண்டோ
நெடியவிம்மதிற்கட்காணேநிலவமேலுள்ளவேநான்
முடியபுட்பறந்தபோதுமுற்றுமோகாண்டலம்மா. (௭௮)

இம்மதில்சிறிதுகண்டவெமக்குநேமியங்குன்றென்னு
மம்மதில்காணவேண்டுமாசைசற்றேனுமில்லை
மும்மதில்புரிந்ததுன்பமுழுமையுமறக்குமாறிச்
செம்மதிலுயர்ந்துசென்றுதேவரூர்பலவுங்காக்கும். (௭௯)

கடக்கருமதிலோர்மூன்றுங்கடந்தசேவகனைத்தன்னு
ளடக்கியமதிலின்மேன்மையளப்பவொவரோவாயில்
விடற்கருமுயரஞ்சொல்லவேண்டுமோகோளுநாளும்
படற்கரும்பொன்செய்மேக்குப்படியுருகிழக்கேசெல்லும். (௮௦)

தம்மனமிதுபோற்கோணல்சமைந்ததென்றறிவிப்பார்போ
லம்மநல்யாழ்கைக்கொள்வாராயினுநவிலுமாற்றஞ்
செம்மையென்றறிவிப்பார்போற்றெள்விளியிசையெழுப்புங்
கொம்மைவெம்முலையார்சேரிகோலமார்துறக்கமேய்க்கும். (௮௧)

மின்னனார்கரங்குவிக்கமிளிர்சாமிகரங்குவிப்பார்
முன்னருமுத்தொன்றீயமுகநதுபற்பலமுத்தீவா
ரன்னர்நாணொன்றேதோற்கவனைத்தையுநதோற்பார்மைந்த
ரொன்னின்மற்றவரிலாபமெய்துநர்மண்மேலியாரோ. (௮௨)

மெய்வாய்கண்மூக்குக்காதாமைந்தற்கும்விடயமாகி
மைவாய்கண்மற்றைநல்லீரின்புசெய்வழக்குண்டேனுங்
கைவாய்மிக்குளபொன்முற்றுங்கவருபுவெறுமைசெய்து
பொய்வாய்நெஞ்சிவர்போல்யார்க்குந்துறவின்புழ்புணர்த்திடாரோ. (௮௩)

எத்துணையளித்தபோதுஞ்சாலுமென்றேமுருத
முத்தவெண்முறுவனல்லார்முதிரழற்பிரானேபோல்வா
ரத்தகுதிறலன்றேவனையருச்சிட்டநாளும்
வித்தகமறையோராதியாவரும்விருப்பிற்கோடல். (௮௪)

வாடுதலற்றசெற்றமணமலர்புனைதலானும்
பாடுதல்வாய்ந்தசூழும்படமுழக்குருமையானுங்
கூடுதலிரவேயென்றும்பகலென்றுங்கொளாமையானு
மூடுதல்வல்லமாதரரமடந்தையரோயொத்தார். (௮௫)

பொருவருவனப்புவாய்ந்தபுலோமசையிட்டி நூறு
வெருவறமுடித்துள்ளாரைவிருப்பொடுதழீஇயுயர்ந்தா
டுருபதன்மகளோராவர்த்தோய்நதுமேல்விழைநதுயர்ந்தா
டிருவனாரிவருமன்னர்செப்புதற்கிழிபொன்றுண்டோ. (அசு)

வெள்ளணிபுனைந்துளாருஞ்செவ்வணிவிழைந்துளாரு
மொள்ளணிமைந்தர்க்குற்றதுணர்த்துவானவிலைமினார்தந்
தெள்ளணிமறுகுலாவல்செழுங்கலைமகளுஞ்செல்வ
நள்ளணிமகளுமாங்குநயந்தனருலாவல்போலும். (அஎ)

ஆட்வர்மகளிர்நன்னீராட்லோர்ந்தகன்றநாளே
யேடவிழ்குழலார்பாற்பன்னிரண்டுநாளனுபவித்துக்
கூடலைவிரும்பிமைந்தர்புகுநாளாதலிற்குலாவு
நீடமைத்தோணல்லாருக்கொழிபுநாணேராதென்றும். (அஅ)

கயில்செறிகடகச்செங்கைக்கருங்குழலுமையைநீங்கி
யெயிலொருமூன்றுஞ்செற்றோனின்னும்யோகிருப்பானென்னின்
மயிலியல்பொழில்சுலாவுமயிலாடுதுறையின்மேய
வயில்விழிப்பொதுமின்னாருக்கொழிபுநாளமையுமன்றே. (அகூ)

அவையவக்குறைவிலாமையாரழகுடைமைவாய்ந்த
குவைமலர்க்குழலார்போகங்கூட்டுணல்வெறுத்துமைநதர்
செவையுறலூருந்தேருஞ்சிவிகையுமாவுஞ்செற்ற
கவைமனத்தஞ்சொலார்தமறுகியல்கழறப்போமோ. (கூ0)

அறைதருமேனைநீர்போலாதகம்புறமுஞ்சுத்தி
நிறைதருவிதஞ்செய்தெயவநீர்க்கங்காகுலத்தரொன்னு
முறைதருபுகழுக்கேறபமுயங்கிருசுத்தியும்பெற
றுறைதருபுகழ்வேளாளர்தெருவளமுரைக்கலுற்றும். (கூக)

புதியராயடைந்துள்ளாரைப்பொன்னியந்துறையிற்கோணன
மதிலிலாமுடியார்கோயில்வாயிலிறகாணல்போலப்
பொதிபசியொழித்துவேண்டும்பொருளகொளப்புகுதலாலே
நிதிபெறுபுகழ்வேளாளர்தெருத்தொறுங்காணலாமே. (கூஉ)

வருவிருந்தெதிர்கொண்டேற்றுமனமகிழ்முகத்திற்றேற்றி
யொருவரும்விருப்பமிக்கூறுணுப்பலவமைத்துக்கொண்டு
பெருகியமுகமனோடுபேணினரூட்டிப்பின்னு
மருகமர்நதவாவலுந்தேர்நதளித்துமிக்குவக்குநீரார். (கூங)

விண்ணவர்பிறர்பாலன்புசெய்யாதுவிடையோன்பாலே
யண்ணலம்புகழ்வேளாளரன்புசெய்திடுவதோர்ந்தா
நண்ணல்செய்கடல்கடைநதநாளடைந்தாரைவஞ்சித்
துண்ணல்செய்ததுமஃதாறறுதுண்டதுங்கண்டேயன்றே. (கூச)

இறைபடுசெந்நெலானும்யாவருஞ்செறிதலானு
முறைசெறிந்தவர்க்கப்போதேயிலம்பாடுமுடிதலானுங்
குறையில்பன்மரக்காலோடுகாவணங்குலவலானுங்
கறைதபுவேளாண்மாக்கடெருவவர்களமேபோலும். (கூரு)

அட்டிலினுலைநீர்ப்பெய்யவரிமதர்மழைக்கணல்லார்
மட்டிறண்டுலங்கலைந்துவடிக்குநீர்வயல்விளைக்கு
முட்டில்குய்ப்புகையெழுந்துவானமுழுமூடுமென்னிற்
கட்டின்மற்றனையார்செல்வப்பெருமையார்கணிக்கற்பாலார். (௯௬)

ஆன்றதம்பொருளேபோலவயலவர்பொருளுங்காண்பா
ரோன்றகாரியமின்றெனனிலிம்மியுஞ்செல்லவொண்ணார்
சான்றசீர்தூக்குங்கோலிற்றம்மைமுன்னிறுத்தல்வல்லார்
மான்றவுள்ளிலராய்வாழும்வணிகர்தந்தெருவும்பல்ல. (௯௭)

கொள்ளுநாட்கொளலவ்வாறுகொண்டபல்பண்டமுற்றுந
தள்ளுநாள்விடுத்தலின்னதன்மையிற்சற்றுங்குன்றா
ரள்ளுநாளுவத்தல்போலேயாவையுமயலார்கொள்ள
விள்ளுநாளுறுவாரன்னார்மேதகவெவருக்குண்டே. (௯௮)

அலர்கதிர்மணியுஞ்சந்துமகிலுமால்யானைக்கோடுங்
குலவுசெம்பொன்னுமுத்துங்கொழுஞ்சுவைத்தேனுமற்று
நிலவுபல்பொருளுஞ்சேர்ந்துநிரம்பலால்வணிகர்மாடம்
பலர்புகழ்வரையேயென்றுபாடுதற்கையமின்றே. (௯௯)

நகப்படுவணிகர்வீதிநாடொறுமரிப்பார்கையி
லகப்படுமணியுமுத்துமளகையர்வேந்தன்காதன்
முகப்படுமிளநலார்தமுலைமுகட்டில்லையென்னிற்
றகப்படுமகவான்வைப்பிலுண்டெனச்சாற்றுவார்யார். (௧00)

கறுத்துவந்தெதிர்த்தமாற்றார்கற்பகமாலைசூடப்
* பொறுத்துவண்டும்பைமாலைவண்டுகள்பலபொருந்த
வொறுத்தலான் * மீடராவண்டொன்றுயக்கும்வலிசால்வேந்த
ரிறுத்துவமானமோங்குமில்லம்வானத்துமோங்கும். (௧0௧)

பாதகம்புரிந்தாரேனும்பறந்தலையெதிர்ந்தாராகின்
மாதகவவர்க்காக்கிப்பொன் * வாளுடல்வழிமேற்போக்கி
ரோதகவொழிந்துவாழறுவன்றுசெய்வலிசால்வேந்தா
மாதகவுடையராகிமனுமுறைதழுவிவாழ்வார். (௧0௨)

அரிநடத்திடவல்லானையாளிநேர்புயத்தினேந்திக்
கரிநடத்திடவல்லாருங்கணிப்பருஞ்செண்டுபோகும்
பரிநடத்திடவல்லாரும்பார்கிழித்தேகுமாழிக்
கிரிநடத்திடவல்லாருங்கெழுவியதரசவீதி. (௧0௩)

மைவழிகருங்கட்செவ்வாய்வாணுதன்மடந்தைநல்லார்
கைவழிக்கண்ணுமந்தக்கண்வழிமனமுஞ்செல்ல
நைவழியில்லாத்தாளந்தண்ணுமையாதிநல்கோ
தைவழிநடிப்பநோக்கிச்சதமகனினுமின்பார்வார். (௧0௪)

---

* பொறுத்துவண்டும்பைமாலைவண்டுகள்பலபொருந்த, பலவண்டுகள் பொருந்தவளவியதும்பைமாலையைப் பொறுத்து, எனக் கொண்டுகூட்டாகப் பொருள் கொள்க * மீடராவண்டு - திரும்பாதபாணம்.

* பொன் - சூரியன்.

அழலுருவுடையதேவையருமறையுணர்த்தவாறே
யழலுருநாப்பணோக்கியம்புயத்தவனுமேத்த
வழலொருகரத்திற்றாங்கியரியநூலனைத்துந்தெள்ளி
யழல்சினமாதிநீத்தவந்தணர்மறுகுபல்ல. (க0ரு)

அறுதொழிலாளரென்றேயாவருஞ்சொலப்பட்டாரன்
பறுதொழிலாற்றுமொன்றுமாக்கமுமழிவுந்தம்வீ
யுறுமொருமொழியாலாற்றுமுரவினர்பலருங்காண
வுறுபசுக்கொலையேசெய்துமொருபழியேனும்பூணார். (க0சு)

தாவருமெழுநாச்செல்வன்சடசடமுழங்குமோதை
மேவரும்வானோர்தம்மையவியுணவிளிக்குமோதை
பாவரும்பணைமுழங்கப்பைம்புனலாடுமோதை
யேவரும்வியப்புக்கொள்ளவெழுகடலவிக்குமோதை. (க0எ)

பொன்னிரீராடியீரப்புடைவைதம்மரையிற்சூழ்ந்து
* துன்னியோவரியசெந்தியட்டிலைச்சுவையுணக்க
ளுன்னுமாதரவினுக்கியத்தியருண்ணவூட்டி
மன்னுபார்ப்பனமின்னாரால்விளங்குவமாடமெல்லாம். (க0அ)

கரம்பொலிபலாசத்தண்டுங்கரையரைமுஞ்சிநாணு
முரம்பொலிமான்றோல்சேர்த்தவொள்ளியபஞ்சிநூலுந்
திரம்பொலிசிகையும்பொற்பச்செறிதுகிற்செருக்குத்தூங்க
வரம்பொலிமறைநூல்கற்குமகார்கிடைவயங்குமெங்கும். (க0கூ)

காதேறுகலைநூல்வல்லகவுரிமாயூரப்பார்ப்பார்
மாதேவனுருவமன்றிமற்றையோருருவம்பாரார்
போதேயுமயனமாலாதிப்புலவரையழைத்தவாவின்
மீதேயுமூட்டவல்லார்மறுகணிவிளம்பப்போமோ. (கக0)

அண்ணலார்திருமுகங்களைந்தினுந்தோற்றமுற்றார்
கண்ணலார்பொதுச்சிறப்பாமறைகளாகமங்கள்கற்றார்
நண்ணலார்பரார்த்தத்தோடான்மார்த்தமுநயந்தர்ச்சிக்கு
மெண்ணலாராதிசைவரிருக்கையும்பல்லவாங்கண். (ககக)

எழுமதநிறுவியோரைந்திரண்டுகுற்றமுங்கடிந்து
தழுவியையிருவனப்புமுத்திசாற்றியவெணணான்கு
மொழுகுகாண்டிகைவிருத்தியுறுமுறைமாணாக்கர்க்குச்
செழுமையினியல்கேட்பிப்போர்கழகமுஞ்சிறக்குமாங்கு. (ககஉ)

கவியொருகவியினோடுங்கமகனோர்கமகனோடு
மவிதலில்சிறப்பின்வாதியுமைந்தவோர்வாதியோடும்
புவிபுகழ்வாக்கிமேன்மேற்பொலியுமோர்வாக்கியோடுஞ்
செவியுறவமர்ந்தளாவுங்கழகமுஞ்சிறக்குமாங்கண். (ககங)

அடைந்தவர்தரந்தெரிந்தாகமம்புகல்சமயமாதி
மிடைந்தமுத்தீக்கையாற்றி * நான்கினும்விராவவுய்த்துத்
தடைந்தவைம்பாசராக்கித்தனிமுதற்கலப்பாயின்பங்
குடைந்தவராகச்செய்யுங்குரவர்வாழிடமும்பல்ல. (ககச)

---

* துன்னியோவரியசெந்தியட்டிலை - செந்தீயோவரிய அட்டிலைத்துன்னி எனக்கொண்டுகூட்டாகப்பொருள்கொள்க.

* நான்கு சரியைமுதலிய நான்கு.

போதமுற்பலவுந்தேர்ந்துபொருந்துகாமாதிநீத்து
வாதமற்றொன்றுபத்தாமாண்பினிற்சிறந்தோராகி
நாதமிற்றிதுவென்றோராநலத்தசோதியிற்கலப்புற்
றேதமற்றிருக்குஞ்சைவமுனிவர்வாழிடமும்பல்ல. (௧௧௫)

தளவரும்பனையபொம்மறழல்வெதுப்புற்றபொன்னிற்
பிளவரும்பருப்புநெய்பால்பெருகுகுய்க்கருனையாதி
கொளவருங்கருப்புக்கட்டிகொழுஞ்சுவைக்கனிகண்மற்று
முளவரும்விரும்பச்செய்யுமுலப்பில்சத்திரங்களெங்கும். (௧௧௬)

இனனெழுமுனாநீர்தெவ்வியினநிறைநிறையவாக்கி
மனனமர்வேரும்பூவுமணமலிதுடியுமிட்டுக்
கனவிலிகுசத்தின்சாறுங்கலந்துமோரளாவிவாக்குஞ்
சினமகல்சுவைநீர்ப்பந்தர்தெருத்தொறுந்திகழ்வபல்ல. (௧௧௭)

மருவலர்துளபத்தண்டார்மணிமறுமார்பத்தண்ண
றிருமகளொடுவாழ்கினறசெய்யமந்திரமுமன்றொ
ஞெருவருங்கூற்றிற்றோன்றியுலகுபகாரமாய
வெருவருமும்பர்பல்லோர்மேவுமந்திரமும்பல்ல. (௧௧௮)

சிறுவிதிமகஞ்சிதைத்தசேவகன்வடுகப்புத்தே
டெறுதொழின்மகிடற்காய்ந்தாடிரிதலைச்சூலிசாத்த
னறுமுகப்பெருமானைங்கையமலன்மற்றிவர்முன்னோர்வாழ்
மறுவறுசெம்பொற்கோயில்வயங்குவவளவிலாத. (௧௧௯)

மண்மகண்மார்பினுக்குமாயூரமொருமதாணி
கண்ணுமற்றதிற்பதித்தகதிரமணியுரைத்தயாவுந்
தண்ணுறுசிறப்பார்நாப்பணுயகமணியேபோலும்
விண்ணவாபுகழநாளும்வள்ளலார்விளங்குங்கோயில். (௧௨0)

முனிதரப்பட்டமுனைமூவகைமதிலும்பின்றுட்
கனிதரத்தவமியற்றிக்கரிசிலாவுருவம்பெற்றுத்
தனிதரவமர்பிரானைததம்முட்கொண்டிருப்பபோலும்
பனிதரவெழுகொண்மூவும்பகர்மிர்நதுயர்நதசோக்கள். (௧௨௧)

மதில்வலியடக்கநாளும்வல்லவஞ்ஞனவையன்
றுதிபகவெழுநதுவானவருநடுக்குறப்போமிநத
மதிலடக்கெனச்சேவேவமற்றதுபலவாயேறி
மதியுறப்படுத்தமுத்தன்மானுமேவிடபக்கூட்டம். (௨௨௨)

பாலனென்றெண்ணுமெண்ணம்பரிகரித்திடச்சூர்முன்வேண்
மேலுயர்ந்தனனெனறியாரும்வியப்பர்யாம்வியக்கமாட்டேஞ்
சால்புயர்மாயூரப்பொற்றளியெதிர்க்கோபுரத்துக்
கோலமாருயர்ச்சிமேலாலுயர்ந்ததுமுண்டுகொல்லோ. (௧௨௩)

படிமுழுவதும்விற்றீலும்பற்றுதமணியிழைத்த
படிபலவுடையதாகிப்பல்லவாவீகளுமிந்தப்
படியுறவேண்டுமென்னப்பங்கயமாதிபூத்துப்
படிபுவர்க்கின்பஞ்செய்துபொலிதரும்பரவுதீர்த்தம். (௧௨௪)

பேறீவந்தருளுமுக்கட்பிரான்றிருமுன்னர்நின்று
நீறுவந்தவர்சார்தோறுநிறைபலமளிப்பதன்றி
வேறுபூவிலைகொடாருமிசையேற்றினோவானத்
தேறுவந்தளவளாவுமினத்தொடுமினஞ்சாராதோ. (௧௨௫)

பொன்மலைதவஞ்செய்தீன்றபுதல்விசெய்பூசைகாணப்
பன்மலையோடும்வந்துபார்த்தினிதமர்தன்மான
நன்மலைவில்லியஞ்சனாயகிசோமாக்கந்த
ரொன்மலைமற்றைவானோர்விமானங்களிலகாநிற்கும் (௧௨௬)

ஊம்மகனுழைந்தார்தண்டதரன்வாயினுழைந்தன்மாற்றி
விம்மனோயனைத்துந்தீர்த்துமிளிர்சிவலோகவாயில்
செம்மையினுழையச்செய்யுந்திகழ்திருவாயில்பல்ல
வம்மணியொளியானத்தமண்டத்தினபுறததாக்கும். (௧௨௭)

மயிலூருக்கொண்டவம்மைபூசனைமரபிற்கொண்ட
கயில்வளைக்குழையினார்க்குநிழல்செயுங்கவின்றதேமா
வெயில்படுதிறமுண்டேனும்விரிஞ்சன்மாலாதியார்க்குங்
குயின்மொழியரமாதர்க்குநிழல்செயுங்குணம்பூண்டன்றே. (௧௨௮)

பழிதபுமுமையாள்பூசைபண்ணியபெருமானுக்கு
வழிதருமதுக்கொண்டாட்டிவண்டளிர்நறும்பூச்சூட்டிக்
கொழிசுவைக்கனிகளூட்டிப்பூசிக்குங்குணத்தானன்றே
கழிதருவுள்ளூந்தான்மாமரமெனக்கவின்றதம்மா. (௧௨௯)

நிருத்தமண்டபம்விழாக்கணிரம்புமண்டபநன்காய
வருத்தமண்டபநதானோர்நூறாயிரமென்றுசொல்லப்
பெருத்தமண்டபஞ்சார்நதார்க்குப்பிரிவதற்கருமைசெய்யுந
திருத்தமண்டபமற்றியாவுஞ்செப்புதற்கடங்குங்கொல்லோ. (௧௩௦)

மன்னுதேவாரத்தோதைவயங்குவாசகத்தினோதை
பன்னுவனமறையினோதைபரவுமாகமத்தினோதை
துன்னுபல்புராணத்தோதையரவெனத்தொகுவாரோதை
யின்னுமற்றுள்ளவோதைதுயின்றிடாவெந்தஞான்றும். (௧௩௧)

அடைந்தவிண்ணோர்மண்ணோர்நன்கடியுறைவைத்துத்தாழ
மிடைந்தபன்மணிகளோர்பால்விளங்குபொற்கட்டியோர்பா
லிடைந்தசெம்பொற்காசோர்பாலிலங்குபட்டாதியோர்பாற்
கடைந்தசெப்பனையகொங்கைக்காரணிகோயில்வாயில். (௧௩௨)

வளையெழுமொலியும்பீலிவயிரெழுமொலியுஞ்சுட்ட
முளையெழுமொலியும்பற்பன்முரசெழுமொலியும்வீணைக்
கிளையெழுமொலியுந்தாளங்கிளர்ந்தெழுமொலியுமற்றைத்
துளையெழுமொலியுமாழித்தொக்கெழுமொலியைமாற்றும். (௧௩௩)

காலையிற்றரிசிப்பாருங்கைகுவித்துருகியுச்சி
வேலையிற்றரிசிப்பாரும்வீழ்ந்துவீழ்ந்திறைஞ்சிச்சூழ்ந்து
மாலையிற்றரிசிப்பாருநெருங்கலால்வானநாட்டுச்
சோலையிற்பயில்வார்காப்பார்தொழும்பதங்கிடைக்குங்காறும். (௧௩௪)

இன்னபொற்கோயிலுள்ளாலேழுலகொருங்குபெற்ற
வன்னமென்னடையாரெங்களஞ்சனாயகியாரோடும்
பொன்னமர்சடிலமோலிப்பொருவிலாவள்ளற்புத்தே
டன்னமர்கருணைபொங்கத்தானமர்ந்தரசுசெய்யும். (௧௩௫)

திருநகரப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம். ௨௧௦.

# நைமிசப்படலம்.

வரையினமிக்கவெள்வயிரமுஞ்சேயொளிமணியும்
விரைமிகுத்தசந்தகில்களும்வேழவெண்மருப்பு
திரையெடுத்தெறிசாரவித்திருநதியுநீசிக்
கரையணித்துளதேர்கிளர்நைமிசங்கானம். (௧)

நாட்டவல்லதுநற்றவம்பவஞ்சவாதனையை
வீட்டவல்லதுவெள்ளியங்கிரிப்பெருமானைக்
காட்டவல்லதுகழலரிதாம்பரபோக
மூட்டவல்லதுற்றோர்க்குயர்நைமிசக்கானம். (௨)

தரையினுள்ளதேயாயினுந்தரைக்குமேலுலகர்
விரையவந்துவந்தவியுணவிழைந்துகையேற்றுக்
கரையிலாமகிழ்பூத்திடவீகையிற்கதித்துப்
புரையிலாதுயர்ந்தோங்கிடுநைமிசப்புறவம். (௩)

எண்ணிலார்முயலினுங்கவரப்படாதிகலி
யெண்ணிலார்குழீஇயினும்வருத்தப்படாதென்று
மெண்ணிலாரும்வாழ்த்துதலன்றிவைதலெய்தாநா
லெண்ணிலார்நிறைந்தினிதமர்நைமிசாரணியம். (௪)

மற்பகப்பொலிவாகுவோரிந்திரனமேருட்
கற்பகத்தினைச்சீழ்கினுங்கடையெனவெறுத்துப
பொற்பகத்துயர்பொருள்கொளத்தன்னசம்புருமா
றற்பகத்துறவமைப்பதுநைமிசவடவி. (௫)

அரனருச்சனைசெயத்தளிரரட்டுமேலோட்டப்
பரவுதீங்கனிமகவிறசொண்குடம்பரிக்க
விரவுபைந்தழைமுனிவருக்குதவிவேளலர்க்கா
வரவுதீர்ந்தவப்பெய்துமத்தவத்தரின்மாக்கள (௬)

அரியசாக்கியர்தீயவேடமுநலைந்தமைவுந்
தெரியவுற்றெனக்கண்டகம்புறமெலாஞ்செறியப
பிரியமிக்கவின்றீஞ்சுளையசமெலாம்பெற்ற
பரியவண்கனிபற்பலசுமப்பனபலவே. (௭)

பூவினுந்தழையினுமிகப்பொலிந்ததல்லாது
மாவினும்பலவினுநனிகனியும்வன்கனிகண்
மேவினுங்கருவாற்கொலையுறுதலின்வெள்கிக்
காவினுந்தலைசாய்த்துநிற்பனபலகதலி. (௮)

அளவிலந்தணர்குழாங்குழாமாகியெவ்விடத்து
மளவின்மாதவமாற்றுமிவ்வடவியினமர்த
லளவின்மேன்மைமேன்மேலுமுண்டாமெனவறைந்தாங்
களவில்கண்மணியீன்றிடுதருக்களுமடர்வ. (௯)

எடுத்தநம்பிறப்பின்பயனிதனினுமென்னென்
றடுத்தவுண்மையையறிந்தனபோன்றுகாமாதி
விடுத்தயோகியர்கொளவவருறையுண்முன்மேன்மே
லடுத்தவிர்ந்தகண்மணிக்கனிசிந்துவவாவல். (க0)

இனியவல்லனவெனுமுழுவத்துமுள்ளியைத்தீ
கனியபல்லவுமுழுமராஞ்சிறிதலாற்கதிர்வித்
தனியமாக்கலிற்கொண்டபேரியையுமென்றறிஞ
ருனியவெங்கணுமோங்குபுநிற்பமுந்திரிகை. (கக)

நனிசிதைந்திடுங்கனிசிலவுறவி * முன்னனுகப்
புனிதநீங்கிடுங்கனிசிலவுகினவ்வைபோலா
தினியவூறிலபுனிதமென்றுறுவர்கையேற்பக்
கனிகள்பற்பலவுகுப்பனசெறிதருகபித்தம். (கஉ)

மாறுகொண்டவன்விடத்தைமுன்கனியெனவயக்கி
* யூறுதீர்ப்பவற்கூட்டிமுன்னொழிந்ததுபோலோ
வேறுசங்கையினூட்டலாமுய்யலாமென்னச்
சாறுபாய்கனிபலகொடுநிற்பனசம்பு. (கங)

பெயர்விலாயிரமுதற்பலகண்கள்பெற்றுரு
ஞுயர்வுமூன்றுகண்ணேயுடைப்பரம்பொருளொன்றே
யயர்வின்மற்றதுபோற்பலகட்டருவுள்ளு
மயர்வின்மூன்றுகணிதேயுயர்பெனத்தெங்குவயங்கும். (கச)

நாடுமாயவனின்றெனநிற்பபுன்னாகங்
கூடுபொன்னெனத்தழுவுவசோதியொண்கொடிபர
னீடுமுத்தசேயெனச்சொலநிற்பபூஞ்செருந்தி
மருடுசேரிளஞ்சிறுனெனப்பொலிவவண்காஞ்சி. (கரு)

சுற்றுமுற்றும்வெண்மலர்செறிபல்பிடாத்துன்ன
லுற்றுநிறபமற்றதனடுப்பூத்தவொண்கொன்றை
மற்றுமேலுயர்நந்தோங்குபுநின்றிடல்வானம்
பற்றுவெள்ளியங்கயிலைமேற்பரனிலைகாட்டும். (கசு)

அன்னகொன்றைமேலச்சம் * ஈனரும்பொன்றுதங்கல்
சொன்னதம்பிரான்முடிமிசைப்பிறையெனத்துலங்கு
மன்னமற்றதன்கிளைகரும்பூவையையவருட
னன்னரப்பிரான்மான்மகட்டழுவுதனூட்டும். (கஎ)

மின்னுபேருயிர்குறுமையுநெடுமையுமெய்கள்
பன்னுவன்மையுமென்மையுமிடைமையும்பட்டாங்
குன்னுமிவ்வகையைந்துமாவயினுறத்தொகலாற்
றுன்னுமவ்வநெடுங்கணக்கேயெனத்தோன்றும். (கஅ)

---

* உறவி - எறும்பு - ஊறுதீர்ப்பவன் - விநாயகக்கடவுள்.
* அச்சம் - அகத்திமரம். * மான்மகள் - மோகினி.

கோடுகொண்டனபல்லகால்கொண்டனபல்ல
கூடுபுள்ளிகள்கொண்டனபல்லமேல்விலங்கும்
பாடுகொண்டனபல்லகீழ்விலங்குவபல்ல
நீடுமின்னதானெடுங்கணக்கெனற்கையமின்றே. (௧௯)

செறிதருந்தளிரிலையரும்பலர்சிறுபிஞ்சு
நறியகாய்கனியாதியநாளுநீங்காது
நெறியசெங்கதிர்வெப்பமுட்புகாதுறநிலேதத
குறியவவ்வனப்பெருமையார்கூறுதற்கமைவார். (௨0)

வேறு.

பொருவரும்வளஞ்சாலிந்தனைமிசம்பொருநதிவாழ்வா
ரொருவருநீறுபூசியுவந்துகண்மணிகள்பூண்டு
வெருவருமெழுத்தைந்தெண்ணிவிடையவறபூசைசெயவார்
மருவருமுயர்மெய்ஞ்ஞானவாயமையார்தூயமையாரோ. (௨௧)

இன்புவந்துற்றபோதுமெதிர்மறையுற்றபோது
முன்புடனுறமூழென்றேவிருப்புருர்முனிவுஞ்செய்யா
ரன்புசிற்றுயிரகத்துமமைத்துவாழ்கின்றநீரார்
வன்புமும்மலமுநீங்கத்திருவருண்முழுகுமாண்பார். (௨௨)

விழியொருபத்துநூற்றுவிண்ணவர்வேந்தன்வாழ்வும்
பொழிமதுககமலவாழ்க்கைப்புண்ணியப்பிரமன்வாழ்வுங்
கழிசுடர்ப்பரிதிவட்குங்கவுத்துவமார்பன்வாழ்வும்
பழிதபுத்தறியாக்கான்றபதமெனக்கண்டகண்ணுர். (௨௩)

இன்னுமறறவர்பிறப்புமிறப்புமெத்தனையோகண்டார்
துன்னுமைம்பூதமெல்லாந்தொலைந்தனகழிகாலத்தும
பன்னுதமுடம்பின்கண்ணேருரோமமுங்கழிதல்பாரா
ருன்னுசெம்பொன்னுமோடுமொப்பெனமதித்தமேலோர். (௨௪)

காரணநோக்கலன்றிக்காரியநோக்குகில்லார்
பூரணப்பொருளின்கண்ணேயெறைைக்குமுறக்கம்பூணுர்
வாரணவியபொற்கொங்கைமங்கையர்வலியவந்து
தாரணத்தமுவினுலுந்தாயெனக்கருதுநீரார். (௨௫)

பரசிவபுராணங்கேட்டல்பரசிவமணமேமோத்தல்
பரசிவநாமம்பேசல்பரசிவக்குறியேகாண்டல்
பரசிவபணியேசெய்தல்பரசிவவுருவேயெண்ணல்
பரசிவபத்திவாய்ந்தார்ப்பரவுதலிவையேயுள்ளார். (௨௬)

அத்திரிததீசிகார்த்தியாயனன்சுனப்புச்சன்ன
கத்தியன்சுகன்மாதேவன்கண்ணுவன்கருக்கன்காமச்
சத்துருவாம்பிருங்கிசதானந்தன்புகழ்மார்க்கண்ட
னுத்தமப்பிருகுபோதாயனனுயராபத்தம்பன். (௨௭)

இலகிதன்சுதீக்கணன்சாண்டில்லியன்பரத்துவாச
புலிகன்சந்திரசூடன்குச்சகன்புலத்தியன்சாபாலி
வலகவுதமன்சனற்குமாரனுரதன்சீர்ச்சம்பு
நலமிகுமரணிமாண்டவியனரபத்தநல்லோன். (௨௮)

காசிபன்விச்சுவாமித்திரன்கலைச்சிருங்கன்கற்கி
கூசுமாண்டன்மாதேசனகுசுருபார்க்கவன்சனந்த
னுசுவிலாயனன்றலப்பியன்றிருதன்சங்கன்
பேசகமருடணன்பராசரன்பெருஞ்சநாதன். (உக)

திருதனசநகன்வசிட்டன்பிரசண்டன்றுருவாசன்கேழ்
தருபருப்பதன்சிலாதன்றத்தாத்திரேயன்சத்தி
வருதவுமியன்சுமந்துபப்புருவாமதேவ
ஞெருசரபங்கன்வச்சனுபமனியன்சீர்க்கண்டு. (கூ0)

அரிதகன்சவுநகன்றேவலன்சுநனசிதன்விந்து
பெரியபாணினிவிபண்டகன்காலவன்பெருஞ்சீ
ருரியவங்கிரசுசாதாதபன்சுநச்சேபனுண்மை
தெரிசருச்சரனிரைப்பியன்வசுதிரணவிந்து. (கூக)

முற்கலன்கபிலனட்டவக்கிரன்காணன்முத்தி
யொற்கமில்சுநகன்சீர்த்தியுரோமசன்பகவன்மேன்மை
வற்கமார்தருகவுண்டின்னியன்பயிலவன்மருத
விற்கருலுக்கிரஞ்சேர்வீரியன்றூமபானன். (கூஉ)

செந்தமிழியலுரைத்ததிரணதூமாக்கினிப்பே
ரந்தணனனையான்றந்தையாஞ்சமதக்கினிப்பேர்
முந்தனெல்லாரும்பேசுஞ்சவுபரிமொழியுமற்றைப்
பந்தமின்முனிவர்யாரும்பரவுமோரிடத்திற்கூடி. (கூகூ)

திருவளருமையோர்பாகன்றிருவுளமுவக்கும்வண்ண
மொருமகமுஞற்றலுற்றுருற்றவக்காலையயன்
மருமலர்ப்பாதங்காண்டன்மறிபெரும்பிறவிமாய்க்குங்
கருவியக்கருவியாதாற்பெறலெனக்கருத்துட்சூழ்ந்தார். (கூச)

யாகமோவிரதமோநல்லெச்சமோகொடையோமெய்யோ
யோகமோஞானமோமற்றுண்மையிற்றுறவுபூணும்
பாகமோவெதுவென்றுய்ந்துபகர்துணிபுறாேயாகி
மோகமோவியவுட்சூதமுனிவனுற்றெளிவாமென்றார். (கூ௫)

புரிமகங்காணப்போதும்புண்ணியமுனிவரோடு
முரியமாணுக்கர்சூழவொள்ளொளிநீறுசெயய
வரியகண்மணிவிளங்கவைந்தெழுத்துளத்துமன்னத்
துரிசறுத்துயர்நதோனுமச்சூதமாமுனிவன்வந்தான். (கூசு)

நினைந்தவப்பொழுதேயிந்தநேயமாமுனிவந்தானென்
றினைந்தசிந்தையினனந்தமெழுதரவுவந்தெழுந்து
துனைந்தனரெதிரேசென்றுதொழுதனராடிப்பாடிப்
புனைந்தவஞ்சலியராகிப்போற்றினரழைத்துவந்தார். (கூஎ)

ஆயவிட்டரத் * திருத்தியருக்கியமாதிகொண்டு
மேயநற்பூசையாற்றிவிதியுளிப்பணிந்தெழுந்து
நேயமிக்கிருபானின்றார்நின்றவர்தமையிருக்கென்
றேயவவ்வார்த்தைகேளாவிருந்தனரியம்பலுற்றார். (கூஅ)

* விட்டரம் - தருப்பைப்புல்லாலமைத்த வாசனம்.

இறைவிடமுண்டபெம்மான் றிருவுளமகிழும்வண்ண
முறைமகமொன்றுசெயயவுபக்கிரமித்தோமயாங்கள்
விறையவப்பொழுதேசன்டிம்வீட்டிடுங்கருவியந்த
நறைவிடைப்பாகனபாதங்காண்டலென்றுளநயந்தோம். (௩௯)

அன்னதுபெறுமுபாயம்யாதெனவாராய்நதாராய்ந்
தின்னதென்றுளதறுத்தேரோமெக்கலைகளுநதேர்கின்றூற
சொன்னதுதெளிவாறெண்ணியிருந்தனஞ்சூதமேலோய்
பன்னதுபோதுநீயும்பண்புறுகாட்சிதந்தாய். (௪0)

பெரியவர்காட்சிவீண்போகாதுறப்பிறங்காநிறகு
மரியநற்பயன்றந்தன்றியென்றுலகுரைக்குமாற்றூற்
றெரியநீவகுத்துச்சொற்றிசிவபெருமானேயென்ன
விரியயாவுநதெரிநதமேலவவென்றிறுத்தார். (௪௧)

முனிவரருரைத்தவார்த்தைமுனிவறச்செவியினேற்றுங்
கனிதருபெருமானபாதங்காண்டலுங்கேதுவொன்று
லினிதவனமருந்தானத்தியையமுச்சிறப்பும்வாயநத
புனிதமாத்தலத்திற்குற்றமான்மியம்புகலக்கேட்டல். (௪௨)

அதுதனியாராய்ந்துள்ளத்தமைத்திடல்பிறர்க்குக்கூறல்
கதுமெனவனையதானங்கலந்துறவசித்தலநத
முதுதலத்தமர்நீராடன்முக்கணன்சேவைசெய்தன்
மதுமலரிறைத்திறைஞ்சிவழிபடலாதியாக. (௪௩)

இவையுள்யாதானுமொன்றுலெய்தலாமென்றுகூற
நவையறுமுனிவருண்மையீதெனநயந்துகொண்டு
செவையுறுமுனிவமுன்றுஞ்சிறந்தவோர்தானமாய
தவையகமகிழுமாறென்றுய்ந்தறைந்தருடியின்னும். (௪௪)

மற்றதுசேய்மைக்கண்ணும்வதிந்துளத்தெண்ணினூலும்
பற்றமைதரச்சொற்றூலுந்திசைநோக்கிப்பரவினூலு
மற்றமிலிம்மையம்மைமுத்தியுமளித்தல்வேண்டுங்
கற்றவர்பலருமுண்மையேயெனக்கரைதல்வேண்டும். (௪௫)

கொடியபாதகங்கள்கோடாகோடியுள்ளனவேயேனு
நெடியமற்றதன்பேர்சொல்லிவினைக்குமுனீங்கல்வேண்டு
முடியநாமுரைப்பதென்னேயெண்ணியவனைத்துமுற்றும்
படியதாமொருநற்றூனமாராய்ந்துபகர்கவென்றூர். (௪௬)

என்றலுமுவகைபொங்கநெடும்பொழுதுள்ளத்தெண்ணிக்
கன்றலிலருளாற்றெய்வக்கவுரிமாயூரங்கண்டு
பொன்றலில்புகழ்சாலீதற்புதத்தலமெனவியந்தீ
தொன்றலதுயர்ந்ததானமூலகில்யாதெனத்துணிந்து (௪௭)

மருளடியவர்க்குமாற்றுமகத்தியவாரணத்தை
யருள்பொழிவள்ளலாரையஞ்சுசுகியையுள்ளத்
தெருடருகுமரவேளைச்சிநதையிற்றியானஞ்செய்து
பொருள்பெறுவியாதன்றூளும்போற்றுபுநவில்வான்சூதன். (௪௮)

அந்தணீர்கேண்மினீவிர்கேட்டவாமுயுங்காலைச்
சிந்தனைக்கரியதொன்றுசிவபிரானருளாற்றேர்ந்தே
னிந்தநற்றலச்சீர்முன்னமொருவற்குமிசைத்ததின்று
கந்தவத்தலநன்னுமங்கவுரிமாயூரமாமால். (௪௯)

நினையுமுனெனக்கானந்தநிகழுவதென்னசொல்வேன்
புனையுநுங்களுக்குண்டாதல்புகன்றிடற்பாலதேயோ
வனையமெய்த்தலத்தையொப்பதகிலலோகத்துமில்லை
வினையின்மெய்த்தவமிலாதார்மேவரிதெந்தஞான்றும். (௫0)

மன்னியவத்தலச்சீர்யானேயோசொல்லவல்லேன்
முன்னியபுகழ்சால்வாதராயணமுனிவன்வைத்த
பன்னியவருளோக்சத்தாற்றெருகுத்தியான்பகர்தலுற்றே
னந்நியமத்தீர்கேண்மினெனநவின்றருள்வான்சூதன். (௫௧)

நைமிசப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௩௪௧.

# திலீபன்முத்தியடைந்தபடலம்.

சூரியன்மரபிற்றோன்றித்தொன்னகரயோத்தியாளுஞ்
சீரியன்கவிகையொன்றுற்றிருந்துலகெலாநிழற்று
மாரியன்மருவாரொன்னும்யானைகட்கரியேறாய
வீரியன்றிலீபனென்னுமெய்ப்புகழ்நாமவேந்தன். (௧)

பாரின்மன்னியவெல்லாரும்பல்லாண்டுபல்லாண்டென்னச்
சீரின்மன்னியகுணத்தான்செறிந்தெழுகீர்த்தியாய
தாரின்மன்னியபுயத்தான்றண்டவப்பெருமான்றாட்கு
நாரின்மன்னியமனத்தானனிலங்காக்குநாளில். (௨)

வரியளிக்குலம்பண்பாடமதுமடையுடைத்துப்பாயப்
புரிமுறுக்குடையுஞ்செந்தாமரைமலர்ப்பொகுட்டுமேலான்
றெரிதரவுயிர்த்தமைந்தன்செழுந்தவவசிட்டனென்பான்
விரிபலமுனிவரோம்பும்வேத்தவைமேயினானால். (௩)

வரமுனிவரவுகண்டுமன்னவனெதிர்சென்றேத்திப்
பரவினனழைத்துவந்துபைம்பொனாதனத்தின்வைத்து
விரவுமுள்ளன்பிற்பூசைவிதியுளிமுடித்துப்போற்றிக்
கரதலங்குவித்திருநதுகாதலினிதுவினவும். (௪)

தரைகிழிதரவிரைந்துசையநின்றிழிந்துபோந்து
திரையுவர்க்கடல்கலக்குங்காவிரியிருதீரத்து
முரைசிறந்துள்ளதாயதலமெலாமொருங்குகேட்கப்
புரையறுமொரோவொன்றாகப்புகன்றனையாலவற்றுள். (௫)

மேதகுதிருவானைக்காமிளிர்சிராமலைவாரேரு
மோதருமன்பிலாலந்துறைதவத்துறையுற்றார்தங்
கோதறுமொருநெய்த்தானங்குலவுமையாறுவாசப்
போதவனிறைஞ்சுங்கண்டியூர்பொலிபூந்துருத்தி. (௬)

வலஞ்சுழிகும்பகோணமேரகம்வளர்பட்டீச
நலந்தரவொளிர்சித்தீசநாளுமோங்குறுநாகேச
மிலங்கியபலரும்போற்றுமிடைமருதுயர்கோமுத்தி
விலங்கலிருருத்திமற்றும்விசேடமென்றுரைத்தாயைய. (எ)

இவையுளுமதிவிசேடமெனமறையுரைப்பதாகி
நவையறுமுத்தியெண்ணாநல்கிடுந்திறத்ததாகிச்
செவையுறுதலமுன்மூன்றுந்திகழ்தரச்சிறந்ததாகி
யவைமதித்திடுவதாயதறைதியென்றடியேன்கேட்டேன். (அ)

அனையமாதலமாயூரமதற்கிணையில்லையென்று
நினையவேயிம்மையம்மைமுத்தியுநிரப்புமென்றும்
புனையவாமத்தலத்துப்பொலியுமான்மியமனைத்துந்
துனையநீதொகுத்துச்சொற்றாய்தோன்றியதில்லைதிருத்தி. (௯)

திருத்தியுண்டாகுமாறத்தெய்வமாயூரமேன்மை
விருத்தியிற்புகலவேண்டுங்கேட்டிடவேண்டுமென்னு
மருத்தியென்னுளத்தையீருமாதலாலதன்சீர்முற்றும்
பொருத்தியல்லாதுநீயும்போவதுகூடாதென்ன. (௧௦)

முனிவனுமுவகைபூத்துமுழுமுதலவன்புராணங்
கனிவொடும்யாவன்கேட்குங்காதலனவனேயெல்லாப்
புனிதவானவர்க்குமேலானறமெலாம்பொலியச்செய்தோன்
றனியமர்சிவன்முத்தனெனமறைசாற்றுமன்றே. (௧௧)

சிறந்தமாயூரமென்னுந்திருத்தலமுவமையில்ல
துறந்தமறறதன்சீர்கேட்குநீயுமோருவமையில்லா
யறந்தவாறுரைக்கும்யானுமனையனேயென்றுகூறி
வறந்தகாமாதிமேலோன்வகுத்திடலுற்றான்பின்னர். (௧௨)

பரவியசிவபுராணம்பத்தனுட்பிரமாண்டத்து
முரமிகுமாக்கினேயபுராணத்துமுறையாநிற்கும்
வரமிகுமாயூரத்தின்மான்மியமதனைச்சொல்கேன்
திரமிகுமன்பிற்கேட்டிதிலீபவென்றெடுத்துப்பேசி. (௧௩)

அணிமலர்மிசையோன்பூசித்தாருள்பெற்றவாறுந்
திணிமனத்தக்கனென்பான்றிருமகஞ்செய்தவாறுந்
துணிவலிமிக்கவீரனம்மகந்தொலைத்தவாறுந்
தணிவருமருட்பிராட்டிமயிலுருச்சமைந்தவாறும். (௧௪)

திருமயிலாயவம்மைசிவார்ச்சனைசெய்தவாறு
மொருவருங்கருணையன்னாள்பண்டுருவுற்றவாறு
மருவுகாதலினான்மீட்டுமாகமவிதிவழாமற்
பொருவருஞ்சிவபிரானைப்பூசனைபுரிந்தவாறும். (௧௫)

விழியொருமூன்றோனுயவிண்ணவர்பெருமானுள்ளங்
கழிமகிழ்பூத்துவெள்ளைவிடையின்மேற்காட்சிநல்கிப்
பழிதபுமுமையாண்மாயோன்முதலியபலரும்வேட்ட
வொழிவறநல்கிவள்ளலெனும்பெயருற்றவாறும். (௧௬)

மன்னியதலத்தின்சீரும்வளமலிதீர்த்தச்சீரு
முன்னியவாக்கினையமுறைத்தருள்பலவுமற்று
முன்னியவிரித்துச்சொற்றான்மொழிந்தனயாவுங்கேட்டு
மின்னியவேற்றிலீபவேந்தனுண்மகிழ்ச்சிபூத்து. (௧௭)

குரவனாம்வசிட்டமேலோன்குருமலரடியிற்றாழ்ந்து
வரநிலாம்விடையும்பெற்றுவயங்குநாற்படையினோடு
முரவுகூரமைச்சரோனைப்புரோகிதரொருங்குசூழப்
பரவுநாளெழுந்தானென்பபகைத்தவர்க்கேறுபோல்வான். (௧௮)

வான்றவழ்குன்றுங்கானுமருதநீர்நதியுமற்றுந்
தேன்றவழலங்கன்மார்பன்பிற்படச்செவ்வேவந்து
மீன்றவழ்கங்கையாடிமிளிர்காசிபுகுந்துவிணமீன
கோன்றவழ்சடிலமோலிவிச்சுவநாதற்கூடி. (௧௯)

பனிமலரிறைத்துப்போற்றிப்பரவியாங்சாங்குமேய
முனிவருதலங்களெல்லாமுறைமுறைசென்றுபோற்றிக்
குனிசிலைநுதற்பிராட்டிகுளிர்மலர்ப்பதமும்போறறிக்
கனிபடுசோலைசூழ்ந்தபருப்பதங்கண்டுபோற்றி. (௨௦)

மாதாரநிறத்தானாதிவானவர்வணங்கிப்போற்றுங்
கேதாரமேயபெம்மான்கிளர்மலர்ச்சரணந்தாழ்ந்து
தீதாரவுடன்படாதுசெறிந்தவர்க்கருளியென்று
மாதாரமாயினானைக்காளத்தியணைந்துபோறறி. (௨௧)

வேதமாநீழல்வைகுமேகம்பவிமலனார்தம்
பாதமாமலர்கள்போற்றிப்பராய்த்தொழுதாலங்காடு
நாதமாமுரசந்துஞ்சாநகுபுகழ்க்கழுக்குன்றம்பே
ரோதமாரொற்றிமற்றுமுள்ளனவனைத்துந்தாழ்ந்து. (௨௨)

அடிமுடியிருவர்தேடவழலுருவாகின்ற
நெடியவண்சிலம்புமேன்மைநிறைமுதுகுன்றுமிந்தப்
பிடிபுகழ்ந்தெடுத்துப்பேசும்பாதிரிப்புலியூரும்பொன்
முடிபுனைவேந்தர்வேந்தன்முந்துசென்றிறைஞ்சிப்போற்றி. (௨௩)

வளவர்நன்னாடுபுக்குமன்றிடைநின்றுநாளு
மளவிலானந்தமேவவாடுமம்மானைத்தாழ்ந்து
துளவினான்போற்றுங்காழிதூயபுள்ளிருக்குவேளூர்
களவிலாப்பிறவும்போற்றிக்காவிரிநதிவந்துற்றான். (௨௪)

இரவிவண்டலாத்துவைகுமேற்றநாளநாளாகப்
பரவுமாமுனிவராதிப்பலரொடுமந்நீராடி
விரவிவெண்ணீறுமெய்யின்விளங்குறப்புனைந்துபாயும்
புரவிமாத்தானைவேந்தன்போற்றுபஃறானநல்கி. (௨௫)

பலரொடுங்கோயிலெய்திப்பைந்தமிழ்மணக்குஞ்செவ்வா
யலர்புகழ்முனிபூசித்தவண்ணலங்களிற்றையேத்தி
நலர்தொழுவள்ளலார்முனண்ணியுள்ளுருகித்தாழா
வலர்பலகொண்டுபூசித்தானந்தத்தழுந்தினானே. (௨௬)

நலம்பொலிகருணையஞ்சனயகிகோயில்வாயிற்
புலம்பொலிதரவவ்வாறேபுகுந்துநேர்கண்டுபோற்றி
வலம்பொலிமற்றுமுள்ளவானவர்களையுந்தாழ்ந்து
நிலம்பொலிதானைவேந்தனெடிதுறவசித்தானங்கு. (உஎ)

சினகரப்பணிகள்செய்துந்திருவிழாநடாத்தல்செய்து
மனகருள்வள்ளலார்க்குமஞ்சனயகியாருக்கும்
கனமணிப்பொற்பூணுடைகணிப்பிலகொடுத்துமெண்ணில்
பனவருக்கமுதமீத்துமடியனைப்பரவித்தாழ்ந்தும். (உஅ)

பன்னெடுங்காலமிந்தப்படிவசித்திருந்துபின்று
ணன்னெடும்புகழ்த்திலீபனயகன்விடைபெற்றேகித்
தொன்னெடுநகரஞ்சார்ந்துசுதமின்றிப்பனனுள்வாழ்ந்து
பின்னெடுஞ்சிவலோகத்துப்பிறங்கிவாழ்ந்திருந்தானன்றே. (உகூ)

அனையவன்வசிட்டன்பாங்கரன்புறக்கேட்டவாறே
வினைதபுமாயூரத்தின்மேன்மைகண்முறையிற்சொல்வே
னினைதருமிதுவேயிம்மைமுதன்மூன்றுமிரப்புமென்று
புனைபுகழ்முனிவர்கேட்பப்புகலுவான்சூதமேலோன். (௩௦)

திலீபன முத்தியடைந்தபடலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௩௭௧

# பிரமன் சிருட்டிபெறுபடலம்.

தளைதருமுகதொருகற்பத்தாதியில்
விளைதருதண்டுழாயவிண்டுவுந்தியில்
வளைதருசிலைப்பிரானருளினமாட்சியா
லுளைதருமறையவனொருவன்றோனறினான். (க)

தோன்றியமறையவன்றுளபத்தானடி
யூன்றியவன்புளமுருகித்தாழ்ந்தெழூஉ
யான்றியங்காவகையியற்றிடும்பணி
மூன்றியல்சிரத்தினயமொழிதியென்றலும். (உ)

தனையகேணினக்குமென்றனக்குநாயகன்
முனையசூற்படைக்கரமுக்கண்மூர்த்தியா
லனையனைநோக்கிநீயருந்தவம்புரிந
தினையலாகாப்படைப்பியற்றுசென்றனன். (௩)

என்றலும்விரைந்தெழுந்திணைடமேலவன்
பொன்றலும்பிறத்தலுமிலாதபுண்ணிய
னென்றல்செய்ருள்விரைந்தறுதிநல்கிடுங்
கன்றலிலாத்தலங்கருத்தினய்ந்தனன். (௪)

அதுபொழுதுடலில்வாக்கந்தணுக்கு
முதுகடற்பச்சிமமொழிதருந்திசைக்
கதுமெனயோசனைகடந்துமேலுதிற்
புதுமலர்தருபுனற்பொன்னித்தென்கரை. (௫)

அமைவொடும்விளங்குமோரடவியாயிடைச்
சமைதரவிருந்துநீதவஞ்செய்வாயெனி
னுமையுடையான்விரைந்துதவுமென்றது
கமையுடையானதுகாதினேற்றனன். (௬)

எண்ணியகாரியமெய்தப்பெற்றெனக்
கண்ணியமறையவனகடுப்பினிற்செலா
வண்ணியவாவயினணைந்துகண்டனன்
புண்ணியந்தழைத்தெனப்பொலிவனத்தினை. (௭)

கொண்டலுங்கைகுவித்திறைஞ்சிக்காவிரி
மாண்டகுபுனல்விதிவழியினாடியே
யேண்டருநீறுமெய்யிலகப்பூசுபு
தாண்டவப்பிரானடியுளந்தரித்தரோ. (௮)

காமமாதியகரிசொழியக்கட்டறுத்
தேமநாயகனருளியைதரும்படி
மாமனுதவியவந்ததாமரைத்
தாமமார்பினன்பெருந்தவம்புரிந்தனன். (௯)

அறைகொடுவேனிலினழலுள்வைகியு
நிறைபெருங்கூதிருணீருண்மூழ்கியு
மிறைசிறிதாயினுமேவுறுவலக
மறையவன்பெருந்தவம்வயங்கவாற்றினன். (௧௦)

ஒருபதினாயிரவருடமுண்மையி
னருமறையோன்றவமிங்ஙனாற்றலும்
பெருவிடைமேற்சிறுபிறைக்கொழுந்தணி
திருமுடியோனெழுந்தருள்சிந்தித்தான். (௧௧)

வளைதுகிர்க்கொடிவநநடுவயங்குகூன
வளையெனச்சடைநடுபிறைவயங்குற
வளைபிறையமுதுகுத்தனனதென்னவவ்
வளைவரநதித்துளியலங்கிமேவுற. (௧௨)

ஆயவவ்வநம்புகவவாவித்தாவலின்
மேயகைத்தலத்தொருமான்விளங்குற
வேயமற்றதன்செலவிரிக்கமேவல்போற்
றூயவெங்கனன்மழுவொருகைத்தோன்றுற. (௧௩)

உழைகுறும்பியற்றினுன்னுடம்பிற்போர்த்ததோல்
தழையுமென்போலவைசாருமாலென
விழைதரவுணர்த்தல்போன்மிளிர்தரக்கதள்
பழையதாய்த்திருவரைசூழ்ந்துபம்புற. (௧௪)

திருமுடிமதிகுறைதீர்ந்ததோவெனப்
பொருவிறுளராப்படம்பைத்துப்பொள்ளென
வருகுநோக்குபுபணாமயிலென்றஞ்சுபு
திருகுதீர்த்தொடுங்குபுமுன்னைச்சீர்பெற. (௧௫)

மன்னியபவளமால்வரையிரேர்புறந்
துன்னியபச்சிளங்கொடியின்றேற்றம்போன்
மின்னியவிதிபடையாதமேனிப்பாற்
பன்னியபனிவரைப்பாவைமேவுற. (கரு)

நந்திமுற்கணங்களுநளினப்பூவெனு
முந்தியங்கடவுளுமுறுமற்றேர்களு
முந்தியும்பிந்தியுமொய்த்துச்சூழ்வரத்
துந்துமிபல்கடற்றெழிப்பு *மாற்றிட. (கள)

அரியநற்காட்சிதந்தருளினன்பரன்
பிரியுமிக்கிதியான்பெற்றுளேனெனக்
கரியவன்மகன்விரைந்தெழுந்துகைதொழா
வுரியபொன்மலரடியொல்லைத்தாழ்ந்தனன். (கஅ)

சூழ்ந்தனன்பன்முறைசூழ்ந்துசூழ்ந்துமண்
டாழ்ந்தனன்பன்முறைதாழ்நதுளத்துயர்
போழ்ந்தனனினியொருபுகருமின்றியான்
வாழ்ந்தனன்வாழ்நதனனெனவழுத்தினன். (கக)

சுத்தமெய்ஞ்ஞானநனெறிதொடர்நதுபோ
முத்தர்களகக்கணுமுயன்றுங்காணரு
மித்தருகாட்சியிவ்வேழைக்காவதோ
சத்தறிவின்புருத்தலைவனேயென்றனன். (உ௦)

வேறு.

என்றகாலையிலிறையவன்றிருவுளமிரங்கி
யொன்றமாதவமயுதமாண்டுவந்துநீயியற்றிக்
கன்றமெய்யிளைத்தாயெனத்தன்றிருக்கையா
லன்றவனபுறந்தைவராவறைவிழைவென்றான். (உக)

அருமையாயகாட்சிதந்தளித்ததன்மேலும்
பெருமையாயதொன்றுண்டுகொல்பிறைமுடிப்பெரும
வொருமையாளர்தம்முள்ளொளியாய்விளங்கொருவ
விருமையாவையும்படைக்குமாறருள்புரியென்றான் (உஉ)

என்றுநைந்துநைநதிறைஞ்சினன்வேண்டலுமிறைவ
னன்றுநின்விழைவிதுவெனிறுமிவ்வநத்து
ளொன்றுநங்குறியுள்ளதுமறநீதெவைக்குந
தொன்றுதோன்றமுன்றேன்றியதோற்றததம்மா. (உங)

இனையகோசமொப்பாகியகோசம்வேறில்லை
நினையநோக்கமெய்யானந்தநிரப்புவதித்வே
துனையவெத்துணைக்கோடிபாதகங்களுந்தொலைக்கும்
புனையவல்லமாமறைபுகழ்வதுமிதன்புகழே. (உச)

அன்னதாகியவிலிங்கத்துக்கெதிர்வலத்தமைய
நன்னர்வான்றடமொன்றுகண்டப்புனலயர்து
சொன்னமூர்த்தியையாட்டிப்பூசித்துத்துதித்து
மன்னநீவிழைந்ததுபெறுகுதியெனவகுத்து. (உரு)

* தொழிப்பு - ஓசை.

அணகிவ்வகமின்றுதொட்டந்தணபிரம
வனமெனப்படும்பின்னருநீபெருமாண்பாற்
கனகமாமணிமாளிகைநகர்படக்காண்பாய்
முனகர்தீரந்தநகரமுநின்பெயர்முயங்கி. (உசு)

வரமிகத்தருவள்ளலும்பொலிதரப்பிரம
புரமெனப்படுமிலிங்கமும்வாவியும்பூணும்
பரவுநின்பெயரொன்றுறைத்தருளியெம்பரம
னுரவுமிக்கபல்கணத்தொடுமொய்யெனமறைந்தான். (உஎ)

ஐயனங்ஙனமறைதலுமம்புயமலர்மேற்
செய்யனவ்வுநந்தேண்டினனொருசிறைக்கண்டான்
வையமாதியெப்புவனமும்வாழ்தரமுளைத்துப்
பொய்யவாவுளங்கடந்தொளிர்பூரணப்பொருளை. (உஅ)

கண்டுகண்கணீர்துளித்திடக்கசிந்துளமுருகி
மண்டுகாதலிற்சூழ்ந்துபன்முறைதுதிவழுத்தி
விண்டுநாத்தழுதழுத்திடமெய்ம்மயிர்பொடிப்பத்
தண்டுபோலவுதிர்வீழ்ந்தனன்றரைமிசைக்கிடந்தான். (உகூ)

எழுந்துதம்பிரானருளியபடியெதிர்வலப்பாற்
கொழுந்துகொண்டெழுதீவினைமுழுவதுங்குலைந்து
விழுந்துபோம்படிபுரிதடம்விரைவினுண்டாக்கி
யழுந்துமன்பினனதிற்படிநதெழுந்தனனம்மா. (ஙo)

அநதநீர்முகந்தமலலிங்கத்தினையாட்டிச்
சந்தநாண்மலர்சூட்டியொண்சாலுணவூட்டிப்
பந்தமோவுமட்டாங்கபஞசாங்கமாப்பணிந்து
முந்தநின்றுளமுருகுபுதோத்திரமொழிவான் (ஙக)

சுருதியந்தமுந்தொடரொணுச்சுயம்பிரகாச
பரிதியாயிரங்கோடியிற்பொலிதிருப்படிவ
கருதியாவரும்பவத்துயர்கடக்குமுக்கண்ண
வெருதியாவருந்தொழவுகைப்பவநினையிரந்தேன் (ஙஉ)

உருவமொன்ப * தாறெட்டமைந்தருவொன்றுமில்லாய்
பருவமங்கைபான்மருவவுமயல்சற்றும்பற்றுய்
பொருவவைந்தொழிலியற்றியுந்தொழிலொன்றும்பூணுய்
திருவவானவதேவதேவேசநிற்சேர்ந்தேன். (ஙஙு)

பூதமுங்கரணங்களுங்கலைகளும்பொருந்தாய்
நாதமுங்கடந்தியோகியருள்ளமேநயந்தாய்
வாதமும்பலபேதமாஞ்சமயர்தம்வயத்த
போதமுந்தபுபூரணனந்தநிற்புணர்ந்தேன். (ஙச)

போற்றிசங்கரபொங்கரவணிந்தருள்புராண
போற்றிமாயவன்காணொணுத்திருவடிப்புனித
போற்றியெங்கணுமொழிவறநிறைந்துறப்பொலிவோய்
போற்றியான்செழுபிரமலிங்கத்தமர்புலவ. (ஙரு)

---

* ஆறு - சடத்துவர்.

என்றுதோத்திரம்புரிபவற்கெதிரொழுந்தருளிக்
கன்றுமான்மழுக்கையிஞர்நனிகடைக்கணித்துத்
துன்றுபலவகைச்சிருட்டியும்புரிகெனச்சொல்லி
யன்றுதூயவவ்விலிங்கத்துண்மறைந்தனரம்மா. (௩௬)

பெற்றநான்முகனவ்வநம்பிழையறத்திருத்திக்
கற்றவிச்சுவகன்மனுலாலயங்கண்டு
பொற்றமாநகராக்கினன்பொருநதுபல்குடியு
மற்றமில்வகைச்சிருட்டிமுன்கற்பம்போலமைத்தான். (௩௭)

வேறு.

பிரமனருந்தவம்புரிந்தபிரமவநமொருநகராய்ப்
பிரமபுரமெனுமொருபேர்பெற்றதெதிர்வலப்பானீர்
பிரமதடமெனும்பெயராற்பிறங்கியதுசுயம்புலிங்கம்
பிரமலிங்கமென்றெவரும்பேசவிளங்கியதம்மா. (௩௮)

அப்பிரமதடநறுநீராஷ்றவிதிப்படிமூழ்கி
யப்பிரமலிங்கத்தையன்புமிகத்தரிசித்தே
யப்பிரமபுரத்துறைவாராரோனுமப்பொழுதே
யப்பிரமன்மான்முதலோரங்கைகுவித்திடப்பொலிவார். (௩௯)

ஒன்ருகிப்பலவாகியுருவாகியருவாகித்
தொன்ருகிப்புதிதாயசுயம்புலிங்கப்பிரான்விடைபெற்
றன்றுதரவிற்பிரமனமர்தருதன்னுலகடைந்து
குன்றுதசிருட்டியெலாங்குறித்தியற்றிவாழ்ந்தனனே. (௪௰)

பிரமன்சிருட்டிபெறுபடலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௪கக.

# தக்கன்மகம்புரிபடலம்.

வரத்தமர்முனிவர்பண்ணவர்மற்ருேர்வாழ்த்திடப்பொலிதருபிரம
புரத்தமர்சுயம்புலிங்கநாயகன்றன்பொலியருள்பெற்றகாரணத்தாற்
திரத்தமர்தெய்வத்தாமரைக்கிழவன்செறிதரவியங்குவநாஞ
முரத்தமர்நிலையினிற்பனபலவுமொய்யெனப்படைத்தனன்மாதோ. (க)

உரைசெயிச்சிருட்டிக்கேதுவாயனையானுளத்துவந்தவர்களொன்பதின்மர்
புரைதவிர்பிருகுபுலத்தியன்புலகன்புண்ணியக்கிருதுபல்கலையுங்
கரைதருவலியாங்கிரசுமாதவத்தக்கன்புகழ்மரீசிமெய்ந்லத்தாற்
றரைபுகழ்தருமத்திரிநலவசிட்டன்றழையுமற்றவர்பெயரம்மா. (௨)

அனையவர்தம்முடக்கனென்றுரைக்குமளவின்மாதவத்தினன்பல்ல
தனையரைப்படைத்துப்படைமினென்றேவத்தாழ்ந்தெழுநதனையரஃதேற்று
வனைதருபடைப்புச்செயமுயல்காலைமகதியாழ்முனிவரன்ருேன்றி
வினையம்வல்லவர்நீர்முயல்வதென்னெனன்ருன்மற்றவருள்ளதுவிரித்தார். (௩)

அவனதுகேட்டுப்பந்தமேற்பந்தமாக்குவான்முயன்றுளீரழகே
புவனமேத்தெடுக்கப்பொலிதருபிரமபுரத்தினைநீவிரின்றடைந்து
கவனமால்விடையானருட்குறிபோற்றிக்காமருபெருந்தவமாற்றித்
தவலருமுத்தியடைமினென்றுரைத்தான்சார்ந்தனரனையரத்தலமே. (௪)

அத்தலப்பிரமதீர்த்தத்துமூழ்கியவிர்தருபிரமலிங்கேச
வுத்தமற்போற்றித்திருவருடரப்பெற்றொன்றியொன்றாக்கலப்புற்றார்
வித்தகத்தக்கனன்னதுதெரிந்துமிகமனம்புழுங்குபின்னும்
புத்திரர்பலரைப்படைத்துமுன்போலப்பொருத்தினனேவினனம்மா. (௫)

அந்தமைந்தரையுமுந்தைமைந்தரைப்போலாக்கினனாரதமுனிவன்
வெந்தசிந்தையனாய்த்தக்கனென்பவனும்வீணைமாமுனிவனைநோக்கி
நந்தவண்சிருட்டிசெய்திடாவகையென்னலமகார்தமைக்கெடுத்தமையா
னுந்தநீமனைவிமகவிழந்தெங்குமுழிதருவாயெனச்சபித்தான். (௬)

தீய்வெம்பாசத்தளர்ந்துமாழாந்துதிரிதராவண்ணமுன்மகாரை
நாயனொண்கமலச்சேவடிகலந்துநலம்பெறவிடுத்ததெண்ணாது
தீயநீயெனனைச்சபித்தனையதனாற்றேவர்கோனாயவெம்பெருமான்
பாயவெஞ்சினக்கோட்பட்டுநின்றலையும்பறிபடுவாயெனச்சபித்தான். (௭)

முனிவரன்சாபங்கொடுத்துநீங்குதலுமொய்பெருந்திறலுடைத்தக்கன்
பனிமதிநுதலார்பலர்வரப்படைத்துப்பலர்கொளக்கொடுத்தனன்பின்னுங்
கனிதரவண்டபகிரண்டமனைத்துங்கலந்தபல்லுயிர்களுமீன்று
தனியொளிர்தாயைமகளெனப்பெற்றான்றவத்தின்மேற்சிறந்ததொன்றுண்டோ.

சதியெனுமகளையுலகெலாங்களிப்பத்தன்றிருமனையகம்போந்து
பொதிதருகருணைப்பெரும்பிழம்பாயபூரணன்மணந்தருளியபின்
விதிவலிதாலோவாணவமலத்தின்வீக்கமோமூவகையுயிர்க்கும்
பதியினையந்தமதியிலிமருகர்பலருளுமொருவனுமதித்தான். (௯)

அனையவன்மதிப்போர்நகையனும்வாளாவணுகினன்சதியொடுங்கயிலை
துனையமற்றொருநாண்மதியெனுமருகன்றுடியிடையொருமகள்பாலே
நினைதருநசைவைத்ததுதெரிந்ததனைநீக்கெனக்கொளாமைதேர்ந்தவனை
யினைதரவொருநாட்கொருகலையாத்தீர்ந்திறுதியென்றுரைத்தனன்கொடியோன்.

கொடியவன்மொழியானாட்குநாளொன்றுகுறைவதுகண்டவவ்வாலோ
னெடியவன்முதலாமமரருமஞ்சிநீத்ததுங்கண்டுவான்கயிலை
யடிகளையடைந்துகாத்தியென்பதன்முனங்கைதொட்டெடுத்தனன்சடில
முடிமிசைவைத்தோர்நாமமும்பூண்டானுருக்கினுமம்மதியே. (௧௧)

அதுதெரிதக்கனாகியமூர்க்கனழுக்கறுத்திருந்தனன்பின்னர்க்
கதுமெனவெழுந்துமதுமலர்ப்பொகுட்டுக்கடவுளையடைந்தடிபணிந்து
சதுமுகமகமொன்றியற்றுதல்குறித்தேன்றகுமிடம்புகலெனவனையாள்
விதுமுடிப்பெருமான்விரைந்தருள்புரியுமேதகுதலமுளத்தாய்ந்து. (௧௨)

குணகடன்மேல்பால்யோசனைக்கப்பாற்குலவுகாவிரிக்கரைத்தென்பா
லணவுமோர்வநமுண்டதைநகர்கண்டேனப்பெருந்தானத்தினெல்லை
புணர்தருஞ்சுற்றும்யோசனையளவுபோற்றுமவ்வெல்லையுளழலோற்
றுணர்தருதிசையினழல்வளர்த்திடுதலுத்தமமாகுமென்றுரைத்தான். (௧௩)

மலரவனுரைத்தமொழிசெவியேற்றுமண்ணிடைப்புலவொடுமிழிந்து
கலரனுகரியவத்தலநோக்கிக்கரிசிலதென்றுவப்புற்று
வலர்புகழ்தெய்வத்தச்சனைக்கூவிமகம்புரிசாலையொன்றீங்கே
யுலர்தலில்வண்ணம்புரியெனப்பணித்தானொய்யெனப்புரிந்தனனவனும். (௧௪)

திசையொருநான்குமுயர்மதிலெடுத்துத்திகழநால்வாயிலும்போக்கி
யசைவில்கோபுரமுமமைத்ததனுள்ளாலலங்குபொற்சாலையொன்றாக்கி
வசைதவிர்குண்டமண்டலம்வேதிவயங்குமேகலையொடுமமைத்திட்
டிசைபெறுமறையோரிருப்பதற்கதவத்தியன்றவாதனங்களுமாக்கி. (கரு)

திசைபுரப்பவருமாயவனுதித்தேவருமிருப்பதற்கிடமு
நசைகெழுமடவார்நயந்துநீராடுநன்மலரோடையுங்குளனு
மிசைபதமமைக்குமிடங்களுமறையோர்விலாப்புடைவீங்கவுண்டிடற்காம்
பசைதருமிடமுஞ்சுவணமுறபலவாம்பண்டங்களமைத்திடுமிடமும், (க௬)

செறிதருமற்றையிடங்களுமமைத்துச்சிருக்குமுன்யாவையும்புரிந்தா
னறிதருதக்கனுளமிகமகிழ்பூத்தண்டராதியர்விளைந்தணுகக்
குறிதருதூதுசெலுத்துபுதானேகுலவயன்மால்புரத்தெய்தி
நெறிதருமகத்திறகணுகுமாறுரைத்துநீள்பெருங்கயிலையையடைந்தான். (கஎ)

வெள்ளியங்கயிலையடைந்தவனந்தியனுரைநேவண்டாதொருதனையே
யுள்ளியுட்புகுந்தான்கருணையங்கடலாங்கொள்ளரியாதனத்திருப்ப
வெள்ளியதரத்தான்வணங்கிலான்வணங்காவிரும்பெருங்குற்றமுமெண்ணான்
வள்ளியவெனைக்கண்டெழுந்திலானசாம்பர்வயங்குமேனியனெனவெகுண்டான்

தீயவூழடைந்ததக்கனோர்குணமில்சிவன்மகத்தவிகொளறகாது
மேயநானழையேனெனவகன்றொருதன்வேள்வியஞ்சாலையையுடைந்தான்
றூயநான்மறையுமுணர்தராப்பரமசுயம்பிரகாசனெம்பெருமா
ளுயவத்தனையுமறிந்துமற்றறியான்போலுமையொடுநகைத்தமர்ந்தான. (கக)

படுமகச்சாலையடைந்தவக்கொடியோன்பைந்துழாய்முகில்வரக்கண்டு
நெடுமரமெனமற்றவனடிவீழ்ந்துநிலவவெண்மகம்புரநதளித்தி
கடுவமர்களத்தனிவணுருவண்ணங்கழித்தனனெனவொன்றுமுரையான்
றடுவரியவன்போலிருந்தனன்கேடுசாருமேற்றடுப்பவரொவரோ. (௨0)

ஆயவக்காலைமலரவன்மகவானழலவன்கூற்றுவனிருதி
பாயநீர்க்கிறைவன்சதாகதியளகைப்பதிபுரப்பவனலீசானன்
மேயகிம்புருடர்கின்னரரியக்கர்வித்தியாதரர்வலிக்கருடர்
தூயமெய்ச்சித்தர்சாரணரெவருந்தொக்கனரம்மகச்சாலை, (௨க)

கதிரவன்மதியமுதற்பலகோளுங்ககனவாசிகளெனப்பட்ட
வதிர்தலின்மற்றையாவருமடைந்தாரடுதகருனுகர்நசையும்
பிதிர்விறக்கணையும்பெறுவதுகருதிப்பிறங்குவேதியரொலாம்புகுந்தா
ரெதிரில்பொன்மானத்தேறுபுதக்கனில்லுறையாவருஞ்செறிந்தார் (௨௨)

வந்தவர்பலரும்வெள்ளியங்கயிலைவளர்பெருமானுலகீன்ற
சுந்தரவுமையோடணைதராவிதமென்சொன்மினென்றொருவருக்கொருவர்
தந்தமுள்வினவிக்கொடுப்பவன்வெறுப்பிற்சாற்றுவதெவனெனவி[illegible]த்து
நந்தரங்கருமும்பார்க்கலாமென்றுநவின்றனர்பின்வரலுணரார். (௨௩)

யாவருநமதாணையிற்குழீஇயினரொன்றெக்கழுத்தங்கொடுதக்கன்
மேவருமிருத்துவிக்குகண்முதலோர்விதியுளியவரவரிருக்கும்
பூவருமிருக்கையிருந்திடப்புரிந்துபொலிமகப்பெருந்தழல்வளர்த்தான்
றூவருமயன்மாலாதியர்பலர்க்குந்தவாவினைப்பெருந்தழல்வளர்த்தான், (௨௪)

பலமுனிவரர்நற்றநீசிமுன்னோர்பங்கயன்மாயன்முற்பலர்க்குங்
குலமறைமுடிக்குமெட்டவொண்ணாதகுழகனையிகந்திதுசெய்த
னலமலவென்றுமற்றைமுதலெடுத்தூகவிலவுமறுத்தனனவரு
மலமருமுளத்தார்வைதனரகன்றூரகல்பவரகல்கவென்றிருந்தான். (௨௫)

கெடுந்தொழிற்றக்கன்செயலிதுவாகக்கேழ்கிளர்பெருங்கயிலாயத்
தடுந்தொழிற்றரக்கினதளைக்கசைத்தவண்ணறனிணையடியிறைஞ்சி
விடுந்தொழில்கருதாக்கருணையெம்பிராட்டிவெவ்வினைத்தந்தையாந்தக்கன்
புடுந்தொழிறவிர்ப்பானவன்மகங்காணப்படர்குவனிறைவயானென்றாள். (௨௬)

என்றலுநம்மையிழித்துரைதக்கனெனும்பொறியிலியுனைமதியான்
பொன்றலுந்தவிரானங்குநீபோதல்புல்லியதாகுமென்றருள
வன்றலுமவிரோதித்தலுமில்லாயாயினுமடியனேனுங்குச்
சென்றலும்பகலுந்தெருட்டிநிற்கடிமைசெய்குவனவனையென்றெழுந்தாள். ௨௭

எழுதலுந்தீங்குவருவதுதிண்ணமெனப்புகன்றெம்பிரான்விடுத்தான்
முழுதுலகீன்றபிராட்டியும்வேறுமுன்னலடிணையும்வேண்டாளாய்
வழுவறுபெரியோர்தொழுநணிபள்ளிமருவினளாங்குநின்றெழுந்து
பழுதறவடுத்தோர்க்கருடிருச்செம்பொன்பள்ளிவந்தடைந்தனண்மா ௨௮

ஆங்குநின்றெழுந்துபற்பலவிரிச்சியடுத்தடுத்துறத்தடைசெயவும்
பாங்குகொளுள்ளத்தெண்ணலளாகிப்பாதசாலம்புலம்படையத்
தேங்குதன்காதற்றிறத்தினாற்கொடியோன்றீமகச்சாலையையடைந்தா
ளோங்குபேருலகத்துயிரொலாமொருங்கேயுயிர்த்தினிதோம்புமெம்பிராட்டி. ()

பிறைநுதறகருங்கட்செய்யவாய்வெண்பற்பிராட்டிநேர்வந்துநின்றிடவுங்
கறைமனத்தீயகொடியவன்கண்டுங்கண்டிலாதவனெனவிருந்தான்
மறைமுதற்கலைகள்பற்பலவுணர்ந்துமாசறத்தெளியினும்பெருமா
னிறையருள்சாலாக்கயவரைவிடுமோநிகழ்பெருங்கருமலச்செருக்கு. (௩௦)

விழித்தகண்குருடாவிருக்குஞானியர்போல்வெய்யவனிருத்தலுமழுதைப்
பழித்தமென்மொழியெம்பிராட்டியுநெஞ்சம்பதைதைத்தவணினறுகாதல்
கொழித்ததன்றாய்பாலடைதனளவளுங்கொழுநனொத்திருந்தனள்பாச
மொழித்தவண்மீட்டுநதக்கன்முன்னடைந்தாளுறச்சினந்தனளிதுசொல்வாள்.()

நிமதியமைந்ததியற்கையோவன்றிச்செயற்கையோமறைகளாயிரமுந்
தாமதியாதவொருபரம்பொருளைத்தத்துவங்கடந்தபேரொளியை
நீமதியாமலிகழ்ந்ததென்னிகழ்ந்துநீரொழுமொக்குளிற்சிதைவாய்
தூமதியார்க்குமில்லையோவிங்குச்சூழ்ந்துளாரறிவுமிப்படியோ. (௩௨)

என்றுவான்கருணையிறைவிசொன்மாற்றமிருசெவியேறலுங்கன்று
நின்றுநீயுரைக்குமிதிற்பயனில்லைநிரம்பியதாமதகுணத்தன்
றன்றுமாமகத்துவரத்தகாணீயுந்தொடர்புடைமகளலையென்று
னன்றுமாமனத்தன்மகளலையென்றதறிதரினுண்மையேயன்றே (௩௩)

கொடியமாபாவியிம்மொழிசொலவுங்குடங்கையாலஞ்செவிபுதைத்து
நெடியவேற்கருங்கணம்பிகையந்தோநின்மலன்வார்த்தையுமிகந்து
கடியபல்விரிச்சிநிகழ்ச்சியுமெணாதுகழிமடன்பாலடைந்ததற்கு
முடியவாங்கழுவாயிவன்மகளென்னுமுறையொழிப்பாமெனக்கருத. (௩௪)

ஆயவக்காலைநடுங்கியதவனியசலங்கள்வெடித்தனககுபம் *
மேயவெண்களிறுநிலைகுலைந்தழிந்தவிண்ணின்றும்வீழ்ந்தனவுற்கை
பாயபல்லுயிருமலரவன்மூடியப்படுதினமிதுகொலென்றயிர்த்த
காயநின்றதிர்ந்துவீழ்ந்தனவுருமுக்சணமுடுக்கணமெலாமுதிர்ந்த. (கரு)

இதுநிகழ்காலையொருபெருவிருக்கத்திணர்மலர்க்கோட்டின்மேனின்றுங்
கதுமெனநொச்சியிலைபுரைபைந்தாட்கலாபமாமயிலொன்றுவீழ்ந்து
முதுபுகழுமையாள்கேசபாரந்தனினமெனமுந்திவந்தடைய
மதுமலர்க்கூந்தன்முதல்வியுமுள்ளமகிழ்தரவதையனைநோக்கி. (கசு)

அஞ்சலைதோகாயஞ்சலையென்னுவாரருளபயநன்களித்தாள்
விஞ்சலையுடுத்தபுடவிவாழுயிர்க்கும்விண்ணுலகத்துவாழுயிர்க்கு
நஞ்சலையெயிற்றுப்பாந்தள்வாழுலகநண்ணியவுயிர்க்குமெஞ்ஞான்று
நெஞ்சலைதுயரநீங்கிடவபயநிரப்புவாட்கீதுமோர்புகழோ. (கஎ)

பிணிமுகமுவகைபெறவருள்செய்தபின்னர்வெந்தக்கனைநோக்கிக்
கணிதமில்பாவக்குழிசியாங்கயவகளைகணெவ்வுலகிற்குமாய
துணிபரம்பொருளையிகந்தனையதனாற்றொலைந்துநீகெடுகவின்னேயிவ்
வணியுறவுடம்புமொழிப்பலென்றியோகத்தருந்தழலெழுப்பினளம்மா. (கஅ)

அன்னவேசந்தழலிற்புகுந்தனண்மறைந்தாளமரர்கள்கண்டுளம்பதைத்தார்
மின்னகுகுலிசத்தவன்முதலெண்மர்மெய்நடுநடுங்கினரிருநதார்
பன்னகப்பாயற்பகவனுமலர்மேற்பனவனுங்கண்டுநெட்டுயிர்த்தா
ருன்னருமற்றையுயிரொலாம்பட்டதுரைத்திடவல்லவர்யாரே. (கக)

அறிவிலரானோர்பெருந்திருவடையினப்பெருந்திருவொடுஞ்சிதைவர்
செறிதருமுலகத்தென்பதுதேற்றநதீவினைத்தக்கனம்பிகையை
நெறிமகளாகப்பெற்றனன்மகளுநீத்திடத்தானும்வாழ்வொழிந்தான்
பிறிதெவனுரைப்பாமேலினிநடக்கும்பெற்றியுமெடுத்துரைசெயவாம். (உ0)

தக்கன மகம்புரிபடலம்முற்றிற்று.

ஆ திருவிருத்தம் சருக.

## யாகசங்காரப்படலம்.

நயங்குலவாததக்கனருமகம்புரியுமாறு
மியங்குபல்லமரரோடியூவருந்தொக்கவாறுந்
சயங்குலவிறையைநிந்தைசொலுமாறுஞ்சார்ந்ததேவி
வயங்குருமறைத்தவாறுமசதியாழ்முனிவனோர்ந்தான். (க)

கருவியாழ்நழுவவேணிகட்டவிழ்ந்துலையச்சீற்ற
மருவியோடுபுவேதண்டமருவினன்றனியேவைகும்
பருவியாளப்பூட்செல்வப்பரனையஞ்சலித்துநின்று
வெருவியான்போந்தேன்றேவிவெந்தழன்மறைந்தாளென்றான். (உ)

ஆவயினடந்ததென்னென்றறிந்தறியான்போற்கேட்குந்
தூவயிற்கழுமுளார்க்குச்சிறுவனிதடவுந்தோறும்
பாவயினிரம்பப்பாடும்பத்தர்யாழ்க்கருவிமேலோ
னாவயினடுக்கந்தோன்றநடந்தனவனைத்துஞ்சொற்றான். (ந)

கருபம் - திசை.

முனிவரனுணர்த்தலோடுமுடிவிலாமுனிவுபொங்கப்
பனிமதிமுடித்தபெம்மான்படர்சடையொன்றுபற்றித்
தனிநிலத்தறைந்தானாகத்தனைமுதலுலகம்யாவு
நனிநடுநடுங்கவீரநம்பன்வந்துதயஞ்செய்தான். (௪)

திருமுடிவிசும்புபோழத்திசைபுயந்தடவாநிற்க
மருமலர்ச்செய்யபாதமண்பரப்பனைத்துமாகக்
கருகிருளனைத்துமேய்ந்துகண்ணெழுசுவாலைபொங்க
வொருபரனடிக்கீழ்த்தாழ்ந்தீதுரைக்கலுற்றனனவ்வீரன். (௫)

எழுகடற்புனலுமுண்கோவிரவியுமதியுஞ்சூழு
முழுவரைபெயர்க்கோமற்றைவரையெலாமுறித்தல்செய்கோ
கெழுபுவியடங்கவாங்கிக்கேழ்கிளர்வாயிற்பெய்கோ
செழுவியவண்டமெல்லாஞ்சிதர்படச்சிதைத்தல்செய்கோ. (௬)

அதிர்கழனெடியமாலையயனையிந்திரனையின்னே
பிதிர்தரவங்கைவைத்துப்பிசைந்துபொட்டிடுகோவான்மீ
னுதிர்தரவதிர்க்கோயாவுமொடுங்கிநீறுகநோக்கோ
வெதிரடிமுளைத்தாய்செய்யவேண்டுவதென்னையென்றான். (௭)

தீயவன்றக்கனென்னுஞ்சிதடனோர்வேள்விசெய்வான்
மேயநந்தமக்குப்பாகமிலையெனவிளம்புகின்றா
னாயவன்றனைச்சார்ந்துண்டென்றால்விடுவிலையென்பானேற்
சாயவங்குள்ளாரோடுஞ்சாடுதிபோதியென்றான். (௮)

இத்தனைதானோவையனிடும்பணியெனக்கென்றெள்ளி
யத்தனையுருவுவேண்டாதமைதருமுருவுதாங்கி
முத்தனையுலகுக்கெல்லாமுதல்வனைப்பணிந்துபோற்றி
நத்தனையயனைவாட்டுநம்பிரானெழுந்தானன்றே. (௯)

வரைபொடிபடுக்கவேண்டின்வானத்தைமாய்க்கவேண்டிற்
றரைமுழுதெடுக்கவேண்டிற்சலதியைக்குடிக்கவேண்டி
னுரைகெழுமொன்றேசாலும்பூதங்களுலப்பிலாத
விரைதரத்தொடர்ந்துமேவவேள்வியஞ்சாலைபுக்கான். (௧0)

மகவினைச்சாலைபுக்கவாள்வலிவீரர்வீரன்
றகவொருநால்வாயிற்குந்தவாப்பெருங்காவல்வைத்துட்
புகவவன்வரவுநோக்கிப்புலிப்போத்தின்வரவுகண்ட
ககனமான்குழாங்களென்னக்கலங்கினரமரரியாரும். (௧௧)

கொடுமகமிழைக்கும்பாவக்குழிசியாந்தக்கன்முன்போ
யிடுமவியெம்மாற்குண்டோவில்லையோசொற்றியென்றான்
கெடுவதுகுறுகப்பட்டான்கெடாதபேரகங்காரத்தாற்
கடுவுணிதனக்குப்பாகங்கரையாதுவேதமென்றான். (௧௨)

என்னவுமிருக்குவேதம்விரைந்துருவெடுத்துவந்து
முன்னவனுலகுக்கெல்லாமுதல்வனயன்மாறேறு
வன்னவனொருவனேயெவ்வழன்மகங்களுக்குநாத
னின்னமுமெமக்குநாதனென்றெடுத்தியம்பிற்றன்றே. (௧௩)

அரியயனாதிவானோரனைவருமுய்யுமாறு
கரியநஞ்சமுதாக்கொண்டகண்ணுதற்பிரானையன்றி
யுரியவன்யாவன்வேள்விக்கும்பர்தங்குழாத்துளென்றும்
பெரியவனியாவனென்றுபேசியதிரண்டாம்வேதம். (கச)

எவனருள்வலியாற்பாசமிரிதருமுத்தியெய்து
மெவனருள்வலியாலோரைந்தொழில்களுநடக்குமின்னு
மெவனுமையவன்மணாளனெவன்றிரிபுரந்தகித்தோ
னவன்மகத்திறைவனாமென்றறைந்ததுமூன்றாம்வேதம். (கரு)

எவன்விழிபுதைப்பவெங்குமிருளுறும்யோகின்மேவி
யெவனமர்ந்திருக்கவெல்லாம்புணர்ப்பறுந்தனைமுன்னெட்டு
மெவனுடைவடிவமாகுமெவன்பசுபதியாயுள்ளா
னவன்மகத்திறைவனாமென்றறைந்ததுநான்காம்வேதம். (கசு)

மறையொருநான்குமிவ்வாறுரைக்கவுமனத்துக்கொள்ளாக்
கறையுடைத்தக்கன்றன்மைகண்டுவெண்குடிலைதானு
நிறையுருவொன்றுதாங்கிநேர்வந்துபுகலாநிற்கு
முறையிலாமடவற்கியாதுமொழியினுமாவதென்னே. (கஎ)

மறைபலவற்றினுக்குமூலம்யான்வகுத்தல்கேட்டி
நிறைதருமெனக்குமற்றைநெடியவன்முதலானோர்க்கு
மறையுலகினுக்கும்யாகமனைத்திற்குமிறைவனாவான்
பிறைமுடியவனேயென்றுபிரணவம்பேசிற்றன்றே. (கஅ)

மொழிதருமனைத்துங்கொள்ளான்முன்னையிற்கனன்றுமூர்க்கன்
பழிதருசுடலையாடிபடுதலையெலும்புபூண்பா
னிழிதருதமோகுணத்தனெனப்படுமுருத்திரற்குப்
பொழிதருமவியூணல்கேனென்றனன்புன்மையாளன். (கக)

அவனஃதுரைத்தலோடுமாண்டகைவீரச்செம்மல்
சிவபரநிந்தைகாதுறுமைந்துளச்சினமெழுப்பக்
கவலருமொருகைவாளாலவன்றலைகழியவெட்டிக்
குவலயநடுங்கயாகருண்டத்துவீழ்த்திறனால். (உ0)

உழையினதுருவங்கொண்டாங்கோடும்யாகத்தின்சென்னி
பிழையுறவாளால்வெட்டிப்பிரமனுநெடியமாலுங்
குழைதரத்தண்டான்மொத்திக்குவலயக்கிடக்கைசெய்து
விழைகதிர்முகத்தறைநதுபற்களைவீட்டினானே. (உக)

மதியவனுடலந்தேயவண்கழற்காலாற்றேய்த்தான்
பொதிதருமழலினோற்குப்பொலிதருகரமறுத்தான்
வதிதருபகனென்பான்றன்மணிமலர்க்கண்கள்சூனமுன்
குதிதருமகவானுயகுயிலிருசிறகுமீர்ந்தான். (உஉ)

தலையமைவானோர்யார்க்குஞ்சாலுமித்தண்டமாற்றி
நிலையமைவடிவாளாதிநிகழ்பலபடைகளானும்
புலையறிவமைந்தமற்றைப்புத்தேளிர்களுக்குத்தண்டந்
தொலைவறச்செய்தான்பூதத்தொகைகளுஞ்செய்யலுற்ற. (உங)

கரமிழந்தாருஞ்சில்லோர்காலிழந்தாருஞ்சில்லோ
ருரமிழந்தாருஞ்சில்லோரொளிருத்தமாங்கமென்னும்
பரமிழந்தாருஞ்சில்லோர்பல்லிழந்தாருஞ்சில்லோர்
வரமிழந்தாருஞ்சில்லோர்வாயிழந்தாருஞ்சில்லோர். (உச)

சிவநிந்தைசெய்தபாவத்தியனைநோக்குங்கண்ணு
மவமிகுமனையான்வார்த்தையடைதருசெவியும்பொல்லாத்
தவறினுற்கெதிர்சொலர்ததாலுமாங்கிழந்தாரின்னும்
பவமிலாற்பிழைத்தபாவம்பாறுமோவெளிதினம்மா. (உரு)

மூலையிழந்தாருஞ்சில்லோர்மூக்கிழந்தாருஞ்சில்லோர்
தலைமயிரிழந்துளாருஞ்சிலர்தவாதவையுடுத்த
கலையிழந்தாருஞ்சில்லோர்கருத்துமுற்றுழுதத்த
நிலையிழந்தாருஞ்சில்லோர்நிரம்பியமடவார்தம்முள். (உசா)

விலாப்புடைவீங்கவுண்டேமலம்விளங்கவியாமாட்டேன்
குலாப்பெறக்கவர்ந்தேமல்லேந்தக்கணைகொளலுந்தீர்ந்தேங்
கலாய்த்தவிக்கொடியாற்சார்ந்துகலங்கவம்மானத்தோடின்
பலாப்பழியடைந்தோமென்றேயழுதனர்மறையோரெல்லாம். (உஎ)

விதிவழிபுரிந்தகுண்டமண்டலம்வேதிமுற்றுந்
துதியறச்சிதைவுசெய்துந்துவன்றுநெய்க்குடமுடைத்தும்
பதிதரவிருந்தபற்பல்பண்டமுமழலிற்பெய்துங்
கொதிசினக்குறுத்தாட்பூதர்செய்தவைகுணிக்கப்போமோ. (உஅ)

பண்ணியயாகசாலைபாழ்படுத்திந்தவண்ண
நண்ணியமகத்தீமாயநகுசினத்தீயுமாய்த்த
புண்ணியவிமலவீரபத்திரப்புத்தேளாங்குத்
தண்ணியசிவபிரானைத்தன்மனத்துறநினைந்தான். (உக)

வெள்ளியங்கிரியின்மேலோர்பொன்மலைமேவிற்றென்ன
வள்ளியவிடைமேற்றோன்றிமலமாயைகன்மமூனறுந
தள்ளியமுனிவர்பலலோர்சயசயசயவென்றேத்த
வொள்ளியமேனிக்காநதியுறுதிசையனைத்தும்போர்ப்ப. (௩௦)

குடைகொடியாலவட்டமொலியல்கோண்கொண்டதண்ட
மிடைசெய்கோண்கொள்ளாத்தண்டஞ்சாமரைமின்னிர்சாந்தாற்றி
யடைதருபிறவும்பூதரங்கைகொண்டமைந்துசூழ
மடையுடைநதென்னச்சூதர்மாகதர்விருதுபாட. (௩௧)

செறிமலர்மணங்கவர்ந்துதென்றலங்கன்றுலாவ
மறிதிரைசுருட்டுங்கங்கைமௌலிமேற்றிவலைவீசக்
குறிகெழுநிலவுகான்றுகுளிர்பிறைதயங்காநிற்க
வறிவுருவாயபெம்மானுவயிற்காட்சிதந்தான். (௩௨)

அண்ணலைக்காண்டலோடுமடிபணிந்தெழுந்தான்வீரப்
பண்ணவன்யாகசாலைபாழ்பட்டவாறும்யாருந்
துண்ணெனத்துடிக்குமாறுநோக்கியசுயம்புமூர்த்தி
யெண்ணிலாவிரக்கமுற்றுன்பூதர்களிளைத்தார்த்தாரால். (௩௩)

பரவியகருணைமூர்த்திபத்திரப்பிரானைநோக்கி
விரவியவிவரையெல்லாம்விரைந்தெழுப்பிடுகவென்றான்
வரவியலவனுந்தாழ்ந்துமாண்டவர்பலருமின்னே
யுரவுபெற்றெழுகவென்றானுறக்கமுற்றெழுந்தார்போல. (௩௪)

எழுந்தனரயனுமாலுமெழுந்தனர்திசைகாப்பாள
ரெழுந்தனரமரர்சித்தரெழுந்தனர்கருடர்நாக
ரெழுந்தனர்விஞ்சைவல்லோரெழுந்தனர்கதிர்முற்கோள்க
ளெழுந்தனர்செவ்வாய்மாதரெழுந்தனர்மறையோரெல்லாம். (௩௫)

மாயவனாதிவிண்ணோர்வள்ளலைவிடைமேற்கண்டு
பாயபேரச்சத்தோடுபரந்தெழுநாணும்பூப்பத்
தூயவன்றிருமுகம்பார்ப்பதற்குளந்துணியாராகிச்
சேயவந்நிலத்திற்சேற்றுப்பணிந்தெழல்செய்யாராக. (௩௬)

அதுதெரிந்தமலச்சோதியனைவருமெழுகவென்னக்
கதுமெனவெழுந்தெல்லோருங்கைதலைக்குவித்துநின்றார்
பதுமனைமாலைநோக்கிப்படுமகத்தெமக்குப்பாக
முதுபுகழுடையீர்தாரீரோவெனமொழிவான்மாயன். (௩௭)

அடியரோமெந்தஞான்றுமாணவமலக்கோட்பட்டுக்
குடிகெடுகின்றோநீயுங்குரங்குபோலாட்டுவிப்பாய்
செடியுடலேழையேங்கள்செய்பிழைபொறுத்தாட்கொள்ளும்
படியிரந்திரந்துவிண்ணப்பஞ்செய்வேம்பிறிதென்செய்வேம். (௩௮)

கொடுவிடமெழுந்தஞான்றுகொடியரோமிரந்துவேண்டத்
தடுவருங்கருணையாலேசமைந்தவின்னமுதாக்கொண்டு
வடுவகிர்க்கண்ணாரெங்கண்மனைவியர்கழுத்திற்பூண்ட
விடுசுடர்ச்செம்பொன்காத்தாய்மேலினியுரைப்பதென்னே. (௩௯)

இதுநிகரனேகமாகவியற்றியுமறந்துநாங்கள்
கதுமெனப்பிழையேசெய்வோங்கண்டித்தபின்புதேர்வோ
முதுபுனல்விலக்குங்காலையொழிதரும்பாசியம்மா
வதுசெயாவிடின்முன்போலாமற்றெங்கள்செய்கைநாளும். (௪௦)

ஆதலினின்றுநாங்களவமதித்திருந்ததற்காக்
காதலினடிகள்கண்டித்ததுபெருங்கருணையாகு
மேதகுமிதற்குக்கைம்மாறேதுண்டுமெய்மையேயுன்
பாதபங்கயங்கள்பல்காற்பணிதரலன்றியைய. (௪௧)

என்றுரைத்தடியில்வீழ்ந்தவிணர்த்துழாய்மாலையாற்கு
நன்றுளக்கருணைபூத்துநாயகனுரைக்கலுற்றான்
குன்றுகைக்கொண்டாய்நீயுங்கூடியபிறருமின்னே
சென்றுமுன்பிரமன்போற்றச்சிருட்டிநாந்தருமோர்தேத்து. (௪௨)

வயங்குநங்குறியொன்றுண்டுமற்றதுகண்டுபோற்றி
லியங்குறுபாதகம்போமெம்மருட்பேறுமுண்டாம்
பயங்கிளர்றுங்கடமைபறிசெய்தோமித்தேத்தற்றாற்
றயுங்குமித்தானமென்றும்பதியலென்றொருபேர்சார்க. (௪௩)

இத்தலஞ்செம்பொன்பள்ளிநனிபள்ளியின்னம்பல்ல
முத்தலம்படைக்குமாற்றன்முளரிமேலவற்குநல்கு
மத்தலத்தெல்லையுள்ளவாதலாலிவைகண்டோர்தாங்
கைத்தலநெல்லிபோலுமத்தலங்கண்டோராவார். (௪௪)

என்றுரைத்தரியைமற்றையிமையவர்தம்மைப்பேரக்கி
யொன்றுதன்பாங்கர்நிற்குமொண்படைவீரற்பாரா
நன்றுநீயுனையதேத்துநலங்கொளப்பொலிகவென்று
குன்றுவிற்குழைத்தகோமானவற்கருள்கொடுத்தபின்றை. (௪௫)

சூக்குமவுடம்புதாங்கியொருபுறந்துதைந்துநிற்கும்
வாக்குமனுநீதச்சீர்வாய்ந்தபூரணியைநோக்கிப்
போக்குநீதவிர்தியென்றதேற்றிலாய்போதல்செய்தாய்
வீக்குமற்றதற்குத்தக்கபயனுமேதகவிற்பெற்றாய். (௪௬)

எனவுரைத்தருளநாணியிறைஞ்சினளெம்பிராட்டி
கனமருள்கண்டன்மேனிகழித்திடும்பொழுதோர்தோகை
யினமெனவடையப்பாதுகாத்திரங்கினையாலறாு
லனநடையணங்கேதோகையாயதோருருவங்கொண்டு. (௪௭)

பிரமன்முனெமைப்பூசித்தபெருந்தலத்தெய்தியாங்கே
வரமுறநமைப்பூசித்துமருவுதியாமுமாங்குப்
பரவுமோர்மஞ்ஞையாகிப்பயிலுவோந்துணையாயின்னே
கரவறச்சேறியென்றான்கடுவிடைநடாத்தினானே. (௪௮)

விடைநடத்தியநங்கோமான்விரிஞ்சனார்பூசைசெய்த
கடையுறலென்றுமில்லாக்காமருதலத்தைச்சார்ந்தாங்
குடையதன்குறியிலுற்றானும்பராதியர்பல்லோரு
மிடையறத்தொடர்ந்துசென்றாங்கியைதரவமர்ந்தாரன்றே. (௪௯)

யாகசங்காரப்படலம் முற்றிறறு.

ஆ திருவிருத்தம். ௫௦௦.

# மாயூரப்படலம்.

இலகவானவர்யாவருந்தம்பிழையிரிந்து
விலகமாமலராளியூர்மேவிடுமுன்னர்த்
திலகமாகியமூவர்தந்தேவருளசிந்தித்
துலகம்யாவையுமீன்றவளொருமயிலானாள். (௧)

பரவுநொச்சியின்பாசிலையன்னபைந்தாளும்
விரவுபேருலகடங்கமூடுஞ்சிறைவிரிவு
முரவுசேர்தரமேற்கவிவாலுமிக்கொளிரக்
கரவுதீர்மனவநம்பயில்பசுமயில்கவினும். (௨)

கலவுபல்லுயிர்ப்பயிர்தழைதரக்களங்கறுத்து
நிலவுவேணியொண்டடித்துறமறையொலிநிகழ்த்தி
யுலவுபேரருண்மழைபொழியொருமுகிலுவந்து
குலவுபற்பலவண்டமீன்மயினனிகுலவும். (௩)

வரையுதித்திடுமயிலென்றுமயிலியலென்றும்
புரையில்கேள்வியருருவகஞ்செய்தலும்போற்றி
யுரைசிறப்பவன்மொழித்தொகைசெய்தலுமொருவக்
கரைசெய்சாதிப்பேரெனமயிலாயினள்கவுரி. (௪)

பாயபச்செனுமொளியிறுறபண்புறவிடபம் *
மேயகொள்கையான் * முருகுபெற்றமைதலான்விடாம
லாயவார் * பணிகோறலாலறம்வளர்த்தவளா
நேயமாமயிலெனச்சொலநிலவியதன்றே. (௫)

அண்டநாயகியொருதிருமயிலுருவமையக்
கண்டதாமரைச்செல்வியுங்கலைத்திருமாதுந்
தண்டவாமலர்க்குழலயிராணியுந்தயங்கல்
கொண்டவேனையமாதருமயிலுருக்கொண்டார். (௬)

வளவநிந்திதைகமலினிமுதலியமடவா
ருளவரியாவருமொண்சிறைமயிலுருவுற்றா
துளவனாதிவானவரொலாஞ்சூழ்ந்தனராகத்தா
களவிலாமயில்சூழ்ந்தனகவுரிமாமயிலை. (௭)

ஆடுமோர்சிலவோர்சிலசிறைவிரித்தகவி
நீடுமோர்சிலநிலத்தடிதோய்தரநடக்குங்
கூடுமோர்சிலபந்தரிட்டெனக்குலாயப்பறக்கு
நாடுமோர்சிலநயந்தபூங்கொம்பரினண்ணும. (௮)

ஒருத்திமாமடமயிலுருவாதலுமுடனே
விருத்திசாலுமற்றவரொலாமயிலுருவிழைந்தா
திருத்திவாயிவளகோவுருவாதலுந்தொலையா
வருத்திகூருமற்றவரொலாங்கோவுருவானா (௯)

பெண்ணுருக்கொடுமற்றிவளபொலிதலும்பெண்மை
நண்ணுருக்கொடுபொலிகுவாமற்றைநல்லாரு
மெண்ணுருக்கொளுந்தலைவியெப்படியுலகெங்கு
மண்ணுருக்கொளுமேனையரப்படியனரே. (௧௦)

உலககாரணியாகியபரையொடுமேனோ
ரிலகமாமயிலுருக்கொடுநிகழ்தலையண்ணி
விலகவோரிடமின்றெனப்புவிமிசைமிடையுந
திலகமாகியநாகநாஞ்செறிந்தொளித்தனவே. (௧௧)

திசையினாகமுமஞ்சினசெறிந்துபாதலத்தி
னிசையுநாகமுமஞ்சினவிருகதிர்விழுங்கும்
வசையினாகமுமஞ்சினகத்துருமடந்தை
மிசையுமாத்துயாமூழ்கினளுவந்தனள்வினதை. (௧௨)

வலிசெய்நோன்பினுறபரணணியாக்கிடமகிழ்வுற
றொலிசெய்புள்ளரசினைச்சுகமோவெனவினவு
நலிசெய்பாந்தளுமுள்ளுறநடுங்கினவென்னிற
கலிசெய்மற்றுளபாந்தளுமெவைகலங்காத. (௧௩)

---

* விடபம் - மரக்கொம்பு - இடபம். * முருகு - இளமை - முருகக்கடவுள்.
* பணிகோறல் - பாம்பைக்கொல்லுதல் - ஆபரணங்களைக்கோலுதல்.

எங்குமாயினிக்காண்டலிவ்வதிசயம்பிரமன்
பொங்குபூசைசெய்தலத்துமான்மியங்கொலோபுளிகை
தங்குமான்மியமாங்கொலோமுசலிகடாமே
நங்குதிரவந்தடிதொழுதின்பமேநண்ணும். (கசு)

அந்தமாமயில்குமரனைவெரிந்புறத்தமைக்கு
மிந்தமாமயின்மடித்தலங்கைத்தலமிரண்டிற்
சந்தமேவுறவகத்தமைத்திடுமிதன்சால்பு
முந்தயாவர்காண்குவரெனவறிந்தவர்மொழிவார். (கரு)

பொருந்துபற்பலமாதராமயிலொடும்புவன
மருந்துகொண்டனமுன்வரவருமம்பிகைமஞ்ஞை
திருந்துவேதன்முன்பூசித்ததிருத்தலம்புகுந்து
வருந்துதீர்ந்துபல்வளமெலாநோக்கிடுகாலே. (கசு)

அரியமாதவரம்மயிலுண்மையையறிந்து
தெரியவாமறையோமறையந்தமோதிகழ்ந்து
பிரியமார்தரும்பிரணவமோசிவயோக
முரியநெஞ்சமோவித்தலமெனவுளமுவந்தார். (கஎ)

அதிசயத்தின்மேலதிசயமாகவவ்வேலை
கதியடுத்தவாக்கினிதருளகாரணமுதல்வன்
மதிநுதற்பிராட்டிக்குமுன்வழங்கியபடியே
துதிசிறப்புறுமொருமயிலாகிமுன்றோன்ற. (கஅ)

கண்டபுண்ணியமாமயில்கருதருமுவகை
மண்டவொள்விழிவழிச்செலீஇமனமதைமருவ
முண்டகாசனன்முகுந்தனுமறிதரமுடியா
வண்டநாயகமயிலிதென்றுர்வமுற்றனரே. (கக)

உரித்துநந்தமக்கிதுவெனவுணாத்தல்போறறோகை
விரித்துமேற்கவிதரச்செய்துவிளங்கிருசிறையு
மிரித்துமெய்யிலொன்றுவகைமுகமெழிலியையப்
பரித்துநின்றுநன்றுடியததிசயம்பயப்ப. (உ0)

வம்பலர்க்குழலுலகமீனறருண்மயில்காணக்
கம்பலைத்தெழுமறையெலாங்களித்துநின்றுட
நம்பலுற்றபல்சராசரங்களுநயந்தாட
வம்பலத்தினிதாடுறுமயிலுவந்தாடும். (உக)

அமரமாதரோடொருபுறமயிலவாய்நோக்கச்
சமரவேல்விழியம்மயிறுளங்கைத்தாக்கப்
பமரமார்தொடையுமபர்கள்பழிச்சிநின்றேத்தக்
* குமரனும்முனமாடியகுருமயிலாடும். (உஉ)

கிள்ளைமேவியமலர்க்கரக்கிளர்விழிக்கயறேய்
வள்ளைவார்குழையுமையெனுமாமயில்காண்த
தொள்ளையுள்ளமாலயன்முதற்பலரையுந்தொலைத்து
வெள்ளைநீறணிந்தாடுறுமயில்வியந்தாடும்.

* குமரன் - கௌமாரபருவமுடையவன்.

அலகிலண்டமுமீன்றருளியமயில்காண
வலகிலண்டமுமதிர்தரவெழுந்தவணை
வலகிலாற்றலினொருபதம்விண்பொதிர்த்தனைய
வலகிலற்புதநடஞ்செயுமயிலுவந்தாடும். (௨௪)

புனிதமங்களபூரணமாமயினோக்க
முனிவரஞ்சலித்தரகரகரவெனமொழியப்
பனிபரந்தகண்ணடியர்மற்றியாவரும்பரவத்
தனியலமர்ந்துநன்னடம்புரிமயிறகவாடும். (௨௫)

இறைவியென்றுலகேத்திடுந்திருமயில்காண
மறையினர்தமும்வான்றவயோகியருளமுங்
குறையறும்பெருந்தானமாக்கொண்டுகூத்தாடும்
பிறையிருஞ்சடைப்பெருமயிறங்கிநின்றாடும். (௨௬)

அறைந்தவண்ணமொண்சரபமாகியமயிலாடக்
குறைந்தமாமதிநுதன்மயிலன்புமீக்கூர
நிறைந்தபற்பலமயில்களுநோக்கியுண்ணெகிழ
மறைந்தீதொன்றுமின்றாகநோக்குபுமகிழ்ந்தன்றே. (௨௭)

ஆங்குநிற்குமாந்தருமிசைப்பயின்றிடுமதன்கீழ்த்
தேங்குபேரொளியாயதன்செழுங்குறிநுழு
மோங்குவேதியன்பூசித்தகுறியுங்கண்டுவக்கு
நீங்குறுமயிலொடும்பசுமயினெறிதொடர. (௨௮)

சத்தனெவ்வுருக்கொள்ளுமவ்வுருவிற்குத்தகவே
சத்தியும்முருக்கொளுமெனச்சாற்றலுமிருக்கச்
சத்தியெவ்வுருக்கொள்ளுமவ்வுருவிற்குத்தகவே
சத்தனும்முருக்கொளுமெனறறையெழுந்தன்றே. (௨௯)

மன்றைநாடியாட்டயர்தருமறைமுடிமயிலு
நன்றையாதரித்ததுதெரிஞாலமீன்மயிலு
மொன்றையொன்றுநீங்காதமைந்துவகையிற்றிளைப்பப்
பின்றைநீங்கலற்றுவப்புமேயினபிறமயிலும். (௩௦)

ஆயகாலையினங்கசரீரிவாக்கொன்று
நேயமாமலராளிவாவியினெறிபடிந்து
தூயமாவடிச்சிவலிங்கபூசனைதொடங்கன்
றேயமாமணாமயில்செவியுறவெழுந்தன்றே. (௩௧)

அந்தவாசகங்கேட்டலுமுவகைமிக்கமையப்
பந்தமேதுமின்மஞ்ஞையவ்வாவியிற்படிந்து
சந்தமாவடிச்சிவக்குறிமுன்னுறச்சார்ந்து
நந்தமற்றதன்பொலிவினைநயந்துகண்டன்றே. (௩௨)

மஞ்சனஞ்செயப்பின்மலரருச்சனைவயக்கத்
தஞ்சுமின்றிநன்னிவேதநந்தவணதெடுத்தூட்ட
வஞ்சலித்திடக்கையிலேமருந்துதியறையக்
கஞ்சநேர்தருவாரியிலேமென்செயக்கடவேம். (௩௩)

என்றுதன்னுளத்தெண்ணுபுமானதபூசை
நன்றுசெய்திடத்தலைப்பிலேயாலெனநயந்து
வென்றுமேம்படுமயில்விழைந்தாட்டுதலாதி
யொன்றும்யாவையுந்தன்மனத்துறப்புரிந்தன்றே. (௩௪)

மாவின்மேற்செலீஇநறுந்தளிர்வாயினுல்வெளவுந்
தாவினம்பிரான்மேனிமேற்றதைதரச்சாத்துஞ்
சேவின்மேலவன்செய்யபட்டணிநதனனென்று
நோவின்மாட்சிசெய்கண்களாலினிதுறநோக்கும். (௩௫)

நாடுகொக்குமந்தாரையினறுமலர்கொணருங்
கூடுதம்பிரான்மெய்யெலாமறைதரக்குவிக்கு
நீடுவெள்ளியபட்டலங்காரத்தைநிகர்த்த
தாடுநம்பிரான்கோலமென்றதிசயமடையும். (௩௬)

முல்லைவெண்முகைகொடுவந்துமேனியைமூடு
மெல்லையில்லவற்கின்றுவெண்பதஞ்சமைத்திவைய
வொல்லைநன்கபிடேகித்ததொத்ததென்றுவக்குங்
கொல்லையேற்றணைமாவொடுகுலவுறச்சூழும். (௩௭)

கந்தியீருரிபோர்த்தவத்தம்பிரான்மேனி
நந்திவாசனைநாறுசெவ்வந்தியானயக்க
முந்தியெண்ணிலகோடுவந்துகொடுவந்துமூடு
மந்திவண்ணனென்பதுதகுமெனமனத்தமைக்கும். (௩௮)

துனனுமல்லிகைமலர்பலகொடுவந்துதொகுக்கும்
பன்னுமெம்பிரான்றனைச்சுத்தப்படிகசங்காசன *
என்னுமோருரைமெய்யெனவிரதயத்துவகை
மன்னுமாறுகொண்டெழுந்துமேற்செயுந்திறமதிக்கும். (௩௯)

பட்டியின்பலவன்னமாமலர்களும்பறித்துக்
கிட்டியெம்பிரான்கிளர்திருவுருவத்தைமூடு
மொட்டிநோக்கியிக்கோலம்வெம்புலியதளுடையான்
கட்டிநீத்ததுபோர்த்ததொத்திருந்தெனக்களிக்கும். (௪௦)

கோலமாகருங்குவளைமாமலர்பலகொண்டு
நீலமார்களத்தண்ணறனதிருவுருமறைக்குஞ்
சீலமார்முனிவரர்விடச்செறிநதவாரணத்தோன்
ஞாலமார்தரப்போர்த்ததொத்ததுவெனநயக்கும். (௪௧)

செறிதருஞ்செழுஞ்செருந்திகொண்மலர்பலசெறித்துக்
குறிதருநதிருமேனிமேற்குளிர்தரமூடும்
பறிதரும்பலகாசுகொண்டன்புளமபதித
லறிதரும்படியாட்டியதொத்ததென்றமையும். (௪௨)

புத்தகோடிகட்கெளியவனுகியபரம
சித்தநாயகன்மேனிமேற்கோங்கங்கணிரப்புஞ்
சித்தமின்புறநோக்குநஞ்சிவபிரான்செம்பொ
ளுத்தவண்ணனென்றுரைத்தன்மெய்யேயெனவுகளும். (௪௩)

---

* சங்காசன - ஒத்தவன்.

குலவுகொன்றையினறுமலர்பற்பலகொணர்ந்து
நிலவுதம்பிரான்மேனியுட்படமிசைநிறைக்குங்
குலவுயோகியர்பிரணவுநீதுட்குலவுறுமா
கலவுமெய்ப்பொருளென்பதுமெய்யெனக்களிக்கும். (சச)

மேயசீறிலைவில்வங்களநேகமாக்கொணர்ந்து
நாயனூர்திருமேனியுண்மறையமேனூட்டும்
பாயமூவகைச்சத்தியுட்பொருளெனப்பண்பி
னுயமேலவர்கூறன்மெய்யயேயெனவமையும். (சரு)

உறுவதாகவிவ்வண்ணமொண்பூசனைமூன்றாற்
றறுபதாண்டுநன்காற்றியாவயினமர்ந்தன்று
பெறுவதென்னிதனமேலெனப்பெரிதுளங்களித்த
திறுவதாயதுமறமுவர்ப்பரவைசூழிடத்தில். (சசு)

தலையெடுத்துநின்றூர்த்தனதருமங்களனைத்து
நிலையெடுத்தபனமுனிவருமுவகையுணிறைத்தார்
மலையெடுத்தகைக்குடையினுன்முதலியவானேர்
கொலையெடுத்தசூறபடையினுனருள்குறித்தமர்ந்தார்

உற்றவான்புகழ்நகௌரியேமயூரமாயுவந்து
நற்றவஞ்செயப்பெற்றகாரணத்தினைலஞ்சேர்
மற்றவத்தலங்கௌரிமாயூரமென்றொருபேர்
பெற்றதிவ்வுலகத்தொடெவ்வுலகமும்பேச.

மன்னுமேன்மைசால்கௌரிமாயூரமென்றொருகாற்
பன்னுவாரொனினவாபெரும்பாதகரொனினுந்
துன்னுமப்பெரும்பாதகமடியறத்தொலைய
வுன்னுமுத்தராகுவரொனினுரைப்பதென்னினியே. (சகூ)

வேதமுஞ்சிறப்பாயவாகமங்களுமிக்க
போதமேயருள்புராணமுமறறுளநூலு
மேதமோதுமிக்கௌரிமாயூரமாமிசைத
வாதமநதிரமெவறறினுமுயாபெனவழங்கும். (ரு0)

இசைகுலாவியகௌரிமாயூரமென்றிசைக்குந
திசைகுலாவியமாதிரமுமைபபூசைசிறநதோர்
வசைகுலாவியபாதகர்மறந்துமோதுவரோ
நசைகுலாவியமேற்சரிதமூநடததிடுவாம். (ருக)

மாயூரப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம். ருருக.

# தேவி வரம்பெறுபடலம்.

பூசையிவ்வாறுசெய்யும்புவனமுற்றீன்றதோகை
யாசைதன்னையிற்சூழுந்தோகையாங்கவாநிற்கு
மோசைமுற்கூவர்ந்துநாளுமூவகையிற்றினைப்பதோர்நாண்
மாசையிலுருவங்காட்டாவகைதெரிந்தயங்கிற்றன்றே. (க)

எதுபிழைசெய்தேன்கொல்லோவெளிமையிற்காட்சிநல்கு
மதுமலர்க்கடுக்கைமாலைமயிலின்றுமறைந்ததற்றை
முதுபிழைதீர்த்தற்கிங்குமுற்றினேனிங்குமேய
விதுபுகுந்தெங்குத்தீர்ப்பேனெனக்கவன்றிரங்காநிற்கும். (௨)

பிரிதராக்கருணைமஞ்ஞைபிரியுமேபிரிந்ததோர்ந்து
மிரிதராவுடம்பினோடுமிருப்பதேயானென்றேங்கும்
பரிதராக்கொடியேன்பூசைபண்ணலிற்குற்றமென்னோ
சரிதராவதுமுன்போலத்தழைவதுதெரிவேனென்று. (௩)

வாவியின்மூழ்கிவந்துமலர்முதற்பலவுநேடி
யாவியினினியகோவையந்தரியாகபூசை
மேவினனகியற்றிப்பின்னர்விழித்ததுதெரியக்கண்ட
தோவியர்முயன்றுநீட்டாவுருவத்தானுவக்குங்கோசம். (௪)

நாட்டியவக்கோசத்துநறுமணத்தைலமாதி
யாட்டியபலவுமேன்மையாயகூவிளமுமாகச்
சூட்டியபலவுமன்னஞ்சுவைக்கறியபூபமற்று
மூட்டியபலவுமெம்மானுவத்தலின்வெளிப்பட்டனறே. (௫)

நீட்டியசடையான்சூதநீழல்வாழ்பெருமான்பாங்க
ராட்டியவனைத்துமோடிவழியவுமனையான்மேனி
சூட்டியவனைத்தும்பற்றித்துதையவுந்திருமுன்னேர்வைத்
தூட்டியவனைத்துமாங்காங்குறையவுங்கண்டதன்றே (௬)

அதிசயமிதுவாமென்றுங்கன்றுவேதியன்பூசித்த
நிதிநிகரிலிங்கமுன்புசென்றோலெனச்சேறலோடும்
பதியுமெவ்விடத்துமந்தப்படியேகண்டிறும்பூதுற்றுப்
பொதிதருமுவகைமேவப்புளகம்பூரித்ததன்றே. (௭)

இதுகொலோநாம்பூசித்ததினியமாநீழல்வைகு
மதுகொலோவெனவேறாயமடைந்ததுபசியதோகை
யுறுவிதுவெனபதென்னேயுணர்தரினிரண்டுமொன்றே
கறுமெனநாஞ்செய்பூசையிரண்டினுங்கண்டவாற்றால்.

என்றுதன்கருத்திற்றெள்ளியிப்படியிருந்துநம்மோ
டொன்றுபுகளிப்புச்செய்யுமொருசிகாவளமித்தேதத்து
நின்றுநீங்கிடுதற்கேதுவென்னெனநினைந்துசாம்பும்
பொன்றுமேவுறாமலன்றிப்போகாதித்துயொன்றுள்ளும். (௯)

எனநினைந்தெம்பிராட்டிபெறுமயில்கவலுங்காலை
யினமறைவாழ்த்துமல்கவிமையவர்பலருமேத்த
வனகமாமுனிவரியாருமரகரகரவென்றார்ப்பக்
கனவிடைமீதுகாட்சிநல்கினன்கருணைமூர்த்தி. (௧௦)

காட்சிதந்தருளுமையன்காமருமயிலைநோக்கி
யாட்சிநம்மெதிராந்தீர்த்தத்தடுத்தலைவயொடுமூழ்கென்ன
மாட்சியினதுபஃறோகையொடுமகிழ்ந்தாடிப்பண்டைப்
பூட்சியுற்றெழுந்ததம்மாபுலவர்பூமாரிதூர்ப்ப. (௧௧)

பிணிமுகவுருவநீத்துப்பண்டையவுருவம்பெற்ற
மணிமருள்கூந்தற்செவ்வாய்வாணுதலெம்பிராட்டி
யணிகிளர்விடைமேற்றோன்றுமண்ணலைவிரும்பிநோக்கித்
தணிவருமன்பூபொங்கத்தரைமிசைப்பணிந்தெழுந்தாள். (கஉ)

சூழ்தருமயில்களெல்லாந்தலைவிதன்றோற்றம்போல
வாழ்தருகளிப்புமேவமயிலுருவொருங்குநீத்து
வீழ்தருபழையரூபமேவியெம்பிரானையன்றாற்
றாழ்தருபரையைச்சூழ்ந்துதாழ்ந்தளவளாவிநின்ற. (கங)

தாழ்ந்தெழுமுமையைநோக்கித்தம்பிரானருளிச்செய்வான்
போழ்ந்தநின்கரிசுமுற்றும்போயதித்தலம்புக்கன்றே
யாழ்ந்தவன்புடைநின்பூசைக்காற்றவுமகிழ்ந்தேமற்றால்
வீழ்ந்தபல்வரமுங்கோடியென்றலும்விமலைதாழ்ந்து. (கச)

ஐயனேபோற்றிபோற்றியழலவிர்மழுமானேந்து
கையனேபோற்றிபோற்றிகையர்கண்காணாமேனிச்
செய்யனேபோற்றிபோற்றிதேவரைக்காத்தகண்ட
மையனேபோற்றிபோற்றியென்றிதுவருக்கலுற்றாள். (கரு)

அடியனேன்புரிபுன்பூசைக்கையாநீயுவந்ததுண்டேற்
கடியவிரினையதானங்களிமாயூரமென்றே
நெடியவன்முதலோரோத்திதினைதரப்பொலியவேண்டு
மொடிவிலிநாமஞ்சொற்றோருவப்பெலாமுறுதல்வேண்டும். (கசு)

தாயுமாயுலகுக்கெல்லாந்தந்தையுமானவைய
நீயுமாயூரநாதனெனும்பெயர்நிலவப்பூண்டு
தோயுமாதீர்த்தமாடிவந்துனைத்தொழுவோர்க்கெல்லாங்
காயுமாபாதகங்கள்கழற்றியின்புதவுவேண்டும். (கஎ)

நன்றுநான்பூசைசெய்யுநலத்தவிக்குறிகண்மாட்டு
நின்றுநீகழலாவண்ணநிகழ்பிரசன்னமாகி
யென்றும்வீற்றிருக்கவேண்டுஞ்செய்மையினிருந்துநின்பே
ரொன்றுளத்தெண்ணுவோருமுயர்கதியடையவேண்டும். (கஅ)

தினகரன்றுலாத்திற்செல்லுஞ்செழுமதிமுழுதுமோர்சா
றனகயான்புரிதல்வேட்டேனதநிறைவேறுமாறு
முனகரும்பொன்னிநன்னீர்மூழ்கினருய்யுமாறு
மனனமூர்தீர்த்தநல்கிவயங்கருள்புரிதல்வேண்டும். (கக)

வழிச்செலவொருநாணின்னைக்கண்டவர்வளர்சாலோகம்
பழிப்பறவொருநாள்வந்துகண்டவர்பகர்சாமீப
மிழித்தலற்றிடச்சின்னாளிங்கிருந்துபோற்றினர்சாரூப
மொழித்தலற்றுறைவோர்நின்றாட்கலப்புநன்குறுதல்வேண்டும். (உ0)

கொலைகளிற்சிறந்ததாயவந்தணக்கொலையும்வீரக்
கொலையுநாரியரைக்கொன்றகொலையும்பீடபச்சிதைத்த
கொலையுமாக்கொலையுந்தந்தையாதியர்தம்மைக்கொன்ற
கொலையுமித்தலத்தைச்சாரிற்குலைகுலைந்தோடல்வேண்டும், (உக)

இத்தலத்துதித்தபுல்லுச்செடிகொடிமரங்களின்னுங்
கைத்தபுள்கிருமிகீடங்கழுதைநாய்மலமார்பன்றி
மொய்த்தபல்கீரிபூனைபறவைகண்மொழியாமற்றும்
பைத்தபாப்பணியாய்நின்பொற்பாதமேசேரவேண்டும். (உஉ)

என்னொடுநின்னைப்போற்றுமியல்பினரியாவரோனும்
பொன்னொடுமணியுமற்றும்புகல்பொருள்யாவுமெய்தி
மின்னொடுநிகர்மருங்குன்மனைமகாரோடுமேவி
முன்னொடுபின்னிலாய்வாழ்க்தீற்றுனைமுயங்கல்வேண்டும் (உங)

பொருணனிவேண்டினனும்புலமையிற்சிறந்தோராதுந்
தெருணனிவேண்டினனுஞ்சித்திகள்வேண்டினனு
மருணனிவேண்டினனும்வழங்காமலின்பந்துய்க்கு
மருணனிவேண்டினனுமித்தலமளித்தல்வேண்டும். (உச)

விழியிலார்செவியுமில்லார்மேதகுகைகாலில்லார்
மொழியிலார்குட்டமாதிமொய்த்துளாருய்யும்வேறு
வழியிலாரியாவரோனும்வநதித்தித்தலஞ்சார்வாரோற்
பழியிலாராகியின்பப்பயனினுகர்தல்வேண்டும். (உரு)

பற்பலவுரைப்பதென்னைபரமநீவீற்றிருக்கும்
பொற்பமரினியகோயிற்பொருள்கவர்தீங்கினோடு
நிற்பழித்திழிக்குந்தீங்குநிறகமற்றெனையதீங்கு
மற்பமுமின்றாய்நீங்கவருணமதியெனறுதாழ்நதாள். (உசு)

பராபனையிரநதவாறேபராபரனனைததுநல்கிப்
புராதனவிலிங்கத்துள்ளேபுக்கினிதமர்ந்தானுக
வராவணையவன்முன்வானோரலர்மழைபொழிந்தாரப்பாற
றராதலமகிழுமாறுநடநததுசாறறலுறறும். (உஎ)

தேவிவரம்பெறுபடலம் முறறிறறு.

ஆ திருவிருத்தம். ருஎஅ.

---

## மாயூரநாதர்வள்ளலாரென்னும்பெயர்பெற்றபடலம்.

---

அறிவில்கொடியவினைத்தக்கனூறுமகச்சாலையிற்புகுநது
செறியுமயன்மான்முதற்றேவர்திறல்கூலவீரபத்திரரான்
முறிவிறண்டஞ்செயப்பெற்றுமுழங்கும்வீரட்டானமெனும்
பதியனின்றுமாயூரம்படாநதார்பூசைசெயல்குறித்தார். (க)

உரியவதிகாரமுமிழந்தோமுற்றமேன்மைகளுமிழந்தோம்
பெரியபரனையவமதித்தபேயன்றனைச்சார்ந்தறக்கெட்டோ
மரியதண்டமுறப்பெற்றுமரூதநமைச்சார்ந்துறுகரிசு
மிரியமாயூரேசனைநாமின்றேபணிவோமெனக்கருதி. (உ)

மன்னும்பிரமதடந்தோய்ந்துவயங்குநீற்றுத்தூளணிமும்
பன்னுமதனமேற்புண்டரமும்பகரர்கமஞ்சொல்வழிபுனைந்து
மின்னுமுருத்திராக்கமணிவிளங்கப்பூண்டைந்தெழுத்தெண்ணித்
துன்னுமயன்மான்முதலாயசுரர்கள்யாரும்புறப்பட்டார். (ங)

ஆட்டுந்தயிலமுதற்பலவுமான்றமனுக்களெடுத்தோதிச்
சூட்டும்வில்வமுதற்பலவுந்தொக்கமுகமன்புகன்றுகசிந்
தூட்டுமமுதுமுதற்பலவுமுற்றதீபம்பலபொருத்திக்
காட்டுங்கருவிமுதற்பலவுங்கருத்துக்கியையவீட்டினார். (ச)

அருமாதவர்தமுளத்தொளியையுன்றுபுவனமுழுதுமுய்யக்
கருமாவிடமுண்டமைந்தானைக்கனிந்தபிரமற்கருள்சுரந்த
திருமாமணியைத்தக்கன்மகஞ்செற்றகோவைமாதேவை
யொருமாயூரேசனைப்பூசித்துவந்துதுதிக்கத்தொடங்கினார். (ரு)

அருவாயுருவாயருவுருவாயனைத்துங்கடந்தவசஞ்சலமாய்ப்
பெருமாமறையின்முடிப்பொருளாய்ப்பெரிதாய்ச்சிறிதாய்ப்பேருணர்வா
யொருமூவுலகிற்குயிராகியுற்றகுறியாதிகள்கடந்து
கருதாவொளியாயமர்மாயூரேசநின்றாள்கைதொழுதேம். (சா)

ஒன்றாயருவாயுருவாய்மற்றுபயமாயொன்பதுங்கடந்து
நின்றாய்மூலமலவிருளானெருக்குண்டுடையுமூவுயிர்க்கு
நன்றாயுணர்வுபுணர்த்திடுவானவிலுமாயைமாமாயை
* என்றாயிரண்டிற்றனுவாதியியைப்பாய்நின்னைச்சரணடைந்தேம். (எ)

ஒருமூவகையதத்துவமுமுள்ளும்புறமுமெனப்புகலு
மிருபேரிடத்துங்கொளப்பொருத்தியியலுமாறுதொழிற்படுத்த
மருவாரணுக்களைந்துபுலன்வழிச்சென்றுற்றும்வினைசுவர்க்கங்,
கருளார்நரகந்துய்ப்பித்துக்கழிப்பிப்பாய்நிற்புகல்புகுந்தேம். (அ)

மேவியமையும்பருவமுறவினைகளொக்குஞ்சமநோக்கி
யாவியருளுற்றிடப்பதித்தேயமைந்தசகலந்தனினீக்கித்
தாவி * அறிவோரிரண்டுமறத்தாவாச்சுத்தந்தனில்வயக்கி
யோவியகலாவின்பளிக்குமொருவாநின்னைச்சரணடைந்தேம். (கூ)

ஏதங்கடந்துவினைகடந்துகருவியென்பவெலாங்கடந்து
வாதங்கடந்தாருயிர்கடந்துமாறாவருளின்றொடர்கடந்து
பேதங்கடந்துபரவசமாய்ப்பிரியாச்சுகவாரிதிமடுத்துப்
போதங்கடந்துநிறைந்தபரம்பொருளேநின்னைச்சரணடைந்தேம். (க0)

அல்லார்கண்டத்தற்புதனேயடியார்க்கெளியகருணையனே
சொல்லார்மறையின்முடியானே தூயபிறைசார்வேணியனே
செல்லார்கூந்தலுமையம்மைசெறியோர்பாதிமேனியனே
நல்லார்புகழுமாயூரநாதாநின்னைச்சரணடைந்தேம். (கக)

என்றுதுதிக்குமலரோற்குமெஃகத்திகிரிப்படையோற்குங்
கன்றுவயிரப்படைசுமந்தகடவுண்முதலாமெண்மருக்குந்
துன்றுமொளிசாலிலேகருக்குந்தொக்கமற்றையாவருக்கு
மன்றுகருணைசெயவெளிவந்தனனவ்விலிங்கநின்றையன். (கஉ)

அண்ணல்வெளிவந்ததுகாணூஉவயன்மான்முதலோரடிமிசைத்தாழ்ந்
தெண்ணலினியாதெனநிற்கவெம்மானனையர்முகநோக்கிக்
கண்ணலருந்தீதித்தலநங்குறிப்பூசனையாற்கழிந்துயர்ந்தீர்
நண்ணலரியவரமுமக்கின்றருள்வோமென்றுநவில்கின்றான். (கங)

---

* என்றாயிரண்டில் - என்றாயஇரண்டிலெனப்பிரித்து, அகரந்தொகுத்தல் விகாரமாகக்கொள்க. ** அறிவு இரண்டு - பாச அறிவு, பசுவறிவு.

போற்றுமறைகண்முழுதுணர்ந்துபொலியுங்கலைமாமகட்புணர்ந்து
சாற்றுஞ்சிருக்குமணிவடமுறபலவுந்தவாதுகைத்தாங்கி
யாற்றுஞ்சிருட்டிமுன்போலவாற்றியடுத்தார்வினையனைத்துங்
காற்றுநந்தாள்கருதிவாழென்றுகஞ்சன்றனைவிடுத்தான். (௧௪)

பொறியைப்புணர்ந்ததிகிரிமுதறப்பொலியைம்படையுங்கைத்தாங்கி
நெறியைக்கருதாவவுணருயிர்நீப்புச்சவட்டிமழுவொடுமான்
மறியைப்புணர்கைத்தலத்தொருநம்மலர்த்தாள்கருதியுலகோம்புங்
குறியைக்கொடுவாழெனவருளிக்கொண்டன்மேனியனைவிடுத்தான். (௧௫)

வேறு.

மேகவாகனசசியொடுவிண்ணவர்வணங்க
நாகநாடுபல்வளத்தொடுநன்குகாத்திநீதி
வேசமாகவேழ்சாலுளாய்விண்ணவருண்ணும
பாகமேநதிமற்றவராக்குகவெனப்பகர்ந்த. (௧௬)

கூற்றுநீயறஞ்செயார்களைக்குமைபெருந்தவத்தோர
சாற்றுமிந்தமாயூரஞ்சார்ந்தார்களைத்தாழ்ந்தி
யேற்றுவேறென்றுசெய்யலையென்றுநின்றிசையைப்
போற்றிவாழ்கெனநிருதியைப்பார்த்திந்துபுகன்று (௧௭)

வருணகேளுசிதவொலாமுசிதராய்வயங்கப்
பொருணயந்துநீபுரிந்திடுவாயெனப்புகன்று
வெருவிலாதவாவாயுவேமேதினிக்குயிராய்ப்
பருவமோர்ந்துநீதருதியிறப்பிலெனப்பகர்ந்த. (௧௮)

அளகையாளியைநிதிக்கிறையாகெனவறைந்து
பளகிலாதவீசானனைப்பார்த்துறுதட்டா
தணாதரும்படிதண்டிதந்துவருகெனச்சாற்றிக்
கிளரநாலிருவோரையுமபேமுறவிடுத்தான். (௧௯)

பொருள்பெறததினகரபுகல்கருமசான்றாகி
யிருளறுத்துநீயியங்குபுவாழதியென்றியம்பித்
தெருண்மிகுத்திடுமதியமேயோடதிசெழிப்ப
வருண்மிகுந்திரீநனறுகாத்திடுகெனவறைந்த. (௨௦)

இவ்விரண்டுகோளொடுமற்றுளவெழுகோளுஞ்
செவ்விதாகநோக்குவபுதிருநக [illegible] திரளி
லெவ்வமோவநீரிருந்துயிரினபமுநதன்புர
தெவ்வுமாறளிந்திடுகெனச்செப்பினன்விடுத்தான். (௨௧)

வேறு.

உடுக்கணத்தைவிண்மீதிலுறுதிபெறவிருக்கென்றும்
வடுத்தவிர்பைநகொண்டலகளைமழைபொழிமினென்று
நடுக்குறுங்கினமுருவநண்ணுறுபயில்கவென்று
மடுத்தநதிகளைநீரோடமைந்தறமாக்குகவென்றும். (௨௨)

வரைகளைப்பூதரமெனும்பேர்வயங்கவமருகவென்றும்
விரைமலர்ப்பல்வனங்களைப்புண்மிருகமோம்பிடுகவென்றுந்
திரையெறிவாரியையளவில்செந்துகளோம்புகவென்றும்
புரையிலுலகங்களைநஞ்சத்தியாற்பொலிகவென்றும் (௨௩)

பலதலையசேடனைப்பார்பரித்தினிதுவகியென்றும்
பலமறையோர்களும்யாகம்பண்ணிவாழ்குகவென்றும்
பலவமரர்களும்யாகபலியுண்டுபொலிகவென்றும்
பலமறையுநம்முடையபடிவமாகுகவென்றும் (௨௪)

மருவுமிருதுகளாறும்வயங்குதேவுருவாகிப்
பொருவறவாழ்தரவென்றும்புண்மிருகமுதலான
வொருவில்பலவுயிர்களுக்குமுணவுமலிதரவென்றுங்
கருதியபற்பலவுமுளங்களிப்பவருளுபுவிடுத்தான். (௨௫)

நந்திமுதற்கணத்தவரைநாடிவேறுறநோக்கி
யந்திமதிமிலைந்தநமக்கன்னியமில்லாநீவி
ரிந்தியம்வெல்யோகியர்சேரித்தலத்தில்விதிப்படியே
முந்தியெமதருட்குறிகண்டேத்திடுமினெனமொழிந்தான். (௨௬)

அன்னதிருக்குறிதொறுநாமிடையறாதமர்கிற்போ
மென்னவரங்களுநீரோயாவருக்குமீயும்வர
முன்னமுந்தந்தனமின்னுமொழிந்தனமென்றருள்புரிந்து
சொன்னமலைக்குழைத்தபிரான்றிருமூலிங்கத்துட்புகுந்தான். (௨௭)

மலரோனுநெடுமாலும்வானாடர்கோமகனும்
புலராமற்றிமையோரும்பூரணன்பேரருணோக்கி
விலகாதபெருவரங்கண்மிகக்கொடுத்தபெருமானை
நலமாரும்வள்ளலென்றோர்நாமமுவந்திட்டழைத்தார் (௨௮)

தக்கனெனுங்கொடியனுமாங்கடைந்தவிறித்தடமூழ்கி
முக்கணுடைவள்ளல்பதமுருகலர்கள்கொடுபோற்றித்
தொக்கசிறுமைகடவிர்த்துத்தூயனுயவனருளுற
றக்கணமேசிவலோகத்தினிதமரும்பேறுற்றான். (௨௯)

பெருங்கருணைவள்ளலார்பேரருளைமிகப்புகழா
வொருங்குபலவானவருமுறைதத்தமிடம்புக்கார்
நெருங்குபுகழ்வள்ளலெனும்பெயர்நிகழ்தற்காரணமீ
தருங்குணத்தென்றிடுமற்றைக்கதையினியறைகுவாம். (௩௦)

மாயூரநாதர்வள்ளலென்னும்பெயர்பெற்றபடலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம். ௬௦௮.

# தேவியாராதனைப்படலம்.

தரையாதியுலகனைத்தும்படைப்பாதியைந்துமொருதனிநின்றுற்ற
வுரையாதிகடந்தொளிரும்பரையாதியாயமருமொருத்திவெள்ளி
வரையாதியினுமவாய்மாயூரத்தலத்தமரும்வள்ளற்றேவைக்
கரையாதிநிகமாகமப்படிபூசனைபுரியுங்கருத்தளானாள். (௧)

பூப்பொலியுந்தோழியருமங்கைமுற்றோழியரும்புரிந்துசூழ
மாப்பொலியுமலர்ப்பிரமதடங்குடைந்துவெண்ணீறுவயங்கப்பூசி
மீப்பொலியும்பெரும்புகழ்சாலுருத்திரகண்மணிமாலைவிரவப்பூண்டு
நாப்பொலியுமைந்தெழுத்துங்கணித்தெழுந்துநந்தவனநண்ணினாளால். (௨)

தோழியராகியபலரும்பிடகைகரங்கொண்டேவுந்தொழின்மேனிற்ப
வாழிபுடையுடுத்ததனைமகள்பதந்தீண்டிடுபெரும்பேறடைந்துள்ளோர்க
வாழிமறப்பகையனைத்தும்வளர்த்தோங்கவளர்த்ததிருமலர்க்கைகொண்டு
வீழிநறுங்கனிபுரையுஞ்செய்யவாய்க்கௌரிமலர்மிதப்பக்கொய்வாள். (௩)

நந்தியாவட்டமாமலகமாமந்தாரஞாழலொண்செவ்
வந்திபாடலங்கன்னிகாரமாதளைகுராவகுளம்வில்வஞ்
சிந்துவாரங்கடுக்கைதேங்கொன்றைநீர்முள்ளிசெவ்வகத்தி
சந்தகூதாளமராநீர்மிட்டான்வழைகாஞ்சிதண்புன்னாகம். (௪)

குருந்துபொன்னாவிரைபொன்னூமத்தைவன்னிகுசைகூத்தன்குதம்பைவேங்கை
செருந்திகொக்குமந்தாரையெண்மலரார்பலாசுபட்டிசெவ்வரத்தம்
பொருந்துபன்னீர்வெட்பாலையசோகம்வெள்ளிலோத்தம்விளாப்பூளைதான்றி
திருந்துதுரோணம்பருத்திமாவிலிங்கநாயுருவிசெழுஞ்சரோசம். (௫)

மருமருவின்கொழுந்தருக்கம்வெள்ளைக்காக்கணந்துழாய்மாயனகாந்தி
கருவிளங்குவளையாம்பல்சதகுப்பைசெங்கிளைகாந்தள்வெட்சி
யொருதளத்தாமரைகண்டங்கத்திரிமல்லிகைகிளுவையோங்குகோட்டம்
பொருவில்விலாமிச்சவேர்வெட்டிவேர்குச்சுப்புல்புலிதொடக்கி. (௬)

வழுதுணைவெற்றிலைமஞ்சணத்திசூரியகாந்திவாகைதாழை
கொழுவழிஞ்சில்கருஞ்செம்பைகடம்பறுகுகருங்காலிகுளவிநாவ
லெழுநாரந்தமெலுமிச்சைபாரிசாதங்காரையிருங்கரந்தை
தழுவுபச்சைவதரிகாயாநாணனமயிலைநறுந்தாளிசாலி. (௭)

அலரிமுதற்பறபலவுநிரம்பவெடுத்தமைத்தொருதேத்தணுகிவைகி
வலரியனுமிண்டைகளுமாலைகளுநதொங்கல்களும்வயங்குதண்டிற
பலரியையப்புனைவனவுமினும்வெவ்வேறுப்புரியும்பணியுநோக்கிச்
சிலரினியபல்வகையந்வேதனமுமமைமினெனச்செப்பிபின்னா. (௮)

கதிரொழுமுனமஞ்சனநீர்வடிந்தெடுத்துப்புதுநிறையுட்கலக்ககொட்டி
முதிர்மணஞ்செயகருப்பூரம்பொடித்திட்டுமலர்வேருமுயங்கச்சேர்த்துப்
பிதிர்தலிலாவகையமைக்கச்சிறசிலரையேவிமணம்பிறங்குசந்த
மதிர்தரத்தேய்த்துறுவிரையுங்கலந்தமைக்கச்சிறசிலரையனுப்பினாளால். (௯)

நறைகமழுஞ்செழுநதயிலமினியதேனயிர்கனிகணல்லாவின்பால்
குறைவிறயிரகழைச்சாறுமுதலியவுமோரிடத்தேகுழுமச்சேர்த்து
நிறைதருவட்டகைகலசம்படலிகைகொப்பரிகும்பநிகழ்தூபககான்
முறையமையுநதீபக்கான்முதலாயபறபலவுமுன்னியீட்டி. (௧௦)

குடைகொடிசாமரையாடிசிவிறிமுதற்பற்பலவுங்குலவச்சேர்த்து
மிடைதருபற்பலகாம்புமுதலாயபரிவட்டம்விளங்கவீட்டி
யடைமணிசெயகுண்டலங்கேயூரமரைஞாண்முதலாவனைத்துங்கொண்டே
யுடைதிரையினியமுழங்கப்பூசைசெயல்குறித்தெழுந்தாளுச்சிவேலை. (௧௧)

முன்போலநீராடிநீறுதிபுனைந்திறைவன்முன்புசென்று
மின்போலநுடங்கிடையாளவனனுஞைபெற்றுளத்தவிருப்பமூறப்
பொன்போலப்பொலிபுண்ணியாகவாசனஞ்செய்துபொலிவுமேவத்
தன்போலவேறிலவள்கௌவியபூசனைபுரிந்தாடரணிவாழ. (௧௨)

சுவையமுதமோரைந்தும்போற்றிநவகும்பமீதிஇத்தொழுதுமேலா
னவையகலவக்கினிகாரியம்புரிந்துவேழமுகநம்பனுதி
யவைவியக்குந்துவாரவானவர்பூசையாயவெலாமன்பினாற்றிக்
குவைமலர்வாணவரிறைப்பக்கருப்பகிரகம்புகுந்தாள்கொம்பர்போல்வாள். (கங)

தக்கவரநதிபூசைதகச்செய்துபூதசுத்திதானசுத்தி
மிக்கமனுச்சுத்திதிரவியசுத்தியிலிங்கசுத்திவிருப்பினாற்றி
நக்கபுகழ்ப்பாத்தியமாசமனமருக்கியம்பண்ணிநலம்விராய்த்தோ
முக்கவாதாரசத்திமுதற்சத்திமண்டலமீறுறப்பூசித்து. (கச)

உரைசெயுமர்வாகனமுந்தாபனமுமுள்ளத்தன்புறைப்பவாற்றி
வரைசெயுமையாறதன்மேலெட்டங்கநியாசமுநன்மாண்பினாற்றிக்
குரைசெய்சந்நிதானமொடுசந்நிரோதனமவகுண்டனமுஞ்செய்து
புரைசெயுமாநற்றேனுமுத்திரைமுற்பற்பலவும்பொருந்தநல்கி. (கரு)

தக்கவகைகப்பாத்தியாசமனவருக்கியங்கொடுத்துத்தழைவிண்மேலு
மிக்கவியம்பலமுழங்கநறுந்தயிலமாநெல்லிவிளங்குமஞ்ச
டொக்ககுடஞ்சுட்டுறுமைந்தைந்தமிர்தநறுநெய்பாறேயுந்தன்மை
புக்கதயிர்தேனயிர்வண்கதலிபலாச்சூதமிக்கிறபுரிந்தசாறு. (கசு)

நல்லவிலிகுசநாரந்தநயக்குமாதுளைதமரநல்குசாறு
வல்லவிளநீரன்னஞ்சந்துதபனங்கங்கைமாண்பேயென்று
சொல்லவமைதருவில்வக்குழம்புசகத்திரதாரைசுடர்சிருங்கம்
பல்லவலம்புரியுரைத்தமுறையாட்டியாட்டுதொறும்பசுங்கொம்பன்னாள் (கஎ)

இடையிடையேசுத்தநீராட்டனிவேதனமாதியினியசெய்து
கடைமுறையொற்றுடையிட்டுப்பரிவட்டம்புனைந்துநூல்கவினச்சேர்த்து
மிடையுமணிமகுடம்பொற்குழைவாகுவலயமொளிவிளங்கச்செய்த
கிடைவயிரகடகமிளிர்மதாணிமோதிரமரைஞாண்கெழுமச்சாத்தி. (கஅ)

வெள்ளியநீறணிநதுசாந்தணிந்துபலதொடைவகையும்விளங்கச்சூட்டி
யொள்ளியவாநறுந்தூபமொளிர்தீபமுறவயக்கியுதற்குமேலா
னள்ளியவண்டளவரும்பிற்பொலிசுத்தோதனம்பருப்புநயநதபொம்மல்
புள்ளியவண்குளச்சொன்றிபாலடிசிறிலமூரல்புளிசாலன்னம். (ககூ)

நாடுமரிசயினிநெய்சொட்டயிர்மிதவைததிமடைநன்னறுங்குய்மொய்த்து
நீடுபலகருனைசுவைப்பாகரில்லட்டுகந்தோசைநிரம்பவுள்ளாற்
கூடுசுவைமோதகமென்பிட்டுழுந்தவடைமற்றுங்குலவபூபந
தேடுமிளநீர்குளநீர்கனிநீர்நீர்மோர்சுத்தத்தெளிசானன்னீர். (உ0)

இன்னவைபற்பலவுமொவ்வொன்றுவிருப்பின்முகமனொடுமினிதினீந்த
பின்னரருக்கியங்கொடுத்துத்தாம்பூலமுகவாசம்பேணிநல்கிப்
பொன்னவிர்தூபங்கொடுத்துமேலடுக்குத்தீபமுதற்பொருந்தாநின்ற
பன்னரும்பற்பலவாராதன்ம்புரிந்துநறியமணப்பலபூத்தூவி. (உக)

பாடுநீராஞ்சனஞ்செய்தபின்பளிதவிளக்கெடுத்துப்பருத்திவித்துங்
கூடிவேப்பிலையுமுறச்சூழ்ந்தீதறிந்துநீறணிந்துகுலவுமாடி
நீடுவான்குடைகவரியாலவட்டஞ்சிவிறியிவைநேர்வயக்கி
யேடுசானறுமலரக்கதைசாத்தியருக்கியமுமீந்தபின்னர். (உஉ)

ஆயமலர்பல்லவெடுத்தைதந்தெழுத்துமுளத்தெண்ணியண்ணல்பாதந்
தோயநலமுறச்சாத்தித்தொழுதெழுந்துவெளிவந்துதொல்லோன்மேனி
யேயவொருதலத்தினமர்ந்திதயத்துக்குறித்திருந்தாளீனுதின்று
தூயமலரவன்முதலாம்பல்லுயிருமினிதோம்புஞ்சுகுணவல்லி. (உ௩)

இந்தவிதமிருந்தவள்பின்னெழுந்துவள்ளல்பிரசாதமெவர்க்குநல்கி
யந்தமிலான்முன்னிற்பவவ்விறைவன்வெளித்தோன்றியம்பிகாய்முன்
வந்தமயிறனக்கபயங்கொடுத்தனைநாமமுமதுவாமருவியார்க்கும்
பந்தமறுத்தெவ்வரமுமித்தலத்தெம்மோடமர்ந்துபாலிப்பாயால். (உச)

என்றுதிருவருள்புரிந்துமுதல்வன்புக்கமர்ந்தானவ்விலிங்கத்துள்ளால்
வென்றுமினிருந்தோங்குமபயப்பிரதாம்பிகையெனும்பேர்விளங்கப்பூண்டு
குன்றுதலற்றெவ்வுயிருமீடேறப்பெருங்கருணைக்கோலங்கொண்டு
நன்றுமகிழ்ந்தினிதமர்வாண்ஞாலமுழுதீன்றளிக்குநம்பிராட்டி. (உரு)

தேவிதிருவாராதனைப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம். சு௩௩.

---

# திருநடனப்படலம்.

இந்தவாறுளங்களிதரவமர்தருமிறைவியெம்பெருமாட்டி
சந்தமாமறைமுடிப்பொலிதருபெருந்தம்பிரானருள்போற்றி
யந்தமாதியிலாய்முன்மயூரமாயழகியநடஞ்செய்தாய்
பந்தமேவியதண்ணுமையாதியபலதமுவிலையனமீறே. (க)

உரைசெய்தண்ணுமையாதியபலதழீஇயொள்ளியமலர்மேலான்
றிரைசெய்பாற்கடற்பாயலான்முதலியதேவருமுனிவோரும்
வரைசெய்மண்ணுலகத்தவரியாவருமற்றுளாரெல்லாரும்
புரைசெயானந்தமருவியின்பமர்தரப்பொலிநடஞ்செயல்வேண்டும். (உ)

தில்லைமாநகர்மன்றினும்விசேடமித்தேத்தெனவுரைசெய்ய
வொல்லையிவ்வுருவடைந்தயான்கண்டுகண்டுளங்களித்திடயாருந்
தொல்லைவல்வினையிரிதரநோக்குபுதொழுதுகைகுவித்தேத்த
வெல்லையில்லவவருடியென்றிரந்திரந்திறைஞ்சினளாதுகரலே. (௩)

ஆதிநாயகன்றிருவுளமிரங்கிநீயவாவியபடித்திமை
காதியோங்குமித்தலத்துநாந்தாண்டவங்கரிசறப்புரிகிற்பா
மோதிமாமுகில்புரைதருகௌரியாமுன்பொருட்டதனுலே
சோதியாகியகௌரிதாண்டவமெனச்சொலப்படுமெனக்கூறி. (ச)

நந்திவாண்முகநோக்கியித்தலத்தியாநடஞ்செய்வாமதுகாண
முந்தியாவரும்வரும்படிசெய்யெனமொழியமுற்றூவோகை
தந்தியாலெனப்பணிந்தெழுந்தியாவருஞ்சார்கவென்றுளத்துன்னக்
கந்திரூமுமாயூரத்தில்யாவருங்கடுகவநதடைகின்றூர். (ரு)

தந்தியூர்திறலிந்திரன்முதலியதந்திசைகாப்பாள
ருந்திபூத்தவனுந்தியினுதித்தவனும்பர்தானவர்சித்தர்
மந்தியாதுகற்றுயர்ந்தவித்தியாதரர்வயங்குகின்னரர்நாகர்
புந்திசாலியர்முதலளவில்லவர்பொள்ளெனப்புகுந்தாரால். (சு)

புக்கயாவரும்பாவநாசப்பெரும்புனலுறப்படிந்தாடித்
தக்கநீறுகண்மணிதரித்தெழுத்தைந்துந்தம்முள்ளத்துறவூன்றி
மிக்கவள்ளலாரஞ்சனுயகிவெர்மென்மலர்ப்பதம்போற்றி
யுக்கதீவினையாளராய்நடனமுள்ளுவந்துகாண்பானின்றார். (௭)

அம்மையாவருநடங்கண்டுபோற்றிடவணைந்துளாரெனக்கூறச்
செம்மைநாயகன்மன்றமுண்டாகெனத்திருவுளங்கொளலோடும்
வெம்மைதீர்ந்துபல்கதிர்திரண்டமைந்தெனமேவியதொருமன்ற
மெம்மையாள்பவனத்தகுமன்றமேலெழுந்தருளுபுநின்றான. (௮)

வலமலிநததோட்டிருநெடுமாலொளிர்மத்தளமதுதாக்கப்
புலமலிந்தநான்முகமுளான்றாளங்கைப்பொறுத்தொலியெழமோத
நலமலிந்ததேனுழுக்கெனத்தும்புருநாரதரிசைபாட
வலமலிந்தயோகியருளத்துறைபவனுனநதநடஞ்செய்வான். (௯)

மல்லல்வான்றவமுனிவராரவொலிவயக்கியஞ்சலிசெய்யச்
செல்லறீர்ந்தனமென்றடியவரொலாஞ்சிநதையிற்களிப்பெய்த
வொல்லல்வாய்ந்தவேயங்குழன்முதற்கருவிகொண்டுரியரப்பணிசெய்ய
வல்லறீர்ந்தெமையாள்பெருங்கருணையானுனநதநடஞ்செய்வான். (௧௦)

ஒருபுறத்துநின்றருள்பராபரைமுகத்தொளிர்விழிக்கடைசெல்ல
கருகிருட்பெருநகுறளவெரிந்மிசைவிழிசழலவோர்தாளூன்றிப்
பெருவனப்பொருதாண்மலர்குஞ்சிதபபெறறியினெடுதந்தாவா
வருள்சுரந்தெமைப்புரந்தருள்பரம்பரனுனநதநடஞ்செயவான. (௧௧)

தோயும்வான்றமருகமொருகைததலததுழனிசெயதிடவோரகைக்
காயுமாரழலெழவிருகரத்தொன்றுகவியவொன்றமைவெய்தப்
பாயுமால்விடையரபுரகரவரபரவெனுந்துதிமல்க
வாயுமாமறைக்கதீதமாகியபிரானுனநதநடஞ்செயவான். (௧௨)

சடைகளெண்டிசைதடவரவெண்பிறைதண்புனலொடுதுள்ள
வுடையெனும்புலியதளைவயங்கிடவொள்ளியதலைமாலை
மிடையுபுயங்களிற்றுயல்வரக்குறுநகைமிளிர்ந்தசெவ்வாய்த்தோற்ற
வடையுமெம்மனோர்க்காரருள்சுரப்பவனுனநதநடஞ்செயவான். (௧௩)

பொற்புமேவியசெவிக்குழையசைதரப்புருவமுமுரிவெய்த
வற்புமேவியபிரணவமலர்ப்பெருமாலிகைமணமவீசக்
கற்புமேவியமறைச்சிலம்புண்மையிற்கலகலகலவென்ன
வற்புமேவியவுளங்குடிகொள்பவனுனந்தநடஞ்செய்வான். (௧௪)

மறையுமற்றதனந்தமும்பந்தமின்மற்றுளகலையாவு
நிறையும்பூதமுங்கரணமும்பொறிகளுநிகழ்வற்றொளியாகி
யுறையும்பேதமுங்காலமும்விநதுவுமோங்குநாதமுந்தேறு
தறையுமற்புதஞானரூபபிரானுனந்தநடஞ்செய்வான். (௧௫)

உரியவஞ்செழுத்தெட்டெழுத்தாறெழுத்தோங்குநாலெழுத்தப்பாற்
பிரியமிக்கபிஞ்செழுத்தெனயாவரும்பேசுமூவெழுத்தெல்லாந்
தெரியநின்றதாமீரொழுத்தோரெழுத்தென்னுமெண்டிறனுகி
யரியமாமறையந்தத்திற்பயில்பவனுனந்தநடஞ்செய்வான். (௧௬)

சிகரமாமுகங்கரமொண்டாடிருவுதரமகரந்திண்டோள்
வகரஞ்சென்னியசிதுடிகவிதருகைவகரமபயக்கைய
மகரம்வெஞ்குறணகரந்திபிரணவம்வாசிகையதுவாக
வகரநேர்தரநிற்குமெம்மிறையவனானந்தநடஞ்செய்வான் (௧௭)

தோற்றமந்தமருகஞ்செயவபயஞ்சார்துதிக்கரம்புரவாற்ற
வேற்றசெந்தழனமுழுவதுமழித்திட விருங்குறள்வெரிநோர்தாண்
மாற்றருந்திரோபவஞ்செயவெடுத்ததாண்மதித்தனுக்கிரகிக்க
வாற்றன்மேயவெண்டோளுடையெம்பிரானானந்தநடஞ்செய்வான். (௧௮)

ஒன்றதாமலமிருவினைமூவகைமாயைமற்றுடலாகி
யென்றநான்கவத்தைகளைந்துமனுமுதலாறுமற்றிவ்வாறும்
பின்றவெண்ணுவார்புரிபணியெரன்பதும்பிறங்குமொன்றெனும்பத்து
மன்றதென்றிடாவண்ணமொண்சபைப்பிரானானந்தநடஞ்செய்வான். (௧௯)

புண்ணியம்புணரானந்தநடநெடும்பொழுதிவ்வாறுறச்செய்ய
நண்ணியங்கமர்பிராட்டியுள்ளுவந்தனளான்முகன்முதலாேரு
றெண்ணிலின்பமுற்றுமெனத்தாழ்ந்தனரிறைவியுமிவ்வாறே
மண்ணிலெற்றைக்கும்வழங்குகவென்றனள்வள்ளலுமோமென்றுன். (௨௦)

திருந்துதெய்வமாயூரத்திற்கௌரிதாண்டவதரிசனஞ்செய்வார்
பொருந்துபேற்றினையாவரோயறைகுவார்புண்டரீகத்தானுங்
கருந்துழாயனும்பணிந்துமைவதுவைநீகணிதரச்செயப்பெற்று
லிருநதியாங்கள்கண்டுய்குவமென்றனரிசைநதனன்பெருமானே. (௨௧)

திருநடனப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம். ௫௫௪

# திருமணப்படலம்.

கண்ணந்தாமலர்க்கற்பகவேந்தனுந்
தண்ணந்தாமரைமேயதவத்தனும்
வெண்ணந்தீரளாருகைத்தலவிண்டுவு
மெண்ணந்தான்மிக்கெழுமற்றையாவரும். (௧)

நடனங்கண்டுநனிமகிழ்பூத்தநா
மிடமருங்கமரோழுலகீன்றவ
ளுடனமர்ந்தொருவன்புரிமஞ்றலுந்
திடனமர்ந்துகண்டேத்துந்தவஞ்செய்தோம். (௨)

என்றுபேசியித்திங்களுமைப்பசி
நன்றுசெய்ததுநாடுந்தவமெனக்
கன்றுதீர்ந்தமனத்துக்களிப்பினு
ரின்றுசெய்வனசெய்துமென்றெண்ணினார். (௩)

கற்றவிச்சுவகன்மனைக்கூயிவட்
பொற்றமன்றல்புரிதிருமண்டப
மற்றமில்வகையாக்குதியாலெனச்
சொற்றனர்தலைமேற்கொண்டுசூழ்ந்தனன். (௪)

நீலமாமணிவேதிநெடுநிலஞ்
சாலவாக்கித்தவாதமரகதக்
கோலமார்ந்துகுலவுபடிகீளு
மேலநாற்புறத்தும்பியையச்செயா. (ரு)

அந்தவேதிகைமேற்பளிங்காற்சுவர்
சந்தமார்தரநாற்புறத்துஞ்சமைத்
துந்தவாயிலொருநான்கும்போக்குபு
நந்தவெண்ணில்சாலேகமுநாட்டினன். (சு)

ஆயவுள்ளிடத்தாயிரஞ்செம்மணி
மேயகும்பவடிநிலைமேறகொளத்
தூயவச்சிரச்சோதிபரப்பிடு
நேயவாயிரந்தூணநிறுவினன். (எ)

ஆநதத்தூண்மிசையம்பொன்செய்போதிகை
சந்தத்தாயதுலாமுஞ்சமைத்தன
னந்தச்செம்பவளஞ்செய்நலுத்திரம்
பநதத்தேய்ந்துபதியப்பொருத்தியே. (அ)

திருந்துமுத்திரமேற்றிகழ்மேதகம்
பொருநதுபல்சரம்பொற்பக்கிடத்தியல்
லருநதுமம்பொற்றகடுமிசைக்கொள
வருந்துதீர்தொழின்மாண்பிற்பரப்பினன். (கூ)

நாப்பணம்பொறகுறடுநகச்செய்து
மீப்பல்செம்மணியாதிமிளிர்தரக்
கோப்பமைத்துக்குலாவுமடிநிலை
யாப்பமைந்ததூணன்கதன்மேனிறீஇ. (க0)

போதியுத்திரமாதிபொருந்தமுன்
னோதியாங்கொளிவீசவுஞற்றியே
சோதிமேவத்துலங்குவிமானமும்
பேதியாதுபிறஙகவியற்றினன். (கக)

சுற்றுமேவத்துலங்குகொடுங்கையி
னுற்றுநாலவொளிர்தரளத்தொடை
பற்றுசூஞ்சங்கணுப்பட்பயினறிடக்
கற்றுவல்லகருமனியறறினன். (கஉ)

இரசதத்தினியற்றியவுண்டைகள்
பரவியெங்கும்பண்பார்ந்திடத்தூக்கியே
விரவுசெம்பொன்விதானமுதலிய
வுரவின்மிக்கவையாவுமுறுத்தினன். (கங)

சோதிமண்டபஞ்சூழதரக்காவண
நீதிவானமறையநிரப்பியே
தீதிலாதவிதானஞ்செழுந்தொடை
யாதியாவுமமையப்பொருத்தியே. (கச)

காவணத்தமைகால்பலவறறினு, மாவணத்தகதலிவளக்கழை,
தூவணத்தகமுகுந்தூறுத்துபு, பூவணத்ததொடையும்பொருத்தினன். (௧௫)

அடியின்முத்தமணலளவில்லன, நெடியதாகப்பரப்பிவிரப்பியே
யொடிவின்மண்டபத்தொண்மணிக்கம்பலம், படியவிட்டுப்பலவுமியற்றினன். ()

வந்துமாலயனாதியவானவர், முந்துநின்றுமுடி[illegible]னன்றனு
நந்துமோகையினன்கெழுந்தாரிரு, ளுந்துமறறதுநோக்கியுவந்தனர். (௧௭)

விண்ணின்மேயவர்யாவரும்பாதலக், கண்ணில்வாழ்பவர்யாருங்கடல்சுலா
மண்ணில்வாழ்க்கையர்யாரும்வரப்புரிந, தெண்ணிலாவுவப்பெய்தியுழலுவார்,

மண்ணுளாரென்றுமாமலர்க்கறபக, விண்ணுளாரொன்றுமேவரும்பாதலக்
கண்ணுளாரொன்றுங்காணிவரித்தனே. யெண்ணுளாரொனறுநதேர்தலங்கில்லையே.

மாடமாளிகைமண்டபங்கோபுரங், கூடமேடைசெய்குன்றஞ்சதுக்கங்க
ளாடரங்கமணிமறுகாதியா, நீடவாய்நதநெருக்கமெண்வீழ்தரா. (௨0)

இன்னவாறுநெருக்கமியைதர, வன்னவாகனனாதியவானவர்
முன்னவன்கலியாணமுகூர்த்தநாள், சொன்னவந்நகர்தேற்றிடச்சூழுவார். (௨௧

இன்றுநாதன்றிருமணமெய்துமென், றின்றுகேள்விமாயூரத்துளார்க்கெலா
நனறுசொறறிநதமுறையாலெனாத், தொன்றுவள்ளுவறபார்த்திதுசொறறனர். ()

நாடுவள்ளுவனக்குநீராடுபு, கூடுநீறணிநதுண்டுகுலாய்ப்புனைந
தீடுசாலிபமேன்முரசேறறியே, பாடுமோகையினீதுபகருவான். (௨௩)

அஞ்சனுயகிபார்வள்ளலாரிவர், தஞ்சமாகமணம்புரிதன்மையா
லெஞ்சலின்றிப்புனைமினிம்மாநகர்த், நுஞ்சலின்றித்தொழவருவீரென்றான். (௨௪)

என்றவார்த்தைசெவியகத்தேறலு, மொன்றயாவருமுள்ளங்களித்தனர்
வென்றமாதவமிக்குமோம்யாமென, வன்றம்மாநகரம்மணிவாரரோ. (௨௫)

வேறு.

காவணமிடுவாருங்கணநிரைகோப்புண்ண
மாவணமாளிகைமேல்வண்கொடிநடுவாருந
தூவணமணிபொனனறமிரணம்புனைவாரும்
பூவணநறுமாலைபொலிதாரதொடுபபாரும். (௨௬)

கன்னலுங்கதலிகளுங்காலுறுமசைப்பாரு
மினனல்செய்பசும்பொன்சார்விதானங்களிசைப்பாரு
முன்னலதரிதென்னமுகந்துபொனனிறைப்பாரு
மின்னலென்பதுதீர்நததெங்குமென்றுரைப்பாரும். (௨௭)

கரிமிசைவருவாருங்கடுநடைவிறல்வாயாத
பரிமிசைவருவாரும்பார்கிழியுருள்பூண்ட
கிரிமிசைவருவாருங்கிளர்மணிச்சிவிகையெனு
மரிமிசைவருவாருமணிதல்கண்டுவப்பாரும். (௨௮)

அடிசில்கள்சமைப்பாருமந்தணர்க்கிடுவாரு
முடிவருந்தாம்பூலமுகந்தனர்கொடுப்பாருங்
கடிதலில்கருப்பூரக்கலவைகளளைவாரு
நொடிதலின்மலர்மாலைநோன்மையிறறரிப்பாரும். (௨௯)

புதுக்கலன்புனைவாரும்புத்துடையுடுப்பாரு
மதுக்கமழ்மலர்க்கூந்தன்மகளிரைப்புனைவாரும்
விதுக்குறைநுதலார்தமிள்ளிர்நடங்காண்பாருஞ்
சதுக்கமுன்மறுகெங்குந்ததைதரப்பயில்வாரும். (௬0)

வேறு.

ஆயினர்மைந்தர்மாதரத்தகுகாலத்தாங்கு
வேயினவயன்மாலாதிவிண்ணவரொருங்குகூடிப்
பாயினசீர்த்திவள்ளற்பரம்பரன்மணத்தின்முன்னுண்
மேயினமண்கவர்ந்துவித்துகள்வித்தினரால். (௬க)

பணைபலமுழங்காநிற்கப்பன்மறையெழுந்துதுள்ள
விணையிலாப்பெருமான்றன்னையிலங்குபொற்பீடத்தேற்றி
யணைதருசெம்பொனன்னுணலங்கமுன்கையிற்சேர்த்திப்
பிணைதருவாழ்த்தெடுத்தார்பிரமன்முற்றேவர்யாரும். (௬உ)

புரிதருசடங்குமற்றும்பொலிதரச்செய்தபின்பு
வரிதருபணைமுழங்கமஞ்சனச்சாலைபுக்குத்
தெரிதருகங்கையாதித்தீர்த்தங்கள்பலவுங்கொண்டு
விரிதருமன்பினாட்டல்வேண்டினார்துசெய்வார். (௬௩)

அடிகள்செஞ்சடையும்புற்றோலாடையுமரவப்பூணுஞ்
செடிதருகபாலமாலைசெறியும்வெள்ளெற்புமாலை
முடியவுமொழித்துவேறோர்முழுக்கவினுருவங்கொள்ளி
னொடிவறயாங்குற்றேவலுஞற்றுதற்கழகாமென்றார். (௬௪)

என்றுவிண்ணப்பஞ்செய்யவடியவரொண்ணியாங்கே
நன்றுவந்தளித்தல்வல்லநம்பிரான்வள்ளறபுந்தே
யொன்றுமப்படியேயாதுமென்றொருவடிவங்கொண்டான்
கன்றுதறவிர்ந்தியாருங்கைகுவித்திறைஞ்சிநின்றார். (௬௫)

மறைமுடியிருக்குநதேனவமணிசெய்பொற்பீடத்தேற்றிக்
குறையறப்பூரித்துள்ளகும்பத்துநன்னீராட்டிக்
கறையிலொறறுடையிட்டாகனிந்துசுந்தரப்பேர்நம்பி
யிறையில்வட்டகையேந்தத்தெரிட்டியையநெற்றியினீறிட்டு. (௬௬)

புலியதள்பிணங்கிச்சேரப்பொருநறுதிக்கெட்டுமெண்ண
நலிவறுசெம்பொன்னுடைநலத்தகமருங்கிற்சேர்த்தி
யொலிசெய்முற்செருக்கின்சீருமுற்றபிற்போக்கின்சீரு
மெலிவருமுகுநதற்கம்மாமிகுமயல்செய்யாநிறக. (௬எ)

முன்னிகழ்கரித்தோனீங்கிமுடிநதுளம்புழுங்காநிற்கப்
பொன்வரைச்சிகரநின்றும்பொன்னரித்திழியாநிற்குந்
தன்னிகரருவிமானத்தனையொவ்வாச்செம்பொன்னுடை
மின்னியவுத்தரீயம்வெகுண்டிருளனைத்துமேய. (௬அ)

ஒழுகொளிபரபபுநதிங்களொருளிர்சடைநின்றுஞ்சற்றே
வழுவிநெற்றியினுற்றென்னவயங்குபுண்டரவெண்ணீறுந
தழுவுமம்மதியின்பாங்கர்ச்சாருரோகணியேயென்னக்
கெழுமணிகளாத்தசந்தக்கேழ்கிளர்பொட்டுமின்ன. (௬௯)

ரநதிசடைக்காட்டோடுமறைந்தவண்மன்றநாய்ப
ரவுறமுடியின்மேலானுறுதலுங்கூடுமென்று
ரவுறுமதைமறைத்தபண்புபோன்முடியின்மேலால்
ரவுறவிளங்குங்காந்திமிளிர்மணிமகுடஞ்சேர்த்து. (௪௦)

டையெனுமிருக்கைதீர்ந்துதனியமர்கங்கைமங்கை*
இடைசெவியடைந்தேதேனும்விளம்பினுமேருவண்ண
டையவும்வயிரமாதியலங்குபன்மணிகால்யாத்த
டையமர்செம்பொற்றோடுபெரிலிருபாலும்சேர்த்து. (௪௧)

தன்னைமுன்குழைத்துநாளுந்தவாதெழுவீக்கமாற்ற
பின்னைவென்றொளிர்மாமேருமேயபன்மணிகளோடு
மென்னையென்றெண்ணுவண்ணமியைந்துமேற்கவிந்ததொக்கும்
பொன்னைவென்றொளிருந்தோளிற்பொருத்தியமணிக்கேயூரம். (௪௨)

பிழையறியாதுசெய்யிற்பெருஞ்சினங்கொடுபல்பல்லுந்
தழையொளிவிழியும்போக்கறவிர்த்திடப்பன்னிரண்டு
விழைகதிர்களுஞ்சீராழிக்கடகமாய்விராய்முன்கையி
னுழைவிரல்களினுற்றென்னவுறைத்தவையொளிரச்சேர்த்து. (௪௩)

ன்றிமுன்கொடுத்தகோடும்பரந்தகச்சபத்தினோடுந
கன்றியவனப்புமார்பிற்றுலங்கமுத்தாரஞ்சாத்தி
வென்றியசெழும்பாலாழிகடுவெழுவெய்யோன்மான
வொன்றியவதற்குநாப்பணொண்மணிமதாணிசாத்தி. (௪௪)

திசையுடுத்தனையின்மாட்டுநேத்திரஞ்செறியச்சூழின்
வசையெனவிலக்கினுலும்விலக்குமற்றதுசெயாம
லசைவறப்பிடித்தல்போலவணிகெழுமுதரபந்த
மிசைதரவெடுத்துப்பூட்டியிருண்முழுதறுத்தபின்னை. (௪௫)

உலகில்யாவரும்யான்சொற்றவுரைவழிபற்றுவாரோ
விலகமேலுயர்வர்பற்றலிதுவெனத்தெரித்தல்போலக்
குலமறைநெறிகிழியாகிக்கோலங்கொள்பாதம்பற்ற
வலர்தொடையெடுத்துத்தோளிலற்புதம்பொலியச்சேர்த்து. (௪௬)

இன்னுமற்றுள்ளயாவுமிமையவர்புனையப்பெற்று
மன்னுபேரழகுபொங்கமறைமுதனிற்றனோக்கி
முன்னுகண்ணெச்சில்போக்கிமுகுந்தனாதியவானோர்கள்
பன்னுமுண்மகிழ்ச்சிபொங்கப்பரவினர்வாழ்த்திநின்றார். (௪௭)

திருவுலாப்போதல்வேண்டுமென்றுவிண்ணப்பஞ்செய்து
மருவுலாங்கடுக்கைமாலைவள்ளலாருடன்பாடோர்ந்து
குருவுலாஞ்செம்பொன்மானங்கொணர்ந்தெதிர்நிறுத்தினார்க
ளுருவுலாமமராதியாவருமொருங்குமொய்த்தார். (௪௮)

முரசுதண்ணுமைதடாரிமொந்தைகல்லலகுபம்பை
விரசுபன்முருடுமற்றுமிளிர்தகுணிச்சமெல்லாம்
பரசுபல்கடலுமொன்றியார்த்தெனப்பரவியார்ப்ப
வரசுகுணத்தினோங்கிமற்றுளவனைத்துமார்ப்ப. (௪௯)

* இடைசெவி - என்பதில்சகரம்தொகுத்தல்விகாரம்.

கொடிகுடையாலவட்டங்கோணியதண்டங்கோணுத்
தடிகளொலியலாதியாவையுந்ததைந்துமொய்ப்ப
நெடியவன்பிரமன்பாங்கிர்நீட்டுகைமிசைக்கைவைத்துக்
கடியபாதுகைத்தாள்வைத்துநடந்தனன்கருணைமூர்த்தி. (௫0)

மறைமுடியமர்வான்வந்தான்மாயூரநாதன்வந்தா
னறைபெருங்கருணைச்செல்வியஞ்சனாயகியைவேட்கு
முறையுடன்மணாளன்வந்தான்மூவுலகாளிவந்தா
னிறையவன்வந்தான்வந்தானென்றுசின்னங்களார்ப்ப. (௫௧)

மறைபலமுழங்காநிற்கவானவர்பல்லாண்டோதக்
கறைதபுமுனிவரெல்லாங்கைதலைகுவித்துநிற்ப
நிறைபெருவிமானத்தேறிநிகழ்தரநடத்துங்காலைக்
குறைமதிநுதலார்யாருங்கூடுபுநோக்கினாரால். (௫௨)

நோக்கியமடவார்தம்மைநோக்கினன்மாரவேளு
நோக்கியலனையான்கையிற்றேன்சிலைவிடுக்கும்பூவு
நோக்கியவுடைவாளென்றுநலல்விளைத்தாழம்பூவு
நோக்கியலவயன்மட்டுநோக்கிலானாகிச்செல்வான். (௫௩)

கருங்குழற்பாரமுநெஞ்சுங்கட்டவிழ்ந்தலைந்துசோர
நெருங்கியமுலையுங்கொண்டகாமமுநிமிர்ந்துவீங்க
மருங்குலுமுயிருந்தேம்பவரிவளையாழியாடை
யொருங்கிழப்புறறமாதருயிரிழப்பதற்குமுள்வார். (௫௪)

ஒருமடமயிலஞ்சாயலுமையைநீர்வனைவீரொன்னிற
பருவமங்கையரோயாயயாமெலாம்படரின்மூழ்கி
வெருவரமையல்பூட்டல்வேண்டுமோவிதிதானீதோ
பொருவரும்வனப்புவாய்ந்தீர்புகலுவீரென்பார்மாதர். (௫௫)

மயர்வுற்றமங்கைநல்லாளொருத்திமாதேவற்பாரா
வயர்வுற்றயானவாவுமதனைநீரளித்தல்செய்யீ
ருயர்புற்றீர்வறுமையீருமலீருமைவள்ளலென்றோர்
பெயர்வைத்துவிளித்தார்க்காணிற்பேசுதல்பலவுண்டென்றாள். (௫௬)

இளமுலைமங்கைநல்லாளொருத்தியெம்மிறைவன்முன்போய்க்
குளநடுவலர்ந்தசெங்கட்கமலத்தாற்கோலமார
னளமிரவழல்செய்தீரொன்றறைகுவர்நும்மையாரு
முளமமர்வில்லுமேவுமொழித்தெரித்தீரோவென்றாள். (௫௭)

எண்ணியவெண்ணியாங்கேயடுத்தவரெய்தச்செய்யும்
புண்ணியரென்றுநும்மையாவரும்புகழ்வார்பொய்யே
யெண்ணியவெண்ணியாங்கேயெனக்கருள்செய்யீரோனு
நண்ணியசிறிதுநல்கீரெனநவின்றனளோர்நங்கை. (௫௮)

ஊற்றின்பவாரியாயவும்பர்நாயகன்முன்சென்று
பற்றின்பறுகூரவெண்ணும்பைந்தொடிக்கரத்தொருத்தி
முற்றின்பங்குறித்தீர்நம்மைமுயங்குமினென்பீரெற்குச்
சிற்றின்பஞ்செய்யாதீரோபேரின்பஞ்செய்வீரென்றாள். (௫௯)

தளரிடையொசியக்கொங்கைபொருமிடச்சார்ந்தோர்மங்கை
கிளர்புகழ்மிகுமாயூரகேத்திரத்தும்மைக்கண்டோர்
விளர்தபுத்தெண்ணம்வாய்ப்பாரெனவிளம்பிடும்புராணம்
வளர்மயலெனக்குமட்டுமற்றதுபொய்யோவென்றாள். (சுo)

நிறைகருங்கூந்தற்செவ்வாய்நேரிழையொருமடந்தை
மறைபுணரொருதேர்வேட்டீர்மறைபுணரொருதேரொன்பான்
முறையுறவமையுமெனறுமொழியவும்வேளீர்நும்மைக்
குறைமதியுடையாரொன்றுகூறுதலொக்குமென்றாள். (சுக)

அருத்தியினொருமடந்தையண்ணறன்னெதிர்சென்றோர்தேத்
தொருத்திபூமாலைசூட்டியுமைவளைவித்தாண்முன்னம்
பொருத்தியவதுபோலாதுபூமாலைசூட்டுவேனுன்
திருத்திகொண்டனங்கவேள்செய்சிறுமைதீர்த்தாளுமென்றாள். (சுஉ)

சினவிடையாளிமுன்னஞ்சென்றொருதெரிவைநின்று
மனவிடையாமையோடுவயக்கியமார்பீரொன்னை
நனவிடைவந்துகூடீராயினுநள்ளிராவிற்
கனவிடைவருவீரப்பாற்காண்பனும்விரதமென்றாள். (சுங)

உவாமதிமுகத்துநல்லாளரிவையாங்கொருத்திநேர்ந்தென்
கவாவொருதிருப்பைஞ்ஞீலிக்கதலியேதோணெல்வேலித்
தவாதெழுகழையேயெனணிற்றமுவுறத்தடையொன்றுண்டோ
வவாவியதிருக்கரீர்பின்னளித்திடுபயனென்னென்றாள். (சுச)

தக்கன்மாட்டடைதல்கூடாதென்னவுந்தடுத்துச்சார்ந்த
பக்கமாமடநலாளைப்பரிந்தின்றுவதுவைசெய்வீர்
புக்கயான்மறுத்தல்செய்யேனென்னவும்பொருந்தல்செய்யீர்
தக்கதோவிதுவென்றேதித்தாழ்ந்தனளாங்கோர்தையல். (சுரு)

கண்ணகன்புவனமெல்லாங்காப்பவர்நீரேயென்பா
ரண்ணலங்கருப்புவில்லானடர்ந்தெனைவருத்தஞ்செய்யு
நண்ணருந்துயரங்காப்பார்மற்றெவர்நவிலுமென்றாள்
பண்ணலங்கனிந்தநீஞ்சொற்பைந்தொடியொருபொற்கொம்பு. (சுசு)

கொடுவிடமுண்ணப்பார்த்துக்கொண்டிருந்தவள்பால்வேட்கை
விடுவதுசெய்யீர்மேலுமேலுநீர்விழைதல்செய்வீர்
தொடுமுனம்யானுண்பேனென்றெழுமெனைத்தொடர்புகொள்ளீர்
படுவதீதழகோவென்றுபகர்ந்தனளங்கோர்மங்கை. (சுஎ)

ஒருபுறத்தொருத்திமேவவுவந்துநீர்வைத்தீர்மற்றை
யொருபுறத்தென்னைவைப்பிலுண்டாகுங்குற்றம்யாதே
பொருவருமுடம்புமுற்றும்பசந்ததும்பொருந்தக்காண்பீர்
பொருவிலீரொன்றுபோற்றிப்புகன்றனளெதிர்ந்தோர்மாது, (சுஅ)

உடைமுதலெவையுந்தோற்றேமும்பொருட்டாயகோல
மடையவுமுகத்துநோககாளுக்குமினதற்கொவ்வீரோன்
மிடையழனெற்றிநாட்டம்விழித்தேனுநோக்கல்செய்வீர்
புடைமழுப்படையீரொன்றுபுகன்றனள்சினந்தோர்பூவை. (சுகூ)

இவ்வண்ணம்பேதையாதிப்பேரிளம்பெண்ணீருய
செவ்வண்ணமடவாரெல்லாஞ்செறிபெருங்காமமூழ்க
வெவ்வண்ணமாயினேருமிறைஞ்சிநின்றேத்தல்செய்ய
வவ்வண்ணமானோன்கோயிலணிகிளர்வாயில்வந்தான். (எ0)

மானநின்றிழிந்துமன்றன்மண்டபகாப்பணைய்தி
யூனமில்செம்பொற்பீடத்தும்பர்நாயகனிருந்தா
னவப்பொழுதுபற்பலரமடமாதர்யாரும்
கானமுற்றழுவிநின்றுகவின்பெறநடித்தாரன்றே. (எக)

திருமகண்முதலோராய்தெய்வமின்னார்கள்பல்லோ
ரருமறைவாழ்த்துமல்கவான்றபல்லியமுமார்ப்பப்
பொருவருமுலகமீன்றாண்முன்கையிற்பொன்னாண்சேர்தநி
மருவுமஞ்சனச்சாலைக்குட்போயினார்மகிழ்ச்சிதுள்ள. (எஉ)

கருங்குழறகட்டவிழ்த்துக்கமழ்நறுந்தயிலம்பூசி
யொருங்குபல்விரையினோடுமுறுதுவர்பலவுமப்பி
யருங்குணத்தென்னுநன்னீர்மஞ்சனமமையவாட்டி
மருங்குமொய்த்தகலாரெல்லாம்வயங்கவொற்றுடையிட்டார். (எங)

செறிபலபல்வாய்த்தந் ச்சீப்பெடுத்தொருங்குசீவிப்
பறிநிகர்சடையான்றேவியெனல்வெளிப்படுத்துவார்போ
னெறிதருஞ்சடையிற்றிகழ்தருநாகமாதிக்
குறிகொளுங்குஞ்சமீறுக்கோப்பனபலவுங்கோத்து. (எச)

குழலெனுமிருளைவேறல்குறித்தசெங்கதிரும்வானத்
துழல்பிறைமதியுங்கூடியொருங்குவீற்றிருந்ததென்ன
வழல்படுகமலராகமலங்குவெண்டரளமேவி
நிழல்படுபணியிரண்டுநிலவுறமுன்னர்வைத்து. (எரு)

பிறைமிசைவானவில்லுபபிறங்குறக்கண்டாறபோல
நிறையொளிநுதலின்மேலாலிலம்பகநிலவச்சூட்டி
மறைபுகல்கற்புவாயநதமாதரார்திலகமாய
விறைவிதனெற்றிநாபபணிலங்கவோர்திலகமிட்டு (எசு)

கருநதடங்கண்ணியெனறுகனைவதறகேற்பவேலை
பொருந்தடங்கண்ணினம்மவஞ்சனம்பொலியத்தீட்டித்
திருந்தியவாயோசெய்யபவளமோவெனத்தேர்பாக்குப்
பொருந்தியமுத்தமென்னமூக்கணிபொருந்தக்கோத்து. (எஎ)

முடிமிசையொருபெண்வைத்தானென்னெனின்முழுநீரொன்பான
கொடியிடையுடையானியேகுறிக்கொளென்றுணர்த்தும்பாக்கு
வடியிளங்கதிரிரண்டோரிருபாலுமருவியாங்குப்
படியில்செம்மணிகுயின்றகாதணிபலவுஞ்சேர்த்து. (எஅ)

கொடியெனத்தவளாகிற்குங்கோலமார்மருங்குல்சூழப்
படிபெறலரியசெய்யபட்டுடைகொய்துடுத்திக்
கடிதலில்கச்சுப்பூண்டுகவின்றதோண்மிசைமுன்றானை
வடிவமைந்திடச்சூழ்வித்துமருங்குற்பாற்செருகல்செய்து. (எகூ)

கொங்கையங்குவட்டுமேலாற்குலவிவீழருவியென்ன
வங்கதிர்முத்தமாலையமைதரவெடுத்துப்பூண்டு
பங்கமில்கழுத்துச்சூழப்பற்பலபணியுஞ்சேர்த்துப்
பொங்குபொன்மணிசெய்கோவையாவையும்பொருந்தப்பூண்டு. (அ0)

இரவினுங்குவிதல்செய்யாக்கமலங்களிவையாமென்று
பரவிவந்ததிசயித்துப்பார்க்குஞ்செங்கதிரோபோல
வரமணிக்கடகமாதிவளைபலமுன்கைசேர்த்து
விரனிறைதரப்பொன்னாழிபற்பலவிளங்கக்கோத்து. (அக)

திருவரையொட்டியாணமேகலைசெழுங்கலாப
மொருவரும்பிறவுஞ்சேர்த்திட்டொளிகிளர்பாதசால
மருவியவனைத்தும்பூண்டுமணியாழிவிரலிற்கோத்துப்
பொருவரும்வனப்புநோக்கிப்போற்றிநின்றனரெல்லாரும். (அஉ)

கணிதநூல்வல்லமாந்தர்காலமீதென்னவல்லே
பிணிவிசிபியமுழங்கப்பெருமறையார்ப்புமல்கத்
தணிவருமுலகமீன்றுதயங்குகற்பகப்பூங்கொம்பை
யணிபெறக்கொண்டுவந்தாங்கையன்மாட்டிருத்தினரால். (அ௩)

இரவியுங்கதிரும்வேறுவேறிருந்தென்னமேய
பரமனையுமையைநோக்கிப்பங்கயத்தவன்மாலாதி
வரமிகுபுலவரெல்லாம்வாழ்ந்தனமென்றுதாழ்ந்தார்
திரமிகுமுவகைபொங்கவெழுந்தனன்செங்கண்மாயோன். (அச)

சுவைமதுப்பருக்கநல்கித்தொடங்குபாவனையில்பூசை
நவையறப்புரிந்துமுந்தைநாமமாதிகளுரைத்துச்
செவையுறுவள்ளல்கையிற்றிருத்தகனனீர்வார்த்தா
னவையகத்துள்ளார்யாருமரகரகரவெனவார்த்தார். (அரு)

செம்மலராளுமையன்குண்டத்துச்செந்தீயிட்டுக்
கைம்மலர்நிறையவோமகாட்டமுமுறித்துச்சேர்த்துப்
பொம்மலுற்றமைசிருக்குச்சிரவத்தானெய்பூரிப்ப
விம்மலுற்றெழுந்ததம்மாவேள்வித்தீவலஞ்சுழித்தே. (அசு)

ஆயபல்லியங்களார்ப்பவந்தணர்வாழ்த்துமல்க
மேயபன்மறைமுழங்கவிரும்புமூவுலகும்வாழத்
தூயமங்கலநாண்கையிறசுந்தரவள்ளல்கொண்டு
நாயகிதிருக்கழுத்தினலமுறப்பூட்டினானே. (அஎ)

ஆர்த்தனதடாரிபேரியார்த்தனமுருடுமொந்தை
யார்த்தனபடகந்தக்கையார்த்தனசின்னம்பீலி
யார்த்தனபம்பைசங்கமார்த்தனதாளம்வீணை
யார்த்தனமுனிவர்செவ்வாயார்த்தனமறைகளெல்லாம். (அஅ)

வள்ளலும்பிராட்டியங்கைமலரொருகையிற்பற்றி
யொள்ளழற்கடவுளுந்தானென்பதானுவந்துசூழ்ந்து
தெள்ளரிச்சிலம்பலம்பச்சேயிழையொடுநேர்நின்று
வெள்ளிலைக்குறித்திடாதவெண்பொரியட்டினால். (அகூ)

மங்கலமணுட்டிபாதமல்லொருகையாற்பற்றி
மங்கலவம்மிமேலான்மலர்ப்பரப்பியையவைத்து
மங்கலமடமீனேரேவந்தடிபணியக்காட்டி
மங்கலத்தவிசின்மேலான்மருவினனுலகம்வாழ்த்த. (க0)

நத்தமென்றுரைக்குங்கூந்தனுயிகியோடிம்வைகுஞ்
சுத்தமெய்ஞ்ஞானனந்தச்சுந்தரச்சோதிமுன்ன
ருத்தமவயன்மாலாதியும்பர்கணேர்வையோடு
முத்தவாலரிசிவாரிமுனிவறத்தூவிவாழ்ந்தார். (கக)

இருவரும்யானமேலாலியைந்துலாப்போதல்வேண்டும்
பருவருந்தன்மைநீங்கிப்பாரொலாமுய்யவென்ன
மருவருங்கடுக்கைமோலிவள்ளமுன்குறித்தவாறே
யொருவருமஞ்சலம்மையொடுமுலாப்போந்தானன்றே. (கஉ)

ஆரணமுடிக்குமெட்டானஞ்சனுயகியையேட்டு
வாரணமாதிசெற்றமறுகுலாப்போதல்கண்ட
தாரணவியதோண்மைந்தர்தடங்கணுருவகைபூத்து
நீரணக்கும்பிட்டேத்தியிவையிவைநிகழ்த்தலுற்றார். (கங)

சீலமார்வள்ளலார்தந்திருக்கோலஞ்சிறந்ததென்பார்
கோலமாரஞ்சலம்மைகோலமேசிறந்ததென்பார்
மூலமாரிருவர்கோலமுழுமையுஞ்சிறப்பேயென்பார்
ஞாலமாரீதுகாணநாஞ்செய்ததவமென்னென்பார். (கச)

விழிபடைத்ததற்குப்பேறுமேதகப்பெற்றேமென்பார்
பழியிலிச்சன்மமேநற்பண்புகூர்சன்மமென்பார்
தழியமற்றிதுநோக்கார்தஞ்சன்மமேசன்மமென்பார்
கழிசுவையுடைத்தாலிந்தக்கல்யாணக்காட்சியென்பார். (கரு)

சிலர்நறுமலரிறைப்பார்சிலர்செழும்பொரியிறைப்பார்
சிலர்நறும்புனலளாயசந்தனச்சேறிறைப்பார்
சிலர்பசும்பொன்னிறைப்பார்சிலரணிவிளக்கெடுப்பார்
சிலரரக்கமைந்தநீர்சுழற்றுபுக்கவிழ்த்தல்செய்வார். (கசு)

இன்னணநகரம்வாழ்வோர்யாவருமின்பமெய்தக்
கன்னலங்குதலைச்செவ்வாய்க்காமருதோகையோடு
முன்னவன்வள்ளற்பெம்மான்முனிவருமுலாப்போந்துறமுன
சொன்னமுமணியுமேயசுடர்ப்பெருங்கோயிலம்மா. (கஎ)

ஆங்குச்செய்சடங்குமுற்றுமமுகுறச்செய்தபின்றை
யோங்குபேரிடபதீர்த்தத்துற்றுநீராடல்செய்து
வீங்குதன்மணத்துவந்தவேதன்மாலாதியோர்க்கும்
பாங்குசேர்விருந்துமுன்னுப்பலமுகமனுன்காற்றி. (கஅ)

அவரவரிருக்கைசேரவிடைகொடுத்தனுப்பிப்பின்பு
கவர்மனத்தடையாவையன்கருதிலிங்கத்தைமேவி
யிவர்பெருங்கருணையோடுமிருந்தனனிலகுவஞ்சிப்
பவர்புரைமருங்குற்செவ்வாய்ப்பைந்தொடித்தோகையன்னாள். (கக)

ஒருகரமபயஞ்செய்யவூருவிலொருகைவைத்தே
மருவுபல்லுயிர்க்குமின்பவாழ்வளித்தமர்ந்தானிந்தப்
பொருவருமன்றல்காண்போர்பொலிதரகடாத்துவோர்மெய்த்
திருவொடும்பொலிந்துபின்னர்ச்சிவகதியடைந்துவாழ்வார். (கoo)

திருமணப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம். எருச.

# யானையுரித்தபடலம்.

இயங்குபல்லுயிருமேனையுயிர்களுமிரியாவின்ப
முயங்குமான்மியத்ததாகிமுழுமறைமுடியினுளுந்
தயங்குமுண்மையதேயாயதவாப்புகழ்மாயூரத்தின்
வயங்குதென்மேல்பாற்றாருவனமெனும்வனமொன்றுண்டால். (க)

அத்தருவனத்தில்வாழுமருந்தவமுனிவர்பல்லோர்
சுத்தவில்லொழுக்கம்பூண்டுகருமமேதுணிபாமன்றிச்
சத்தறிவின்பருபத்தனிமுதல்வேறின்றெனனும்
வித்தகமருவிநின்றார்மேல்வரும்விளைவுதேறார். (உ)

அனையபன்முனிவர்தங்களில்லறக்கிழமையாளு
நனையமென்கூந்தற்செவ்வாய்ப்பார்ப்பனநல்லார்பல்லார்
புனையவாங்கற்புப்போலப்பொற்புமேம்பட்டோமென்று
வினையயாவரையுமெள்ளித்தருக்குவாய்ந்திருப்பாரம்மா. (ங)

இருதிறத்தவருங்கொண்டவிருஞ்செருக்கொருங்குதேர்ந்து
பொருவருமகதிநல்யாழ்ப்புங்கவன்மாயூரஞ்சார்ந்
தருவுருமுபயமாயவண்ணலையடியிற்றாழ்ந்து
பெருகுமற்றவர்செருக்கின்பெருக்கம்விண்ணப்பஞ்செய்தான். (ச)

அன்னவன்செருக்குக்காண்டுமென்றவற்கருளிப்போக்கி
முன்னவன்மாயூரேசன்முகுந்தனைநினைத்தானம்மா
மன்னவன்வந்துசாழமாயமாதாகியாழோன்
சொன்னவன்முனிவர்பாற்போய்ச்சோதனைபுரிதியென்றான். (ரு)

என்றலும்வணங்கிமாயவெழுந்தனனஞ்சலம்மை
கன்றலில்கருணையேற்றுக்காமருமடந்தையாகி
மன்றல்செய்மலர்சூழ்தாருவனத்திடைச்சென்றாளுக
வொன்றல்செய்முனிவர்யாருமொருங்குகண்விடுத்துக்கண்டார். (சு)

கண்டலுங்கருப்புவில்லான்கணைக்கெலாமிலக்கமாகி
மூண்டவெங்காமம்பொங்கப்பருகுவார்போலமொய்த்துப்
பூண்டமால்யானையுண்டவெள்ளில்ங்கனியேபோன்று
மாண்டதந்தவமுமுள்ளச்செருக்குமாண்டவரோயானார். (எ)

முலையொன்றேகண்டுசில்லோர்முரிதருபுருவமாய
சிலையொன்றேகண்டுசில்லோர்சிற்றிடையுடுக்கப்பட்ட
கலையொன்றேகண்டுசில்லோர்கலையுளுமணிகால்யாத்த
தலையொன்றேகண்டுசில்லோர்தவமொரீஇமயங்கிவீழ்ந்தார். (அ)

விழியினாலுடைந்தார்சில்லோர்கிளியினுமிழற்றுமின்றே
மொழியினாலுடைந்தார்சில்லோர்மோகஞ்செய்மேனிச்சாயற்
கழியினாலுடைந்தார்சில்லோர்கண்டனகவருமுந்திச்
சுழியினாலுடைந்தார்சில்லோர்தோற்றத்தாலுடைந்தார்சில்லோர். (௯)

முந்தியகடுப்பிற்சென்றுமோகினிவடிவங்கண்டு
பிந்தியநடையராகிப்பேதுற்றுநெஞ்சமாழ்ந
திந்தியமனைத்தும்வீழ்த்திச்செயலின்றியேங்கிவீழ்ந்தா
ருந்தியகருமமொன்றேயுறுபொருளெனக்கொண்டுள்ளார். (௧௦)

இவர்செயலின்னதாகவினியமாயூரமேய
பவர்படுசடிலமோலிப்பரம்பரன்வள்ளற்பெம்மான்
றவர்மனைக்கிழமைபூண்டுதருக்குமேன்மேலுங்கொள்ளு
மவர்திறமளக்குமாறேரழகியவுருவங்கொள்வான். (௧௧)

மன்னியகுறுக்கையிலகண்மதனனையெரித்தபின்ன
ருன்னியவனையான்செய்கையொருதானேசெயக்கொண்டாங்குத்
துன்னியவனந்தகோடிசூரியர்திரண்டாலொத்து
மின்னியவனப்புவாய்ந்துவிளங்குமோருருவங்கொள்வான. (௧௨)

எண்ணிலாவண்டத்துள்ளுமியைதரவியாபித்துள்ள
வெண்ணிலாவனப்புமுற்றுமெழுந்தொருங்குற்றாலென்ன
வெண்ணிலாவுயிர்களுக்குமெஞ்ஞான்றுங்களைகணாய
வெண்ணிலாமறைக்குமெட்டாணிலங்குமோருருவங்கொள்வான். (௧௩)

மாமருமதிகளங்கமாறிவநதிருந்தாலன்ன
காமருமுகமும்பொன்கடைந்தெடுத்தனையதோளும்
பூமருமாலைமார்பும்பொழிபெருங்கருணைக்கண்ணுந்
தூமருவியவெண்மூரறேற்றிடுஞ்செய்யவாயும். (௧௪)

அணிகெழுமுழந்தாடோயுமங்கையுமெழிற்கவானுங்
கணிகெழுசிறப்புவாய்ந்தகணைக்காலுங்கமலத்தோடு
பிணிகெழுதுயர்க்கணழப்பிறங்குசெம்பதமுமற்றுங்
குணிகெழுமாமைசொட்டுங்கோசமும்பொலியநின்றன. (௧௫)

பனிமுகமலர்ச்சிகாட்டப்பவளவாய்கீதம்பாடத்
தனிறுதனீறுமல்கமணிக்குழைசெவியிற்சார
முனிவரைமயக்கிவீழ்த்தமோகினிமயங்கிவீழக்
கனியொளியலங்கிமின்னிக்கட்டழகெறிப்பநின்றான். (௧௬)

ஒருமேனிவீசாநின்றசேயொளியுலகமூடு
மிருண்மேயவெழுந்தகாலையிளங்கதிருதயஞ்செய்ய
வருமூரலொடுவெண்ணீறுமாமதியுதயஞ்செய்யத்
திருமேனியழகன்வேதம்பாதுகைசிவணிவேறி. (௧௭)

தமருகமொருகையார்ப்பப்பலிக்கலமொருகைதாங்கப்
பமரமுண்மலரிற்பாடும்பாட்டின்வாய்கீதம்பாட
வமருவந்தியமற்கோலையனுப்புமைக்கருங்கணல்லார்
தமரொடுவூர்முழுஞ்சேரிச்சார்ந்தனன்பலிகொள்வான்போல். (௧௮)

பயப்பயநடந்துபெம்மான்பார்ப்பனமடவார்வீதி
நயப்புறச்சேர்ந்துகையினகுதுடிமுழக்கலோடுங்
கயப்பில்யாழோசைகேட்டவசுணங்கள்கடுகவந்து
முயக்குறல்போலவங்கைப்பலியொடுமொய்த்தார்மாதர். (௧௯)

பலியிடவந்தமாதர்பரம்பரன்முகமுங்கண்ணும்
வலிகெழுபுயமுமார்பும்வயங்குசெங்கையுங்காலும
பொலிதிருவரையுங்கோசப்பொற்புமற்றனைத்துநோக்கி
மெலிவருமயக்கம்பூண்டார்வேளுநதன்வலிதெரித்தான். (௨௦)

நடுக்கலைநெகிழ்ந்ததோராநங்கையங்கொருத்திபிச்சை
யெடுக்கவந்தனையேலாடையின்றிவந்தனையென்னென்றாள்
கொடுக்கவந்தனையேனீயெக்கோலமாய்வந்தாயென்று
னுடுக்கைவிண்டதனையப்போதுணர்ந்தவளுணுக்கொண்டாள். (௨௧)

நள்ளியவளையும்வீக்குகலையுமேகலையுஞாலங்
கொள்ளியநெகிழ்நதுவீழ்ந்தகுறித்தவைசிறிதுநோக்காள்
வெள்ளியமுறுவரேற்றிப்பலிகொளமேயவைய
ஞெள்ளியகோசநோக்கியொருத்திகும்பிட்டுநின்றாள். (௨௨)

தண்ணியவடிகேள்யாறேதனப்பிச்சைதருவேனென்னி
லண்ணியகலத்திலேற்றுக்கோடுமென்றறைந்தாளோர்பெ
ணெண்ணியமடவாய்நீயிங்கிரட்டுறமொழிதலாலே
கண்ணியவதுதேறேனென்றுரைத்தனன்கருணைமூர்த்தி. (௨௩)

கடுமிடற்றொளித்துநிற்குங்கடிஞையோன்வதனநோக்கி
நடுவெனமேனிமுற்றுநலிந்திளைத்திடுமோர்மங்கை
யிடுபலிகொளவநதீரோவெனனுயிர்ப்பலிமறறினனே
கொடுவெனக்கொளவந்திரோகூறுமின்குறித்ததெனறாள. (௨௪)

ஒருமடமங்கையெம்மானுருவெளிதோற்றக்கண்டப்
பொருவிலாவுருமுன்சென்றுபொள்ளெனக்கோடியின்னே
தருபலியென்றுசெங்கைத்தலக்கலத்திட்டாண்மண்வீழ்ந
தருவருப்படையப்பொள்ளற்கலங்கொலோவமைத்ததென்றாள். (௨௫)

பொன்னுடைப்பூணுளங்கோர்பொனனிறையுருவந்தோன்ற
மன்னுடைக்கலத்திறசோறிட்டதுமண்ணில்வீழக்கண்டாங்
குன்னுடைக்கலமிக்கோட்டையுளதென்றாளிறைவனோட்டை
யென்னுடைக்கலமோபிச்சையிட்டநின்மனமோவென்றான். (௨௬)

ஒருமகள்கடிஞைவாய்ச்சோற்றொடுவளையாழியிட்டு
மருமலர்க்கைகள்கூப்பிவணங்கிப்பின்னெழுந்துசொல்வா
ளருமையாயான்மாலானேன்வளையாழியளித்தாயென்னில்
வருகுறையில்லையென்றாளிடைக்குறைமாறுதென்றான். (௨௭)

காதல்கூரொருத்திநேரேகைகுவித்திறைஞ்சிச்சொல்வா
ளோதருன்யாதுக்குள்ளக்குறிப்பறிந்துடம்பாடெய்திப்
போதராய்நீயிரக்கமனமிலாய்போலுமென்றாண்
மாதராய்நாமிரக்கமனங்கொண்டேவந்தேமென்றான். (௨௮)

புள்ளவாமலர்மென்கூந்தற்பொற்றொடியொருத்தியாங்கே
நள்ளவாதரவுதோற்றிநண்ணவுமுணர்தலில்லா
யுள்ளவாறுணர்ந்தேன்மூன்மாலறியாய்கொலுரைத்தியென்றாள்
வள்ளலுயகனுமென்றுமாலறியான்யானென்றான். (உகூ)

இனக்கிளர்மயிலஞ்சாயலேந்திழையொருமடந்தை
மனங்குழைந்தனைத்துநல்கவாளுசித்துநிற்பதோரா
தனங்கொளுவென்பாயன்னங்கண்டறியாய்கொலென்றாள்
கனங்குழாயின்னுமன்னங்கண்டறியான்யானென்றான். (௩0)

மாசற்றவடிவீரிங்குவந்துளீர்பயிக்கம்வேண்டி
யேசற்றகோசமூடலறமெனவிசைக்கும்போதே
தூசற்றவளிவ்வொன்றுசொலக்கலையிழந்தாளோர்பெண்
ணுசற்றவனிதாய்நீயுமறமல்குன்மூடலென்றான். (௩க

முதிர்மயலொருத்தியன்னமுகந்நகையேந்திழையய
னெதிருறவணையுங்காலையிடுக்கியுமடுக்கைவீழ
வதிர்கழலான்பின்னிட்டானவள்பயந்தனையோவென்றாள்
கதிரிழாயல்குற்பாம்புகண்டுநான்பயந்தேனென்றான். (௩உ

பூணுருவொழிந்தவாங்கோர்பொன்னிறையெதிரோநோக்கி
யாணுருவொன்றலின்றியானையுடம்பானேனென்று
ளேணுருவுடையானன்னளெதிர்நோக்கியான்முன்னேபெண்
மாணுருவொன்றன்மன்றவனையுடம்பானேனென்றான். (௩௩

போனகங்கொள்ளவாதிர்பொலிதருசுவர்க்கமீது
வானகம்பதிப்பீர்கொல்லோவென்றொருமடந்தைகேட்டாள்
போனகம்விடமாக்கொண்டோன்பொலிதருசுவர்க்கமீது
வானகம்பதிப்பேன்போற்றிவழிபடுவாராயென்றான். (௩௪

மருவுலாங்கோதைக்கூந்தன்மடநலாளொருத்திவந்து
பொருவினும்மூரலென்னோர்புரஞ்சுடலென்னேயென்றாள்
வெருவினம்மூரன்முன்னம்புரமூன்றும்வேவச்சுட்ட
தருமையோபுரமொன்றின்றுசுடுதிறமென்றானையன். (௩ரு

விரைக்கருங்கூந்தற்செவ்வாய்வெண்ணகையொருத்திநேர்வந்
துரைக்கரும்வனப்புவாய்ந்தவுத்தமவடிவுள்ளீர்நும்
மரைக்கலையெங்கேயென்றாளரைக்கலைமுடிமேலென்றான்
வரைக்கரும்பித்தரோவென்றாளதுவாய்மையென்றான். (௩௬

கொன்னவிடையான்முன்போய்க்கோற்றொடியொருத்திகண்டா
டன்னையுடுக்கைநீத்தாடைவிழுமிதைநீவாங்கி
யென்னையுடுத்துகென்றாளுடுத்திடல்யான்கற்றன்றே
வுன்னையுடுத்தல்செய்வேனென்றனனுயங்கினின்றாள். (௩

கயல்புரைகருங்கட்செவ்வாய்க்காரிகையொருத்தியோவா
வியல்கெழுமேனியான்முன்னியம்புவாளென்னைநோககால்
வியலுறச்சுடுவாய்மேலும்மெய்நடுக்கடைவாளுற்ற
மூயன்மதற்சுடுதியென்றாண்முன்னமேசுட்டோமென்றான். (௩

கொம்மையொண்மதியம்போலுங்குளிர்முகத்தொருத்திநேர்வந்
தம்மையானிறுகப்புல்லியுகளவெம்முலைக்கோட்டானுஞ்
செம்மைசேர்மார்புந்தோளுந்குழைதரச்செய்வேனென்று
வெம்மையாளுடையான்பாகமெய்திலையேலாதென்றான். (கக)

தானெனச்செய்யவல்லான்சார்ந்தவர்தமையெலாநங்
கோனெனப்புகல்வர்மேலோரதுகுறித்துணரின்மெய்யே
மீனெனப்பிறழுங்கண்ணார்யாவருமேவிமேவி
யூனெனப்படுதம்மெய்யினுடையிலாதொழித்தகீரால். (௪௦)

வேறு.

வண்ணங்கிளர்குலமடவார்பலருமிவ்வண்ணந்தழைதரன்மலிகற்புத்
திண்ணங்குலைதரவவணின்றேகியொர்சிறையுற்றான்மறைமுறையுற்றான்
றணணம்புயமகடமூவுந்தனியொருதயலாடலின்மயன்முதிர்வுற்றே
யெண்ணந்தபவுயர்தவமுங்கெடவுடைமுனிவோர்யாவருமிதுதேர்வார். (௪க)

நாமுந்தவநிலைகெட்டுக்குலைதரநம்மாதருமுயர்நிலையற்றுத்
தோமும்புணைதரவிதுசெய்தவனுயர்சூதப்பொழில்வளைமாயூரத்
தாமுஞ்சிறுமதியுங்கொக்கிறகுமலங்குஞ்சடைமுடியவனேயென்
றேமுந்துறமொழிமறைதேர்முனிவருடன்றாரழல்சினமுற்றாரோ. (௪உ)

கொடுவெஞ்சினமலிதரலாலாங்கொருகுண்டஞ்செய்தனரழலிட்டார்
கடுவெம்பரிதிகணிம்பத்துறுமெய்கலந்திட்டனர்மனுமுறையோதித்
தொடுவெங்குழிநிறைதரமற்றுள்ளவுமிட்டார்துகளறமுயல்காலை
யடுவெங்களிறுசினத்தொன்றுயர்தரவார்த்திட்டதுவெளிவந்தன்றே. (௪௩)

வருவெங்கடகரிதிசையிற்கரிகளும்வானக்கரியுமயங்குற்றுத்
தெருமந்துலைதரவுவராழித்தலைசிந்திக்கவிழ்தரவடிபேராப்
பொருமந்தகனுநடுங்கிப்புகல்புகுமிடமாய்தரமுகில்களினுள்ள
வுருமுங்கடிதுகவுராவெதிர்மலையுறுதாள்படவுழிதருமன்றே. (௪௪)

நீலப்பெருமலைபோலப்பொலிதருமுருவிற்றிருபிறைநிகர்கோட்ட
தேலப்புவிதடவந்துசற்றிறமெனவாடுந்துளைபடுகைய
தாலத்தினுமுலகெல்லாமுலைதரவழலுங்கொடுமையதடுமூழிக்
காலத்தெழுகனல்குளிரக்கனல்சொரிநிரியாணத்ததுகருவேழம். (௪௫)

இத்தன்மையினெழுகொடுவேழத்தினையெம்மானெதிர்செலவிட்டார்க
ளத்தன்மையினுயிரொல்லாநிறைதருமண்ணற்பரமனுமதுகாணூஉ
மைத்தன்மையின்மலையெனநேர்வருமதமாமுன்வேறொருவடிவுற்றுக்
கைத்தன்மையின்வலிசிறிதேர்தருவகைக்காட்டத்திருவுளமதுகொண்டான். ()

அவ்வேலையினிஃதென்னுருவதெனவச்சுற்றஞ்சலணங்கோவாச்
செவ்வேலுடைமழவோடுஞ்சென்றுயர்தேவன்புடையொருசிறைநின்றான்
மைவேலையின்வருகொடுவாரணமுயர்வள்ளற்பரனைவிழுங்கிற்று
லெவ்வேதமுமானிகதறப்பெருவலியிமையோர்களுமுளம்வெருவுற்றார். (௪எ)

கனிவாயிதழ்புடைபெயரக்கண்பிசைசேயுந்தாயையணைத்திட்ட
தினியாம்யாதுசெயத்தக்கதுவெனவெங்கோமாட்டியுமச்சுற்றாள்
பனியாழித்தரைவாழ்மன்பதைபடுபோட்டைப்பகர்தரவல்லார்யார்
தனியாதரவுசெயெம்மானுண்மையைநாடித்தேறுநருள்ரோயோ. (௪அ)

மதவேழத்தினுரூற்றான தனுடல்வகிராமேற்பொதியதன்கொண்டே
யிதமாமிதுவெனமெய்யிற்போர்த்திருண்மழைமூடியகதிரொனின்றான்
சுதமேதினியுலகிற்கென்றமரர்கமோமலர்மழைசனிபெய்தார்
சதமாமகனயனெடுமாலிவரிவர்தாவாவுவகைதலைக்கொண்டார். (௪௯)

ஐயன்கொடுமதவேழத்துரியேடணைந்தான்வெளியெனமகிழ்வுற்றுக்
கையங்குலிகொடுகாட்டிற்றிளமுளைகண்டாளன்னையுமயர்வோப்பி
வையம்பொலியவுவந்தாள்பற்பலவுயிருநனிமனமகிழ்பூத்த
செய்யம்புயமலர்மதியங்கண்டதுசெத்துத்தவர்முகம்வாடுற்ற. (௫௦)

வேறு.

கருமமேபொருளாக்கொண்டார்கருத்தின்மிக்கிலச்சைபூண்டு
தருமமால்விடையான்முன்னர்ச்சார்ந்துபொற்றாளின்வீழ்ந்தே
யருமருந்தன்னாய்நின்னையறியாதுகெட்டேமெங்கள்
பொருமலந்தவிர்த்தாட்கோடியெனப்புகன்றிரந்துநின்றார். (௫௧)

மெலிதருமனையார்செய்தவிண்ணப்பஞ்செவிமடுத்துக்
கலிதருமுனிவீர்நம்மைப்பொருளெனக்கருத்துட்கொண்டு
பொலிதருமாயூரத்திற்புகுந்துநும்மடவாரோடும்
வலிதருநமைப்பூசித்துமருவுதிர்முத்தியென்றான். (௫௨)

என்றருள்செய்யக்கேட்டமுனிவரரிறைஞ்சிப்பின்னுங்
குன்றவிற்குழைத்தாயிந்தக்கோதிலாத்தானத்தெம்மை
வென்றமெய்க்கோலங்காட்டிவிளங்கிடவேண்டுமென்றா
னன்றதற்கிரங்கியெங்கோனங்ஙனமாகவென்றான். (௫௩)

முனிவரர்மடவாரோடுமுழங்குமாயூரஞ்சார்ந்து
பனிமலர்ப்பிரமவாவிபடிந்துவெண்ணீறுபூசிக்
கனிதரவள்ளலாரையஞ்சனாயகியைக்கண்டு
துனிதவிர்தரப்பூசித்துத்தோலாதமுத்திபெற்றார். (௫௪)

முழுமறையுணர்ந்தார்கொண்டகோளுமொய்குழலார்கற்பும்
வழுவுகாரணத்தானுமவ்வழுவூரொன்றலைப்பாரின்னுஞ்
செழுமதக்களிற்றைகீண்டுசெற்றலாலத்தானத்தை
யுழுவலன்புடையோர்வீரட்டானமென்றுரைசெய்வாரால். (௫௫)

பண்ணியதவத்தார்போற்றும்பறியல்வீரட்டானம்போற
புண்ணியவழுவூர்வீரட்டானமும்பொலிந்துமன்னு
நண்ணியவங்குச்சார்ந்துநலமுறவழிபாடாற்றுந
திண்ணியதவத்தோரெய்தும்பெருமையார்தெரிக்கற்பாலார். (௫௬)

பறியல்வாழ்மகசங்காரபத்திரப்பெருமான்போல
முறிகுலாஞ்சோலைசூழ்ந்தமுழுப்புகழ்வழுவூர்த்தேத்து
மறிவில்வெங்களிறுவென்றவலியுடைப்பிரானுமாதர்
செறிதருகற்புமாய்த்ததேவனும்பொலிந்துவாழ்வார். (௫௭)

மதமலையுரித்துப்போர்த்தவலியனைமாதர்கற்புச்
சுதமுறப்பயிக்கம்புக்கசுந்தரவடிவினானை
யிதமுறக்கண்டுபோற்றுமியல்பினரடையும்பேற்றை
யுதவியினியங்குமென்னாலொருங்குரையாடப்போமோ. (௫௮)

முனிவரர்வசித்ததானமொய்யழல்வளர்த்ததானங்
கனிதரமற்றும்பல்லகருமங்கள்செய்ததான
மினியவாயவ்வப்பேராலின்னமும்வழங்குமந்தத்
தனியமர்தானமெல்லாந்தம்பிரான்றளியுமேவும். (௫௯)

இனியமாயூரத்தானத்தெல்லைசூழ்யோசனைக்குட்
பனியவாஞ்செம்பொன்பள்ளிநனிபள்ளிபறியன்மூதூர்
முனிவர்சூழ்வழுவூரின்னமொய்புகழ்ப்பெருமையிற்றே
னனிசெயுமாயூரத்தினகுபுகழ்பேசற்பாற்றே. (௬௦)

யானையுரித்தபடலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம். ௮௧௪.

# தலவிசேடப்படலம்.

கும்பிபாகமிரவுரவங்கொடியதவனம்வாலுகமே
வெம்புமசிபத்திரவனமேவீமோர்க்கடமேமகாசூலங்
கம்பித்திடுசான்மலிதத்தசூலங்காலசூத்திரமே
தம்பம்புரியுநிருச்சுவாசம்வைதரணிதத்தசிலை. (௧)

மலபூரணமூடிகாகூடமாருக்கயசோணிதகூப
மிலகாதெழுமூத்திரபானமிருகசோணிதகூபமெழ
லுலவாவன்னிசுவாலைசிலாவருடமுறுவாதாதிக்க
மலகீர்சுரதாரணம்வன்னிவருடமங்காரசயனமே. (௨)

கீலவருடம்பதனஞ்சுக்கிலபூரணமைப்பூரணமே
ஞாலம்வெருவுந்தயிலவியநதரமேகுதிகானரம்பெடுத்தல்
சூலவாரோகணம்பாசபநதந்தூமபானமே
சாலநெடியதருவேற்றித்தள்ளறிரிகையிடைச்சுழற்றல். (௩)

நிலையாநீரிற்றள்ளிடுதலூசிநுனையினிறுத்திடுத
லுலையாச்சிதலையீயுறவியுருத்தேளரவுபுழுவருத்த
றொலையாதுறுப்பினூசிவிடமெருக்கதரக்காதிகள்வருத்தல்
குலையாநடுங்கக்காய்தயிலங்குடிக்கச்செய்தன்முதலாக. (௪)

எண்ணிலாதகொடுநரகமின்னும்பலவாலியம்புநரார்
மண்ணிலமைந்துபாதகஞ்செய்மறவரோயிந்நரகடைவார்
கண்ணிலோரொண்பத்தாறுயிரம்யோசனைகள்கழியளவும்
புண்ணில்வாளிட்டெனவியவைத்தண்டம்பொருந்திப்போயதற்பின், (௫)

மலமூத்திரமாநரகத்தில்வருடம்பதினாயிரமுறுப்பி
லுலவாவூசிசெருகப்பட்டுடற்றும்புகையையுண்டழுந்தி
நலவாசனையில்சண்டாளகோடிசன்மநயந்துதுயர்
கலவாவுழிதந்திடுமநதோகள்ஞண்டுழன்றுகண்ணிலியே. (௬)

கொடியவிடமூடிகநரகங்கொள்ளப்பதினாயிரவருட
நெடியதுயரத்தொடுமழுந்திநீத்தமுடித்தபுடவியிடைக்
கடியசிலைவேட்டுவனாகப்பிறந்துபிறந்துகழிதருவான்
படியவாவும்பொற்கரவுபண்ணுந்தீயபாதகனே. (௭)

குறியிலூசிபலசெருகக்கொடியகாலசூத்திரத்து
முறியநெடுநாளழுந்திப்பின்மூர்க்கவரக்கன்புலையனாய்
மறியுமரிட்டன்கோட்டானாய்க்கரமாய்நாயாய்வந்துழல்வா
னறிவிலவனாய்க்குருமனைவியையவாவிப்புணர்ந்தகொடியோனே. (௮)

பெற்றதாயைமூத்தாளைப்பிறங்குவுடன்வந்தவர்க்குரிமை
யுற்றதாரமடவாரையுஞற்றலரியவிட்டிசெயக்
கற்றமறையோர்பன்னியரைக்கற்புவழாதமங்கையரைச்
சொற்றவுபாத்தியாயரிருதோடோய்நலத்துமங்கையரை. (௯)

தந்தைகூடப்பிறந்தாளைத்தகுமாதுலர்தமனைவியரை
நிந்தையில்லாமாமியரைநிலவுஞ்சிறியதாயாரை
யந்தையகன்றகுருவீன்றவந்நலாரைப்புணர்கொடியோர
முந்தையாசானிறபுணர்ந்தமூர்க்கர்க்குரைத்தவெலாமுறுவார். (௧௦)

பந்திபேதஞ்செய்தல்குடும்பத்தில்வேறுவிதஞ்செய்து
முந்தியிருந்துபுசித்தல்சந்நியாசிகளைமொய்யிழிபுரைத்த
லந்திநிறத்தானடியாரையந்தணரைநிந்தித்துரைத்த
னந்திநலமிக்குடையானைப்பொல்லானென்றேநவின்றிடுதல். (௧௧)

மறையைவிற்றலிவைசெய்தோர்மகற்றயோர்க்கொலைசெய்தவராவர்
முறையிலிவர்கள்கடுங்கும்பிபாகநரகமுயங்கியே
நிறையுந்துயரமனுபவித்துப்பின்புநிகழூர்ப்பன்றியாயக்
குறைவினூறுயுகம்பிறந்துபவ்வீக்குழிவீழ்ந்துழிதருவார். (௧௨)

தத்தசூலம்யுகமொன்றுதழுவுங்கணிகையனம்புசித்தோன்
சித்தமருண்டுமீனாயுஞ்செனித்துவலையன்கொலப்படுவா
னொத்தவினமல்லார்தமுணவுண்டோன்மதுபானியைநிகர்வான
முத்தநிகர்பற்பரமாதாமுயக்கங்குருவின்முயக்கமே. (௧௩)

பூத்தகாலைமனையாளைப்புணர்ந்தானிரத்தகூபத்தில்
யாத்தநூறுயுகமழுந்துமிரியும்புலைச்சிமுலைதோய்ந்தான்
மூத்தவிருத்தயோனியிடைமுயங்கும்படிசுக்கிலங்கவிழ்த்தான்
சித்தகயினிமுலைதிளைத்தான்வலிந்துபரமாதரைச்சேர்ந்தான. (௧௪)

இன்னகொடியபாதகத்தோர்நாயூனுகளூறெடுத்தருந்திப்
பின்னமருவிக்காலொடுகைபெயர்க்கக்கூடாவிதங்கிடப்பார்
சொன்னவிரதத்துபவாசத்தோகையரைச்சேர்ந்தவனுப்புத்
துன்னநிறைகூபத்திலுகந்துளைந்துசெந்நாயாய்ப்பிறப்பான். (௧௫)

மறையாளருக்கொன்றீவேனென்றுரைத்துப்பின்னர்மறுத்துரைத்தோன்
குறையாவசிபத்திரவனத்தேகிடந்துகுரைநாயாய்ப்பிறப்பா
னிறையாம்பரமனடியார்வேதியராக்களுக்கூறிழைத்திட்டோன்
மிறையார்சூலவளற்றழுந்திவேடனாய்ப்பின்புழிதருவான். (௧௬)

நானம்பானந்தவமோமஞ்செபமற்றிவைகணவியூறு
மீனவிழைத்தோனுற்பதனமருவியளவாத்துன்புற்றுப்
போனபின்னர்மூகையாய்வெதிராய்ப்புகலில்கொத்தையா
யீனமருவுமினும்பலவாய்த்தோன்றியர்தோவிழிதருவான். (௧௭)

நீதிநூல்சோதிட நூலேனைகழுங்கழுவர்யுரைக்குநூல்
பேதியாததரணி நூலிவற்றைப்பேதித்திடுபாவி
யோதியுணராப்பிரமகாதகனென்றுரைப்பாருறுநரக
மோதியலைப்பத்துன்புற்றுப்பின்புகழுதையாய்முளைப்பான் (௧௯)

பொருள்பெற்றனமென்றிறுமாக்கும்புன்மையாளன்பொய்யுரைப்போ
னருளிற்பணித்தமந்தணத்தையாருமறியவெளிவிட்டோன்
மருளிற்றீர்ந்ததருமத்தைமதித்திடாதுசிந்தித்தோ
னிருளிற்பொலியும்பாடாண்டர்வேடமினிதென்றுறப்பூண்டோன். (௧௧)

இனையரிழிநாயூனருந்தியெரிவெந்நிரையத்துகமழுந்திப்
புனையலாகாவிழிபறவையாகிப்பின்னர்ப்போதருவார்
நினையமுடியாப்பயம்பொருத்துநீசர்கோளர்நிறைதருதீ
வினையர்கொடுமூத்திரபானமெய்திமிருகமாய்ப்பிறப்பார். (௨௦)

பதிதரன்னஞ்சூதகங்கோட்பட்டோரன்னம்புசித்திடுவார்
முதிருஞ்சுடுபாறைமிற்கிடந்துமுற்றிமூகையாய்ப்பிறப்பார்
விதியிற்புசிக்குங்காலத்துவிழைந்துபூத்தவளைநாயைப்
பொதியப்பார்த்தோர்பேசிடுவோர்பொல்லாநரகத்தழுந்திடுவார். (௨௧)

பிரமசரியமனுட்டிப்போர்பிறங்கிருள்ளிமல்லிமுதற்
பரவுபிறவுங்கவர்ந்திடுதல்பழுதாம்புசிக்குங்காலத்தில்
விரவப்பேசல்கோபித்தனசைத்தலிவையும்விரோதமாங்
கரவினுலோகஞ்சநதாதிகனிகாயமுதற்றெவ்வலும்பழுதே. (௨௨)

தந்தைதாய்க்குத்திதிகொடான்றக்ககாலங்கிரியைசெயான்
றந்தைதாய்வார்த்தையைக்கடப்பான்றன்னில்பிழைதீர்வுந்துறந்தோன்
றந்தைதாயர்பசித்திருக்கத்தானேயுண்பானன்றிகொன்றான்
றந்தைதாயர்முதுமையிடைததாங்காணிளையர்பாதகரே. (௨௩)

புத்தர்மனையுட்போனவனுமவர்சாத்திரமோர்புந்தியனு
மொத்தமறைநிந்தித்தவனுமுவக்குங்கொடையைத்தடுப்பானுஞ்
சுத்தமார்க்கம்விடுத்தானுமதிகிபூசைதொலைத்தானுஞ்
சத்தமகமைநதாற்றானுந்தாவாகொடும்பாதகரிவார். (௨௪)

தேவாலயத்துமகச்சாலையிடத்துஞ்செந்தீயெதிரிடத்து
மோவாப்பசுக்கொட்டிலினிடத்துமுயர்பிப்பிலத்தினடியிடத்துந்
தாவாதுழுதபூமியினும்வன்மீகத்துநந்தனத்து
மாவார்தீர்த்தக்கரையினுமீரியக்கம்விடுத்தோர்களுமனையர். (௨௫)

பருவர்திங்கட்பிறப்புவிதிபாதம்பகருமட்டமியே
மருவும்வைதிருதிசிறப்புவாய்ந்துவிளங்குஞ்சதுர்த்தசியே
பொருவில்விரதத்தினமிவற்றிற்பொருந்தமகளிர்முலைதோய்வார்
பெருகவிவைகண்டொருவரசர்பேசுமிவருமனையரே. (௨௬)

தம்மையெடுத்துப்புகழ்ந்திடுவோர்தம்போனிளையாதன்னியனரி
வெம்மையுறநிந்தித்திடுவோர்வேதாதிகள்சொல்லியகருமஞ்
செம்மையுறச்செய்யாதொழிப்போரொடுத்தவிரதஞ்செயாதுவிட்டோர்
மும்மைப்புவனங்களுமிழிக்கமுடிந்தவிவருமவர்கண்டீர். (௨௭)

உரைத்தவிவர்மற்றிரவுரவமாதியொழியாநரகங்கள்
புரைத்தமனத்தராய்த்திளைத்துப்புவியின்மீட்டுப்பிறந்திடுங்கால்
வரைத்தகுருடுசெவிடுமுதன்மற்றுமுறுப்புக்குறையாகிக்
குரைத்தபுலைவாய்ஞாளியினுமிழிந்துதுயரக்கோட்படுவார். (௨௮)

கொடியபாவம்புரிந்தோலாங்கொடியநரகெலாந்துளைந்து
கடியவிலங்குபறவைகளாய்ப்பிறந்துபிறந்துகழிந்ததற்பின்
முடியவுறுப்புக்குறையோராய்ப்பிறந்துபிறந்துமுடிந்திடுவா
நெடியவுறுப்புக்குறைநீத்துநிலத்துமருவப்பிறந்தலும். (௨௯)

பிறந்தபொழுதேகழிவாரும்பிறந்துசிலநாளிருந்துவனப்
புறந்தபொழுதேகழிவாருமொத்தவாயுளடைந்தாலு
நிறந்தவறுமையடைவாருமாகிநிலத்துத்துயருறுவார்
சிறந்தபிறப்புற்றென்பெற்றாரறிவிலாவிச்சித்தையரோ. (௩0)

வேறு.

வெருகுவதைத்தவன்பொற்கண்ணினன்கிளைகவர்ந்தவனீல்விழியன்மாடு
கருகுறக்கொன்றவன்றலைநோய்காதுவலிவயிற்றுவலிகலந்துவாழ்வன்
வருகுலமாமறையோர்க்குக்கொடுப்பேனென்றுரைத்தீயான்வயிற்றுநோயன்
பெருகுபிதாவனைப்புணர்ச்சிசகியாதான்வெதிராகிப்பெருந்துன்பாழ்வான். (௩௧)

கலையிழந்தமடவாரைப்பார்த்தவன்கண்ணோயாளன்மூலநோய
னுலைவில்பரமாதரிணைவிழைச்சுற்றோன்சுபகருமத்துறக்கோபித்தோ
னிலைகுலையுந்தாபசுரத்தினன்புரிந்தவுபகாரநினைதல்செய்யா
னலைசெய்கபரோகமொடுசுவாசகாசமும்பிறவுமடைந்துசோர்வான். (௩௨)

புண்ணியநற்றலத்தனையகாலத்துத்தானங்கொள்புன்மையோனு
மண்ணியவபாத்திரத்தீந்தவனுமிரத்தமும்புழுவுமளையுமெய்யன்
றண்ணியமாநதிக்கரையின்வழியினீழலினிழிந்தசலம்விட்டோன்பா
ரொண்ணியசோலையறொருவனுணவுதடுத்தவனுமதேயெய்திச்சோர்வான். (௩௩)

மறையவர்தம்பொன்கவர்ந்தோன்பாண்டுநோயினனுறுமகந்தொடங்கி
நிறையமுடியானநோயொடுதலைநோயும்பொருந்திநிலைமைதீர்வன்
முறையில்புலைச்சியைப்புணர்ந்தகயவனுமந்நோயடைவன்முடிக்கும்யாக
நிறைதராவிதமூறுபுரிகொடியேன்பெரும்பீசநிலவச்சோர்வான். (௩௪)

உத்தமசாதியின்மடவார்ப்புணர்ந்தவன்றன்றலைக்கொடும்புண்ணுடையன்வேத
வித்தகர்தம்மடவாரைப்புணர்ந்தவனுசியினழிபுண்மேவிச்சோர்வன
சுத்தமிகுநற்கருமம்புரிகாற்கோழிகள்கரங்கடோன்றக்கண்டோன்
சித்தமயற்புகவிடுத்தோனிருவருமேற்சொல்லியதுசிவணுவாரோ. (௩௫)

தன்னுடைச்சாதியிற்பரமாதரைப்புணர்ந்தோன்மார்பிடைப்புண்டங்கச்சோர்வன்
மன்னுடைத்தன்றந்தையுடன்பிறந்தாட்சேர்ந்தவனவலப்பான்மருப்புண்ணுளன்
மின்னுடைப்பல்பூக்கனிகாயாதிகளையபகரித்தோன்விரற்புண்ணுளன்
றென்னுடையபிறர்புண்ணிலுபத்திரஞ்செய்தோனரப்புச்சிலந்தியாளன். (௩௬)

குளங்கவர்ந்தோன்கண்டமாலையனபுலைவீதியிற்புசித்தகொடியன்பித்த
முளங்கவலப்பெறுந்தலைவற்கியற்றியபாதகன்வாதமுறுநோயாளன்
விளங்குகுருப்பகைத்தவனுமதுமேவும்விளங்குபக்கபாதமேயோன்
களங்குலவுமந்நோயனீயாதுபுசித்தவன்விக்கலைச்சார்வானே. (௩௭)

நத்தியகன்மம்புரியான்கபனோயன்மறையோர்கணிலவிமேவுஞ்
சுத்தியநன்மனையமைக்கவொட்டாதான்காக்கைவலிதொலையாதெய்துங்
கத்தியநாய்பூனைதொடுமனம்புசித்தோன்வாய்நாற்றங்கலந்துசோரு
மெத்தியபொய்ச்சான்றுரைத்தோனதனுடுபித்தமுங்கலப்பவெருவிச்சோர்வான்.

குறிமதுவுண்டவன்றேய்ந்தபல்லினன்குக்குடம்வதைத்தோன்கோணன்மூக்க
னெறிதபமற்றோர்புணர்ச்சிநோக்கினவனேத்திரநோய்நிரம்பிச்சோர்வ
னறிதரவாலயங்குளத்திலிருக்குமரம்வெட்டினவனந்தனுவ
னெறிதருபிரோதசிராத்தம்புசித்தோன்கிருமிகள்வாயிலையயத்தேம்பும். (௩௯)

கன்னிகையைப்புணர்ந்தவன்பற்பலநோயனதிசாரன்காடுசுட்டோன்
மின்னியபால்கவர்ந்தவனீரழிவுடையான்கருச்சிதைத்தவெய்யபாவி
துன்னியவெந்தொழுநோயன்குதிரைவதைத்தவன்கோணல்சூழ்ந்தகாதன்
பன்னியபல்லோர்நடக்கும்வழியின்முள்ளிட்டோனொழியாப்பாதநோயன்.(௪0)

வழியிடைத்தன்மனையாளைப்புணர்ந்தவன்றன்குறிப்புற்றுமருவிச்சோர்வன்
பொழிசுவைப்பாற்பசுக்கொன்றோன்குட்டநோயினனயலார்புதல்வற்கொன்றோ
னிழிபுதகமகவிலாதவனுவனுடுத்தகலையெனுந்தெவ்வும்
பழியுடையோனிளம்பருவத்தேதலையெலாநரைக்கப்பட்டுச்சோர்வன். (௪௧)

அரவுவதைத்தவன்விடபாண்டடைகுவன்றன்மகட்புணர்ந்தோனழியாக்குட்டி
பரவுமறையாகமபுத்தகந்தாண்டினோன்மூடநோய்ப்பட்டுச்சோர்வன்
விரவுசுவைவிளக்கம்வௌவினோன்கோட்டான்மணந்தடுத்தமேன்மையில்லா
னுரவுதடுபங்கமுறும்புத்தகங்கள்வௌவினவனூமையாவன். (௪௨)

இத்தனைமாபாதகமுமிரித்திடுதற்காங்கழுவாயியம்புங்காலை
முத்தனையானனையபரமசிவன்பூசையன்றிமொழிவதில்லை
யெத்தனைநாண்முயன்றாலுமதுபோலப்பயன்படுவதிலையாலந்தச்
சுத்தனையாதரித்தன்பிற்போற்றுதற்கும்விசேடதலந்துதைதல்வேண்டும். (௪௩)

காசிகுருக்கேத்திரஞ்சீபருப்பதமனேகதங்காவதமெஞ்ஞான்றும்
வாசிபடிகேதாரஞ்சோமநாதம்புகழேவளர்கோகன்னம்
பேசிமுடியாவொளியிநதிரநீலப்பருப்பதம்விணபிறங்குவெய்யோன்
கூசியகனமணிமாடவிருபாக்கங்கேதீசங்கோணமேவாங்கல் (௪௪)

ஓங்குதிருக்காளத்திதிருக்காஞ்சிகழுக்குன்றமொற்றியூர்சீர்
தேங்குதடமலிபாசூர்திருவாலங்காடுபுகழ்திருவேற்காடு
நீங்குதலில்வெண்பாக்கந்திருமுல்லைவாயிலெழினிலவுகச்சூர்
பாங்குபுனையிடைச்சுரமச்சிறுபாக்கமரசிலிவண்பனங்காட்டூர். (௪௫)

கோவலூர்வீரட்டந்திருவண்ணாமலையதிகைக்குலவீரட்ட
நாவலூர்திருத்துறையூரிடையாறுமுண்டீசநலக்கண்டீசங்
காவலூர்மதிற்றிருப்பாதிரிப்புலியூர்வெண்ணெய்நல்லூர்கவினார்சோலை
மேவலூர்விருத்தகிரிதூங்கானைமாடமொளிமிளிர்நெல்வெண்ணெய. (௪௬)

அவிநாசிதிருப்பாண்டிக்கொடுமுடியானிலைக்கோயிலுமையகாளும்
புவிசேருங்கருவூர்வண்டிருவஞ்சைக்களம்பரமன்பொலியும்பேரூர்
கவிகூரம்பொழிலுடுத்ததிருமுருகன்பூண்டிமணங்கமழ்நணாவு
தவியாகவடைந்தார்க்குவானவர்கள்சூழ்தருவெஞ்சமாக்கூடல்லே. (௪௭)

தில்லையேந்திரப்பள்ளிசாய்க்காடுவெண்காடுதிருச்சிங்காடு
முல்லையுயர்கழிப்பாலைகுருகாவூர்சீகாழிமுதிர்கோலக்கா
வெல்லையிலாவளப்புன்கூரிலகோமாம்புலியூர்புள்ளிருக்குவேளூர்
தொல்லைவினைமுழுதொழிக்குங்குறுக்கைவிள்த்தொட்டிநலந்தோயுமாற்றூர். ௪௮

மன்னியவடனொளிபுற்றூராஞ்சைக்காபராய்த்துறைவாண்மருவுமீங்கோய்
துன்னியவாட்போக்கிசிராமலைபஞ்சநதஞ்சோற்றுத்துறைகோமுத்தி
மின்னியநள்ளாறுமறைக்காடுவாஞ்சியமாரூர்வீழிமேலோ
ருன்னியவாலங்குடிகோட்டேர்நெல்லிக்காப்பனந்தாளூறுமாப்பாடி. (௪௯)

இடைமருதுகுடந்தைதிருவாலவாய்சேதுவிராமீசங்கானை
யடைகொடுங்குன்றுப்பனூர்திருப்புத்தூர்திருச்சுழியலமராடானை
கடையில்பெருந்துறைநெல்லைகுற்றாலங்காயாரோகணங்கோட்டாறு
மிடைதருபல்வளம்பொலியுமித்தலங்களெவற்றுள்ளும்விசேடமாமால். (௫0)

இன்னதலங்களுக்கதிகங்கவுரிமாயூரமறையெடுத்துக்கூறு
மன்னதலத்தெல்லையளவோசனையொன்றுஞ்சுற்றுமதற்குமேலாச்
சொன்னதலமெத்தகையபுவனத்துமில்லையிது துணிபேயினனு
மென்னதலங்களுமதற்குத்தாழ்ந்ததலமல்லாமலிணையாகாவே. (௫௧)

இத்தகையகவுரிமாயூரம்விளங்குதறெரியாரிலங்குதீப
மொத்தகையிலிருப்பவுமோர்பாழ்ங்குழியில்வீழ்ந்தழுமுணாவிலார்போற்
பித்தகையும்பிறப்புற்றுமெஞ்ஞான்றுநதிராதபிணிக்கோட்பட்டு
மத்தகையவரினுழன்றுமிறந்துநரகத்தழுந்திவருநதுவாரால். (௫௨)

மன்னுபுகழ்ப்பெருங்கவுரிமாயூரத்தலத்தெல்லைவணங்கிச்செய்யு
முன்னுபிரதக்கணமொன்றாற்சுவாக்கமுறுமிரண்டாலுமபர்வாழ்த்த
மன்னுமகபதியுலகமுறுமூன்றான்மலர்மேலான்வைப்புமேவு
மின்னுமொருநான்கானுறைசுதரிசனப்படைக்கடவுளிருக்கைமேவும். (௫௩)

நல்லதவம்பொலிவையைந்தாலெவ்விடத்துஞ்சஞ்சரிக்குநலமுண்டாகும்
வல்லபுகழிருமூன்றாலவடதிசைச்சோமகனுறும்வாழ்க்கைமேவும்
வெல்லவுயர்திறலேழால்வெற்றிவேற்படையாளிவியன்வைப்பெய்து
மல்லறவிரிருநானாலங்குசபிக்கத்தனுலகமையமேவும. (௫௪)

ஒன்பதனுற்பராசக்தியுலகமுறுங்கயிலாயமுறுமோர்பத்தா
லின்பமிகுபனன்றொன்றாற்சிவலோகசாலோகமெய்தாநிறகு
மன்புமிகுபனனிரண்டாற்சாமீபம்பதின்மூன்றாலரன்சாரூபம்
வன்புதவிர்பதினான்காலடிக்கலப்பாம்பதினைந்தால்வரன்மற்றினனே. (௫௫)

பிரதமையினமாயூரத்தலஞ்சூழிற்பாவமெலாம்பெயர்ந்துநீங்கும்
வரமுதலுந்துதியையில்வான்சுவர்க்கமுறுநதிரிதியையில்வானவேந்தன
பரவுபதமுறுஞ்சதுர்த்தியிற்பிரமபதமாம்பஞ்சமியினெல்லா
வுரவுலகங்களுமாளுமரசாகுஞ்சட்டியிறைமொழியாவின்பம். (௫௬)

சத்தமியினிட்டமெலாமுறுமட்டமியிற்கணத்தின்றலைமையெய்து
மொத்தநவமியிற்பிரமபதமெய்துந்தசமியின்மாலுறையுண்மேவும்
வித்தகவேகாதசியிற்கயிலையுறுந்துவாதசிமுன்விளம்புநான்கிற்
சித்தமுறுசிவலோகசாலோகமுதனான்குஞ்செறியுமன்றே. (௫௭)

வேறுமொருதலத்துளுற்றுமேருங்கிரறங்கொடுக்குமேன்மைதிமை.
யீறுபடுமாயூரத்தணுவளவேசெய்வினஃதெணிதினியும்
வேறுமொருதலத்திலக்கமறையவருக்கனமூட்டவிளைவிலாப
யீறுபடாமாயூரத்தொருபுலையற்கொருபிடிசோறிட்டாலுண்டாம். (ருஅ)

மற்றொருமாதலத்திடையாயிரவருடம்வசித்தலிற்றெல்வருமிலாபம்
பற்றொருவாமாயூரத்தலத்திலொருகணம்வசிக்கிறபண்பினுகு
மற்றொருமாதலத்திடைக்கால்வருந்தநடந்தடைபேறுவானநாடர்
பற்றொருவாமாயூரத்திருந்தவிடத்திருந்ததனுறைபண்பினுமே. (ருக)

ஏனையமாதலங்களிற்சென்றரியவுபவாசஞ்செய்தெய்தும்பேறு
மானயமார்தருகவுரிமாயூரப்பெருந்தலத்தின்மகிழ்ச்சிபொங்க
பானயமார்நெய்முதலாப்பல்சுவையமடையுடம்புபருக்கவுண்டு
தூநயமார்மடவார்தங்குழாத்தொடிருந்தாலுமெய்தறுணிபாமன்றே. (சு0)

வேறு.

கவுரிமாயூரத்தெல்லைகாதலிற்சூழுவோரை
யுவரிசூழ்புவியோர்சூழ்வாரொன்றுரைத்திடுதலென்னே
தவலிலாமலரின்மேயசதுமுகனுதிவானோ
ரவரையேபரமனுகவவாய்த்தினஞ்சூழ்வாரொன்னில். (சுக)

கண்ணுதலினிதுமேயகவுரிமாயூரத்தெல்லை
நண்ணுதல்செய்திபுல்லுநருகொடிதருவுமற்று
மெண்ணுதலியறறவீற்றிற்சிவலோகமெய்துமென்னி
லொண்ணுதலதனையன்றிப்பிறரொருண்மையுன்னலாமோ. (சுஉ)

உறுவழிச்செலவினேனுமுற்றவாணிகத்தினேனுந்
தெறுவிழிப்பரத்தைமாரைச்சேருமோர்விழைவினேனு
மறுவின்மற்றொருவனட்புமதித்தேனுமெவ்வாறறேனு
குறுகுதலுருமாயூரஞ்சார்வதுகுணமாம்யார்க்கும். (சுங)

தவலருங்காசியாதித்தலங்களில்வசிக்குநல்லோா
கவலருந்தாங்களீனறகான்முளையாதியோர்க்கு
நுவலருமாயூரப்பேர்நுவன்றுபல்காலழைப்பா
ரொவலருமிபபேரொன்றேயேற்றமந்திரமாமென்பார். (சுச)

பலபலவுரைப்பதென்னைபகர்பெருமாயூரத்தி
னலகறுகுளங்களெல்லாமறபுதத்தீர்த்தமாகும்
மலமகல்சிலைகளெல்லாஞ்சிவலிங்கவடிவமாகும்
புலமுறவசித்தோரெல்லாங்கயிலையிற்பொருநதுவோரே. (சுரு)

புண்ணியமாயூரத்திற்பொலிதரவருவோரெல்லா
நண்ணியவிடங்கொடுத்துநயந்தவர்க்குணவுமூட்டி
யண்ணியபிணிமுன்னுயவறமருந்தாதிநல்குந
திண்ணியரடையும்பேற்றையானேயோதெரிநதுசொல்வேன். (சுசு)

மறைமுதலடியராயமறையவராதியோர்க்குக்
குறைவிலாவிருக்கைநல்கியன்னமூங்கொடுப்பாரென்னின்
மிறையிலாவவர்தம்பேற்றைவெண்ணிலாவணிந்தவேணி
யிறைவனேயுரைப்பானன்றியேவராதிநனுரைக்கவல்லார். (சுஎ)

வளம்லிசிறப்புவாய்ந்தமாயூரதலத்தைமேவி
யுளநெகிழ்ந்தரவசித்தனுறவலஞ்சூழ்தலின்னும்
பளகறுதானமாதிபண்ணுதலிவைவல்லாற்குத்
தளர்வுபட்டொடியுமெப்பாதகங்களுஞ்சலித்துமாதோ. (௬௮)

பாதகம்புரிந்தோர்யாரும்படுபெருந்துன்பந்தீர்ப்பான
மேதகவுறுமாயூரமேவிமுன்சொன்னவாறே
மாதகவியறறிவாழ்வார்மற்றிதுதனக்குமேலாப்
போதருங்கழுவாயில்லைபோற்றுமினுண்மையீதே. (௬௯)

பழிபடுநரகம்பற்றுறக்கூறறின்வெஞ்சினமும்பாரா
ரிழிபடுபிறவியெய்தாருறுப்பிலாதிழிதலெய்தா
ரொழிவரும்வறுமையெய்தாருவக்குமாயூரஞ்சார்ந்து
வழிபடுனமாதிவயக்குதலாறறுவோரே. (௭0)

பெண்மையோர்பாதியாகிப்பிறங்குமாதேவனாணை
யுண்மையேயுரைத்தேனிம்மாயூரததிறகொப்பொன்றில்லை
வண்மையினதனைச்சார்ந்துவலஞ்செயலாதிபோலோ
ரின்மைசெயகழுவாயில்லைதோதரினுணாவுமிக்கீர்.  (௭௧)

தலவிசேடபடலம் முறறிறறு.

ஆக திருவிருததம அஅ௫.

# கவுண்டின்னியப்படலம்.

போற்றவருங்கங்கையெனுமபுண்ணியமாநதிக்கரையிற
சாறறவருமந்தணாகடவாச்சேரியிடைவாழ்வான
றேற்றவருமறையொழுக்கநதிறம்பாதகிருமனத்தா
னேறறவருநலததகவுண்டினனியனெனபானொருவன். (௧)

அந்தமுனியோமவிறகததனையுமொடிபபதற்குக்
கநதமிகுமலர்துவன்றிக்காயகனிகள்பலமல்கி
முநதவெழுகொடுமிருகமொயசிறைப்புளளிவைமொய்த்துச்
சந்தமுறமருவுமொருதவாவனத்தைத்தலைப்பட்டான. (௨)

அரசமுதறபல்விறகுமாங்காங்குக்கவர்தருகாற்
புரசுமுதறபலதருவும்பொருந்திமிடையவ்வனத்துள்
விரசுமொருபாழ்ங்கிணறுமேவியதாயிடைநின்றும்
வரசுகுணனவன்கேட்பமருதுகூவொலியெழுந்த. (௩)

செவிசுடுகூகூவொலியின்றிறமின்னதெனத்தெரியா
னவியுமரர்க்குதவுமுனியஃதுணர்வானருகெய்தச்
சவிமறையோயிதுகேட்டிதவாப்பெருநின்குலப்பிதிர்யாங்
குவிபெரும்பாதகமியற்றிக்கொடுநரகுசோளப்பட்டேம். (௪)

ஏலாததானங்களேற்றனமிம்மித்துணையு
மாலாதபெரியோர்க்குவாஞ்சித்துக்கொடுத்தறியேங்
காலாதமறையொழுக்கங்கைவிட்டேஞ்சிவகாமன்
கோலாதநாவுடையேங்கொடுநரகுகோளப்பட்டேம். (௫)

எங்கள்குலத்தொருவனியருமருந்தினிருக்கின்றாய்
கங்களொருநான்குடையான்முதற்றேவர்கைகுவிக்குந்
திங்கண்முடிப்பெருமான்வாழ்திருத்தலமொன்றனையதிதி
யங்கள்பெரும்புண்ணியத்தாலடியறுத்துக்கதியுய்ப்பாய். (எ)

திரைபொருகங்கையின்முழுகுதிகழ்கயையிற்சிராத்தஞ்செய்
தரைபுகழப்படுமன்னதானம்பூதானமுல
குரைகிருகதானங்கோதானமுயர்பொற்றானம்
வரைவறச்செயாங்கனெல்லாமாண்கதியிறபுகல்வேண்டில். (அ)

குணமுருவங்குலம்வாய்ந்தகுழகனொருவனுக்கின்ற
மணமலியுங்குழனமகளைவளவியதானங்கொடுத்தா
லணவியவன்பிரமபதமடைவன்மகளில்லாதான்
றணவரியபொருளகொடுப்பினப்பதமேசார்தருவான். (கூ)

அகவையிருநான்குடையாள்கன்னிகையஃதொன்பதுளா
டகவமையும்ரோகணியோர்பத்துடையாடான்கவுரி
நகவதன்மேலாண்மலினையவளையுடையவாத
மகளையளித்தவனேற்றேற்றெனுடுரகினவசித்திடுவான். (க)

ஆதலாற்றகப்படியறிந்துதானங்கொடுத்தி
யீதலாவலைகையவெச்சமுநன்காற்றிடுதி
காதலாற்சிவநிசியிற்கருதுவிரதமும்புரிதி
யோதலாறபொலிபெருமானுமங்களுரைத்திடுதி. (கo)

இன்னுமறையியம்புவனவெல்லாநீயாற்றுவையேற
முன்னுநரகத்தழுநதெருலைந்தியாங்கதியுறுவோ
மன்னுமிதுசெய்யாயேன்மறறெமக்கோர்கதியில்லை
பொன்னுநிகராவருமைப்புதல்வவெனப்பிதிராசொற்றார் (கக)

சொற்றமொழியனைத்துமுளத்துயர்மூளச்செவியேற்றுக்
கொற்றமுறுபுகழ்வாய்ந்தகுண்டினகோத்திரத்துதித்தா
னுற்றமுறுமிவர்துன்பமகற்றுவேனெனத்துணிந்து
பொறறமணையகம்புகுந்துபுநியுறவிதுசூழ்வான். (கஉ)

எத்தலநம்மெண்ணமெலாங்கைகூடவெளிதருளு
மெத்தலநம்மெண்ணத்துமேலாகவினிதருளு
மெத்தலமெண்ணியதுவிரைநதெய்திடப்பேரருள்சுரக்கு
மெத்தலநாமெய்துதலென்றெண்ணிமனமுழிதருவான். (கங)

காசிமுதலகவிடத்துக்கணக்கில்லாத்தலமுள்ள
வாசியுளதிதுவென்றுதுணிந்திலேமறறிதனைப்
பேசிவரையறுத்திதுவென்றுரைப்பார்யார்பெருந்துயரம்
வீசியவரின்பமுறவினைத்திடலென்றெணக்கவல்வான். (கச)

அப்போதுசிவபெருமானருள்போலவழலினுந்தீ
வெப்போதுநரகுழப்பார்முன்புரிதல்வினைபோல
முப்போதுஞ்சிவனடியேமுன்னுபுகாலங்கழிக்குந்
தப்போதுதராவீணைமுனியாங்குச்சார்ந்தனனால், (கரு)

அந்தமுனிவனை வணங்கியான்றகவுண்டின்னியனுஞ்
சந்தமுனிபிதிரர்நரகுழப்பதுவுஞ்சாற்றியது
முந்தவவர்துயரனைத்துமுருக்குவதற்குன்னியதுஞ்
சிந்தலிலாவகையெடுத்துச்செப்பினனவனுரைப்பான். (௧௬)

வேறென்றுகருதாதுயினிர்கவிரிமாயூரப்
பேறென்றுதலத்தடைதிபிராணைதிரோர்தீர்த்தமுள
தாறென்றுசடையானுமதன்பெருமைசொலமாட்டா
னீறென்றுமதின்மூழ்கினெப்பெரியபாதகமும். (௧௭)

அன்னதிருப்புனலாடியத்தலத்தோர்நாள்வசித்தி
முன்னவனைத்தரிசித்திமுப்பொழுதுமிதுசெய்யி
னென்னபெரும்பாதகமுமிரிந்தவர்மேல்வீடுறுவார்
சொன்னபடிசெய்யென்றான்றுணிந்தனன்மற்றம்முனியும். (௧௮)

மற்றவனைவிடைகொண்டுமாயூரத்தலம்புகுந்து
சொற்றபடிவள்ளலார்திருமுன்னர்ப்புனறோய்ந்து
பற்றமையவொருபொழுதுபட்டினியுற்றங்கமர்ந்தான்
முற்றவுணரனையாளைமுப்பொழுதுங்கைதொழுது. (௧௯)

இந்தவிதமிவனொருநாளிருக்கநெடுநரகுழக்கும்
பந்தமிகுபிதிரரெலாமத்துன்பம்படநூறிச்
சந்தமிகுசிவலோகத்தடைகின்றார்தாமுவக்க
வந்தமகன்றனைக்கண்டார்மாயூரத்திதுசொல்வார். (௨0)

இத்தலத்துநீயியற்றுமிருந்தவத்தாலிடர்நீங்கிக்
கைத்தலத்தாமலகமெனக்கதிகண்டோம்புண்ணியங்க
ளெத்தலத்துமிதுபோலவியைப்பதுவேறில்லையினி
முத்தலத்தும்புகழ்பரம்பவாழிநீயெனமொழிந்து. (௨௧)

கண்காணவவர்சென்றுசிவலோகங்கைக்கொண்டார்
பண்காணவிசைமுனிவன்பகர்ந்தமொழிநனிவியந்து
மண்காணத்தவம்புரிந்தமாமுனிவனத்தலத்தே
தண்காணப்பெருமகிழ்வுதலைக்கொண்டுவீற்றிருந்தான். (௨௨)

முன்பிதிரருரைத்தபடிமொழிபலதானமுங்கொடுத்தா
னன்புசெறிசிவநிசிமுன்னுயவிரதமுமுடித்தான்
றுன்புதன்பேருரைப்பார்க்குமில்லையெனவுலகுசொல
வன்புதவத்துறக்கொண்டமுனிபன்னாளவண்வசித்தான். (௨௩)

ஒருதினஞ்செய்திடுதவத்தாலுறுபிதிரரளவொருவிக்
கருதியதின்மேலாயகதியுற்றொனிற்கோடு
பொருதிரைநீருலகிடையத்தலம்போலுமொன்றுளதோ
சுருதியுணர்முனிவனுந்தன்றென்னகர்ப்போய்வாழ்ந்திருந்தான். (௨௪)

கவுண்டின்னியப்படலம் முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் ௯0௧.

# யோகவித்தமப்படலம்,

கரைபொருதிரைவிருத்தகங்கையந்தீரத்துள்ளான்
விரைகெழுபனவன்யோகவித்தமனென்னும்பேரான்
றரைபுகழனையாளில்லாள்சண்டியென்றுரைக்கும்பேராள்
புரைதபுமனையார்க்குள்ளபுத்திரர்பல்லோர்மன்னோ. (௧)

சாதுவாமறையோனேனுமுன்செய்தீவினைச்சார்பாலே
தீதுசான்மிடிக்கோட்பட்டுச்செறிதருபுதல்வராலு
மோதுநற்குணமொன்றில்லாச்சண்டியென்றுரைப்பாளாலு
மோதுமாதுயரமுற்றான்மிடியுறின்முளைப்பதென்னே. (௨)

மாதவமுயன்றுசெய்துவறுமையைமுருக்குவேனென்
றுதரமுளத்துமல்கவருந்தவமுயலுங்காலை
மேதகுவானநாடர்விரிஞ்சனுக்குரைத்தாரந்தப்
போதன்வந்தெதிரேநின்றான்பொருக்கெனத்தவனுணர்ந்தான். (௩)

எழுந்தடிபணிந்துநின்றவிருபிறப்பாளற்பாராச்
செழுந்தவயாதுவேண்டுஞ்செப்புதிதருதுமென்றான்
விழுந்தெழுந்தையயானோவறுமையான்மெலிவுபூண்டே
னழுந்துமத்துயரநீங்கத்திருவநன்களித்தியென்றான். (௪)

பிரமனுமுறுவல்செய்துபெருந்திருவளித்தோமநத
வரமிகுசிருவையார்க்கும்வழங்கிவாழென்றுபோனான்
கரவறுமறையோன்பின்னர்க்களிப்புறுமனந்தனாகிப்
பரவுதன்னிருக்கைபுக்கான்பாலராதியருமொய்த்தார். (௫)

யாவருந்திருவம்பெற்றதறிதரவெடுத்துக்கூறித்
தாவருமறையோனவாழ்நாட்டடங்கொள்கோதாவரிப்பான்
மேவரும்விருப்பினோடுமேவினன்றீர்த்தமாட
வோவருங்கரையுட்பக்கமிடிந்தாற்றினுறவீழ்ந்தன்றே. (௬)

உள்ளுறவிழுதலோடுமோரொலியெழுந்ததாங்கு
நள்ளுறவிதுவென்னென்றுதெரிதரநடந்தானைய
னெள்ளுறவில்லாச்செம்பொன்வரையெதிர்ப்பட்டாற்போலத்
தள்ளுறமுடியாச்செம்பொன்வைப்பெதிர்தயங்கக்கண்டான். (௭)

காண்டலுமகிழ்ச்சிபூண்டாங்கிருந்தவையாவுங்கைக்கொண்
டாண்டதன்மனையினுய்த்தானதுகனவிலுங்காணாத
நீண்டபல்புதல்வரோடுசண்டியுநிரம்புமோகை
பூண்டனண்மறையோன்றன்னைப்புல்லுபுதுதித்தாளன்றே. (௮)

மறிவருஞ்செல்வம்பெற்றமறையவன்வருவார்யார்க்கு
முறிவருமன்னநல்கிவேட்டளமுகந்துவீசி
யறிவருந்தருமமெல்லாமாற்றுதற்குள்ளங்கொண்டான்
பிறிவருஞ்சண்டியென்பாளஃதுளம்பேணாளாள். (௯)

புதல்வருமனையராகமறையவன்மனம்புழுங்கி
முதல்வனருளாலிநதமுகப்பருஞ்செல்வம்பெற்றோ
மிதமுறநடவேமென்னிலென்பயனிதனாலென்று
கதமுறும்வெயர்வின்மூழ்குங்கலங்கிமூர்ச்சித்துவீழும். (௧௦)

அடியொருபதினான்குள்ளதாமெழுமுழக்கோலாலே
நெடிதளந்திட்டவொன்பானாயிரங்குழிநிலந்தா
னொடிவில்கோகன்னமென்னும்பெயர்பெறுமுதுதானஞ்செய்
படியற்றுபலத்தினாலேபண்புறக்கொடுத்தமேலோன். (கக)

ஒத்தவந்நிலநெருக்கமுற்றுறவமைந்தபைங்கூ
ழெத்தனையுள்ளவாகுமத்தனையாண்டுமட்டும்
புத்தமுதயினும்வாழ்க்கைப்புலவர்வாழ்சுவர்க்கமேவி
வித்தகமருவிவாழ்வன்வேறினியுரைப்பதென்னே. (கஉ)

பயன்படுகல்வியில்லான்பிணிதவிர்சரீரம்பற்றா
னயந்தருகுணச்சாதுக்கணட்புறுள்சொற்றவார்த்தை
வியந்துகொண்மனைவிமைந்தர்மேவுறானிவன்மண்மேலா
லியங்குபுதிரிவானேனும்பிரோதமென்றிசைக்கலாமால். (கங)

வருவிருந்தூட்டலின்றேன்மனையறமென்பதென்னும்
பொருவருமறையோராதிப்புண்ணியரடைந்தாரொன்னில்
வெருவீருமுள்ளத்தோடுமிக்கவமானஞ்செய்வா
ளொருவருஞ்சண்டியாமித்தீயளையொழிவதென்றியாம். (கச)

தகுகுணந்தவிரில்லாளைச்சார்ந்துலகுள்ளோர்யாரு
நகுமுகத்தினரோயாகநயாதுவாழ்வதினுஞ்சீவ
னுகுதிறமெதனாலேனுமுடம்பினையொறுத்தனன்றுஞ்
செகுதிறற்றுன்பம்யாவுஞ்சேராதுன்மரணமென்றே. (கரு)

மறைமுதலன்பூண்டமறையவராதியோரை
பொறையறவவமானஞ்செய்பொல்லாங்குவறிதுபோமோ
கறையறுமறையோர்தம்மைமதித்திடாக்கயமையாலே
நிறைதிருப்பெற்றும்பாம்பாய்நெடுநிலநகுடன்வீழ்ந்தான். (கசு)

என்றிவைபலவுமெண்ணியினிச்செயல்யாதுமில்லை
நன்றியின்மனைவிமக்களொடுநயந்திருக்குங்காறுந
துன்றியநரகேயன்றிச்சுவர்க்கமென்பதுதானுண்டோ
வொன்றியென்னுயிருக்காயவுறுதியேசெயவேனென்று. (கஎ)

மனைமகார்முதலியோணீத்துரும்பெனமதித்துப்போக்கிப்
புனைபொருள்வேண்டுமாறுபொருந்துதன்கையிற்கொண்டு
கனைகுரலெழுவிருத்தகங்கையநீர்நீந்தித்
துனைதரவவாசிநோக்கிநடந்தனன்றூய்மைவாய்ந்தான். (கஅ)

சாத்திரமுறையேபற்பதானமுங்கொடுப்போமென்னிற
பாத்திரமாவர்முக்கட்பரனடிக்கன்பூண்டார்
மாத்திரம்பொலியவர்க்குமாத்தலத்துதவனன்றிக்
கேத்திரஞ்சிறந்ததென்றேக்கிளர்ச்சிகொண்டுணர்வேனென்னா. (க௯)

ஆய்தருமுளத்தனாயபதிகனுக்காகாயத்தே
தோய்தருதிருவூர்க்கொன்றுசுந்தரமாயூரத்தி
னேய்தரவடைதியெல்லாமெண்ணியபடிசெயென்ற
தோய்தராவுவகையுற்றான்யோகவித்தமனென்பானே. (உ௦)

முன்னருஞ்சிறந்ததென்றுமொழிதரக்கேட்டதுண்டு
பின்னருமருள்வாக்கஃதேபேசிடிற்பேசலென்னே
நன்னரும்பனைமுன்னோர்நயப்பதத்தலமொன்றேயென்
றென்னரும்புகழுந்தூயோனெய்தினனொருமாயூரம். (௨௧)

மன்னுமாயூரத்தெய்திவள்ளலார்திருமுன்னாகத்
துன்னுமாதீர்த்தத்தாடிச்சுந்தரநீறுபூசிப்
பன்னுமாமறையோர்முக்கட்பரனடிக்கமலமென்று
முன்னுமாதவத்துமற்றோர்முகந்திடத்தானமீவான். (௨௨)

பூதானஞ்சிலர்க்குச்செய்தான்புனிற்றிளங்கன்றினோடு
கோதானஞ்சிலர்க்குச்செய்தான்குளிர்மணஞ்செய்வான்செம்பொன்
மாதானஞ்சிலர்க்குச்செய்தான்வசித்திடுக்கிரகமென்னு
மீதானஞ்சிலர்க்குச்செய்தான்மற்றவும்விருப்பிற்செய்தான். (௨௩)

இவ்வகைத்தானமெல்லாமியல்புறச்செய்தபின்ன
ரவ்வியமவித்தசிந்தையந்தணன்மாயூரேசன்
செவ்வியமலர்த்தாள்போற்றித்தெரிசனஞ்செய்யப்புக்கான்
வெவ்வியபாவம்போக்குங்கோபுரமேயவாயில். (௨௪)

மன்னியவங்குத்தாழ்ந்துவளம்பொலிகோயில்புக்குத்
துன்னியவனப்புவாய்ப்பச்சூழ்ந்துபின்றிருமுனபுக்குப்
பன்னியவள்ளலாரைத்தரிசித்தான்பரிவுதீர்ந்தா
னன்னியமில்லாத்தேவியஞ்சனாயகிமுன்சென்றான். (௨௫)

உருகிநெஞ்சுடையமேனியுரோமங்கள்சிலிர்ப்பவின்பம்
பெருகிநாக்குழறவெல்லாம்பெற்றவட்காணப்பெற்றான்
திருகியலாதசிந்தைத்திருமறைமுனிவன்பின்ன
ரருகியலாதவாங்குவசித்திடுமாசைபூண்டான். (௨௬)

இன்னணம்பன்னாண்மேவியெம்பிரான்மாயூரேசன்
றன்னருள்விரவியின்பமுத்தியிற்றலைப்பட்டுய்ந்தா
னன்னவன்மாயூரத்தினறஞ்செய்துவசித்தவாற்றாற்
சொன்னபன்மகாருமில்லுஞ்சுவர்க்கத்துவாழ்க்கைபெற்றார். (௨௭)

யோகவித்தமப்படலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௧௩௬.

---

# சுசன்மப்படலம்.

---

பாயநான்மறைப்பரப்புணர்ந்தவ, ஞாயமாமகமனைத்துமாற்றினான்,
காயவானவர்களிக்கவாழ்தரு, தூயவேதியன்சுசன்மனென்பவன். (௧)

சத்தவேதமுற்சகலநூல்களு, மொத்ததாமெனவுணர்விற்றெள்ளியு
நித்தமாதிப்பல்வினைவிரப்பியுஞ், சித்தசுத்தியோர்சிறிதுமுற்றிலான். (௨)

இனியயற்றுவதென்னையென்றுபூங், கனிவிராவியகற்பகீழல்வாழ்
புனிதவேந்தனைப்புந்திசெய்தனன், றனியனுயவன்முன்புச்சார்ந்தனன். (ங)

எனையவாவியதென்னையென்றநு, மனையனுய்பலகருமமாற்றியுந்
தினையோர்பாதியுஞ்சித்தசுத்தியைப், புனையவெய்திலேன்புலந்துமாழ்கினேன். ()

செம்மைமேவியசித்தசுத்தியை, யிம்மையேயினிதெய்தியுய்ந்திட
மும்மைமாமதமுழக்கருதவெண், கொம்மையானையாய்கூறுகென்றனன். (ரு)

என்றபோதவனிதயத்துள்ளுற, வென்றமால்விடைவிமலனைச்கொளா
வொன்றயாமெவனுரைசெய்வாமெனத், துன்றவோதியாற்சூழ்ந்துகூறுவான். ()

பாரவாவமேம்பட்டகவுரிமா, யூரமென்பதோருத்தமத்தல
மாரமான்மியமளவிலாதது, நேரயாவருநினைத்தறிவது. (எ)

கஞ்சமேவியகடவுணுன்முகன், றஞ்சமேயெனச்சார்ந்துபோற்றிட
நெஞ்சம்வேட்டதோர்சிருட்டிநேர்தர, வஞ்சமொன்றிலாவண்ணமீந்தது. (அ)

பறியலூரிடைப்பரவித்தக்கன்வா, னறியவாற்றியவம்மகத்தில்யாஞ்
செறியமேவிபதிங்குநீங்குபு, முறியவொல்லையின்முறையிற்செயதது. (கூ)

மாயவன்முதல்வானவாழ்க்கையர், நேயமாரவாங்கெய்திநீர்மையிற்
றூயபூசனைதொடங்கியேத்திடப், பாயயாவையும்பணபினீந்தது. (க0)

அம்மையேமயிலாகியாங்கடைந், தெம்மையாடருமிறைவற்போற்றுபு
செம்மைசேரவாஞ்சிறப்பினெய்திட, வெம்மைதீரருள்விளைத்தமாண்பது. (கக)

தாருமாவனத்தையலாரோடு, சேருமாதவர்செருக்குமுற்றொழிந்
தோருமேன்மைமாயூரமாத்தலஞ், சாருமேன்மையாறறலப்பட்டார்கதி. (கஉ)

தக்கனென்பவன்றனையர்யாருமே, தக்கவினையோன்சாற்றுமாற்றத்தாற்
றக்கவத்தலஞ்சார்ந்துபோற்றிநந், தக்கநிதனர்சார்ந்துளார்கதி. (கங)

யோகவித்தமனென்னுமுத்தமன், பாகமெத்தமத்தலத்தின்பாலடைந்
தேகனைப்பணிந்தெண்ணிருணத்தான், மோகம்விட்டுயர்முத்திசார்ந்தனன். (கச)

இனியசீர்க்கவுண்டின்னியப்பெயர், முனிவனத்தலமுன்னிப்போற்றுபு
தனியளற்றிலாழ்ந்திரர்சாந்தராம், புனிதராய்க்கதிபொருந்தவுய்த்தனன். (கரு)

தீயவாகியகனவுசெய்பல, னேயமாதரார்நிகழுந்தீமையே
மேயநாண்முதுக்குறைதலால்விளைந, தாயதிப்பலமனைத்துமாயுமே. (கசு)

தூமகேதுமுற்றோற்றத்தால்வரு, நாமமாரனூரனைத்துநாசமா
மேமமாருமாயூரமெய்திடுங், காமமேவிடிற்கணத்திலுள்ளரோ. (கஎ)

சாந்திராயணந்தருகிரிச்சிர, மாய்ந்தமற்றுளவிரதமாறறவி
னேய்ந்தநற்பலமிசைத்தவத்தலந், தோயநதவெல்லையேசுரக்குமென்பரால். கஅ

அத்தலத்தின்மேலாயவோர்தல, முத்தலத்திறுமொழியினில்லையா
லெத்தலங்களுமிதறகொப்பாகுமோ, கைத்தலத்திருமலகங்காண்டியால். (கசு)

அஞ்சனுயகியம்மையோடுமோ, ரஞ்சலின்றியேயென்றுமேவுவார்
மஞ்சலேயெனுங்கண்டவள்ளலார், அஞ்சலின்றுபேரருள்சுரந்தரோ. (உ0)

வள்ளலாரெதிர்வயங்குதீர்த்தமொன், றுள்ளலாரெலாமுலகமுள்ளலார்
நள்ளலாரெலாமின்பநள்ளலார், விள்ளலாரொமதுள்ளம்விள்ளலார், (௨௧)

பிறங்குமாவயிற்பிரமதீர்த்தமொன், றறங்குலாவுமற்றதன்சிறப்பினை
நிறங்குலாவுமற்றெவர்நிகழ்த்துவார், மறங்குலாவுதறவிர்க்குமற்றது. (௨௨)

ஏத்துகாவிரியிடபதீர்த்தச்சீர், பாத்தியாமெலாம்பகரற்பாலமோ
சேத்துவல்வினைசிதைக்கவல்லது, கோத்துநன்னலங்கொளக்கொடுப்பது. (௨௩)

அந்தமாத்தலமடையின்வல்வினை, சிந்தவாய்ப்பதுசித்தசுத்தியோ
முந்தயாவையுமுடியுமென்றுதன், சந்தவானுலகத்துச்சார்ந்தனன். (௨௪)

அனையன்சென்றபின்னுன்றவேதியன், புனையவல்லமாயூரம்புக்கண
னினையவின்பருணிமலனுக்கெதிர், துனையவேகிநற்றீர்த்தந்தோய்ந்தனன். (௨௫)

நீறுபூசினனிகழுமாமறை, கூறுகண்மணிகுலவப்பூண்டன
னூறுசேர்சடையமலவள்ளலா, ரேறுசீர்த்திருமுன்னரெய்தினன். (௨௬)

கண்டுதாழ்ந்தனன்கசிந்தெழுந்தனன், மண்டுகாதலிற்றுதிவயக்கினன்
றெண்டுபூண்டவர்க்கருளுஞ்சுந்தரி, யண்டுமஞ்சனாயகியைச்சார்ந்தனன். (௨௭)

ஆங்குமிங்ஙனமன்பிற்போற்றினன், வீங்குமானந்தமிகுபெருக்கெழத்
தேங்குமேதுவாஞ்சித்தசுத்திபூண், டோங்குமாமறையோனுவந்தனன். (௨௮)

மாரவேளுடல்பொடித்தவள்ளன்மா, யூரநாயகனருளுறுத்தலாற்
சாரவானவர்தக்கமாதவர், பேரவாவுறுமின்பம்பெற்றனன். (௨௯)

சிந்தவல்வினைசித்தசுத்தியை, வந்தகாலையேவழங்கவல்லது
பந்தம்பாற்றுமாயூரமென்றிடி, லிந்தமாத்தலமெதனொடொப்பதே. (௩௦)

௧௪ சன்மப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௯௬௬.

# காகபூசையுரைத்தபடலம்.

மின்னுபொன்மேருவிலங்கலினோர்பான்
மன்னுமோராலமரத்துறுபொந்திற்
பொன்னுமொவ்வாமனம்வாய்ந்தபுசுண்ட
னென்னுமோர்காகமிருந்ததையன்றே. (௧)

அத்தகுகாகமனேககற்பங்க, ளொத்தகணப்பொழுதென்றுளமுன்னுஞ்
சித்தவிகற்பமிலாவதைத்தேர்ந்தார், முத்தவசிட்டன்முதற்பலரம்மா. (௨)

மற்றதைக்காண்டிடும்வாஞ்சையுளத்தி, னுற்றனரோர்பொழுதுற்றனராங்குக்
கற்றவர்வந்தமைகாகமுநோக்கிப், பெற்றதுநன்குபிறங்குமகிழ்ச்சி. (௩)

வருகவிருக்கெனவாயுரைசெய்ய, வருகினிருந்தனரத்தகுகாலைப்
பொருவில்கற்பம்பலபோயதுகண்ட, வுருவினைகாரணமோதிதற்கென்றார். (௪)

வேறு.

என்றலுங்காகங்கூறுமுலகமீரேழுமேத்த
நன்றமைமாயூரத்தினம்பிரான்றிருமுன்றீர்த்த
மொன்றநன்காடியந்தவுத்தமப்பிரானைப்போற்றி
வென்றவத்தலம்வசித்துமேதரவமர்ந்தேன்பன்னாள். (௫)

அதுபொழுதமலமூர்த்தியாரருள்சுரந்துதோன்றிக்
கதுமெனவென்னைநோக்கிக்கற்பமெண்ணில்லகண்டு
முதுபுகழ்ச்சித்தசுத்திமுயங்கிமெய்ஞ்ஞானம்வாய்ந்து
சதுமுகன்முதலோரோத்தத்தவாதினிதிருத்தியென்றான். (௬)

உறுகற்பம்பலகண்டும்மோருரோமமுங்கழிதராமை
பெறுசிற்பம்வாய்ந்தமேனிபெறலருமுண்மைஞான
மறுவற்றவிதந்தநதன்றேமாயூரமென்னவின்ன
லறுசுற்றத்தோடுமவைகுமனையபுள்ளுரைக்குமன்றே. (௭)

எனக்குமுன்னளவில்கற்பங்கண்டஃதிருப்பதாலென்
றனக்குநலகியதுபோலத்தலம்பலர்க்களித்ததுண்டு
மனக்குநன்றுயவம்மைமயூரமாயங்குப்பூசை
கனக்குமன்போடுசெய்ததிருதரங்கண்டேன்யானே. (௮)

மலர்மிசைவதியும்புத்தேள்வயங்குமைமுகங்களோடு
பலர்புகழ்மாயூரத்தொனபதுதரம்போற்றக்கண்டே
னுவர்தலற்றொருமுகந்திரைதொருபதுதரம்பூசித்துக்
கலர்கொளற்கரியமேன்மைகைகொடுபொலியக்கண்டேன். (௯)

மாயவன்சுத்தவெள்ளைவடிவனாய்மாயூரத்துத்
தூயவன்சரணம்பத்துத்தரந்தொழுதேத்தக்கண்டே
னாயவன்கரியமேனியடைந்துபன்னிருகாலங்கு
மேயவனாகிப்போற்றவிழிகொடுதெரியக்கண்டேன. (௧0)

இனையவர்புரிந்தபூசையித்துணையன்றிக்காணேன்
முனையவெங்குலிசத்தோனுமொய்த்தபன்மனுக்கடாமு
மனையவர்தமரொன்றுசொலப்படுமிலேகராய
வனையவர்போற்றக்கண்டவதற்குமோரளவுமுண்டோ (௧௧)

பரசிவனென்றேவுன்றேயுள்ளமாயூரப்பண்பின்
வரமுறவுரைப்பார்யாரேவல்லவராவரின்னும்
புரமொருமூன்றுஞ்செற்றோன்கயிலையிற்பொருந்துநாண்முற
றிரமுறவினையதாயகேத்திரஞ்செறிந்துவாழ்வான். (௧௨)

பொருந்தவப்பெருமான்செய்தபூரணவருளினாலே
திருந்தவித்தகையபூமிசெறிபெருஞ்சாம்பராஞ
யிருந்தநுநானனேகதரங்கண்டேனின்னுந்தேன்மி
னருந்தவமுனிவீர்வேறுற்றமைந்ததும்பல்காற்கண்டேன். (௧௩)

கடுந்தொழிலவுணன்பூமிகவர்ந்ததும்பல்காறகண்டே
னடுந்தொழில்வராகமுன்போலமைத்ததும்பல்காற்கண்டேன்
படுந்தொழில்வசிட்டரோதும்போலெழுவரைமுன்பார்த்தேன்
விடுந்தொழில்வியாசர்வேதம்விரித்ததும்பல்கால்பார்த்தேன். (௧௪)

பாற்கடலமரர்கூடிக்கடையப்பன்னிருகாற்கண்டேன்
மாற்கவினிரேணுகைப்பான்மால்பிறப்பறுகாற்கண்டே
னாற்படுக்கையினான்புத்தனாகமுப்பதுகாற்கண்டேன்
மேற்படுபெருமான்பல்காற்றிரிபுரம்வீப்பக்கண்டேன். (கரு)

மாயவன்பாணமாகிவந்ததுமெண்காற்கண்டேன்
றாயவம்மால்பன்னோர்காலிராமனாய்த்தோன்றக்கண்டே
னாயமற்றனையான்கண்ணனாகவீரொண்காற்கண்டேன்
பாயவன்பார்த்தனோடுபரமன்போரொண்காற்கண்டேன். (கசு)

சுந்தரன்காமவேளைச்சுட்டதுமுக்காற்கண்டே
னந்தகன்வீரஞ்செற்றதமைதரவிருகாற்கண்டேன்
மந்திரமறையோன்சென்னிமடித்ததுமெண்காற்கண்டேன்
முந்தியமாயனெய்த்தோர்முகந்ததும்பல்காற்கண்டேன். (கஎ)

இவைபலசாண்டலாலேவந்ததுமெனக்கொன்றில்லை
நவைசெய்யிவ்வுடம்புதாங்குநசைசிறிதேனுமில்லை
குவைபடுதத்துவத்தின்கோளெலாமுதறிப்போக்கிச்
சிவையொருபாகன்றாளேசேருதற்கெண்ணங்கொண்டேன். (கஅ)

உடம்பொடுமிருக்குங்காறுமுறக்கநீத்திருக்கவேண்டு
மடம்படுமுறக்கமுற்றால்வரும்பலபிறவிநீவி
ரிடம்படுமாயூரத்தினெந்தையெம்பெருமாற்சார்ந்து
திடம்படுமுறுதிபெற்றுச்சிறக்கவென்றுரைத்ததன்றே. (ககூ)

உரையதுகேட்டபோதேயுவந்தனராகியாருந்
தரைபுகழ்மாயூரத்தைச்சார்ந்துநற்றீர்த்தமாடி
வரைசிலையாகக்கொண்டவள்ளலைத்தொழுதுவாழ்த்திப்
புரையறுபேரானந்தப்புணரியிற்றோய்ந்துவாழ்ந்தார். (உ0)

தண்ணியபெருமாயூரத்தலப்புகழின்னதென்னிற்
கண்ணியவனந்தனாலுங்கலாதரமுற்றுங்கொல்லோ
பண்ணியதவத்திரந்தத்தலத்தினைப்பரவாரொல்லா
மண்ணியபுலையரோமற்றவர்துயர்க்கொழிவுமுண்டோ. (உக)

காகபூசையுரைத்தபடலம்முற்றிற்று.

ஆ திருவிருத்தம் கூ0அஎ.

# வயிரவபூசைப் படலம்.

எண்ணியவெண்ணியாங்கேயடியவரெய்தநல்கும்
புண்ணியமாயூரேசன்பொலிதிருவருளாற்சிட்டி
கண்ணியபிரமன்பின்னரயர்த்துநாமுதலேயென்றோர்
றிண்ணியசெருக்குக்கொண்டான்சிறியர்தஞ்செய்கையென்னே. (க)

இவனிலையினையதாகவிணர்த்துழாய்மோலிமாலுஞ்
சிவனருளனரான்யாமேசிருட்டியாதிகள்செய்வோமெப்
புவனமூநம்மதாணைபொருந்துமென்றெண்ணிப்பூமே
லவனினுஞ்செருக்குக்கொண்டானிவனுமற்றவன்பிதாவே. (உ)

இருவர்தமுள்ளக்கொள்கையின்னதேயாகவோர்நாண்
மருமலர்க்கமலத்தோன்பரன்மாயவன்சென்றனன்று
ணிருண்மலச்செருக்கினாலேயிருக்கைநின்றெழான்கைகூப்பா
னொருமுகமனும்பேசானுயூமனைத்திருந்தானம்மா. (௩)

மாயவனதனைக்கண்டுமலரவன்வதன்னோக்கி
யேயுமென்வரவுகண்டுமிருக்கைநின்றெழுந்திலாய்நீ
பாயவந்தனமுஞ்செய்யாய்பகர்சசியுமிலலாயினறு
மேயதென்னுனக்கோதென்றன்மற்றவன்விளம்பலுற்றான. (௪)

வந்தநீயெனக்குமுந்திவந்தனஞ்செய்தாயில்லை
யந்தவோர்குற்றநின்மேலாகவும்பொறுத்துளேன்பா
லிந்தவாறுரைத்தல்செயதாய்ச்செருக்காமோவென்றான்
சந்தமாமறைநூல்வல்லான்றன்செருக்குணரானான். (௫)

உன்னையான்வணக்கஞ்செய்வதுண்டுகொலுரைத்தியென்றான்
பின்னைவாழ்நிறத்தானகஞ்சனபேதமாம்பிறவிதோறு
நின்னையானபடைத்தேனெல்லாவுலகமும்படைத்தேனீப்பி
லென்னைநீகாக்குமாறிங்கியம்புதியென்றுசொற்றான. (௬)

முந்திநிற்படைத்ததெண்ணாய்முறைதபமொழிதல்செய்வாய்
புந்திசற்றிலலாயிந்தப்புன்மையென்மைந்தவென்று
னுந்திபூத்தவன்படைத்ததுண்டுகொலென்றுகோப
நந்தியோரறையறைந்தானாரணன்கொடிறநிறகஞ்சன். (௭)

கதப்பறையுண்டமாயோன்கண்சிவந்தெழுந்துகஞ்சன்
விதப்புறக்கபோலந்தோறும்வெய்தெனவறைந்தானாக
மதப்பதுமத்தினானுமாண்டதனறண்டங்கொண்டு
சதுப்புயமுடையானமேனிதடித்திடத்தாக்கினானே. (௮)

மாயனுந்தனதுதண்டம்வலிக்கரத்தெடுத்துவீசிப்
பாயமென்மலரோன்மேனிபதைத்திடப்புடைத்தானாக
வாயவக்காலைவிண்ணோரஞ்சினர்மகவானாதி
மேயவெண்டிசைகாப்பாளர்வெயர்த்தனர்கயிலைசார்ந்தார். (௯)

நந்தியைவணங்கிப்போற்றியந்தவனனுஞைபெற்று
முந்தியுட்புகுந்துபெம்மான்முன்பணிந்தெழுந்துநின்று
புந்தியின்மலரோனமாயோன்புவனகாரணர்தாமென்றே
நந்தியசெருக்கினோராய்க்கலாய்த்தனர்நீடுக்கமுற்றேம. (௰)

இருவர்தஞ்செருக்குமாயவிப்பொழுதருடியென்று
பொருவிலெண்டிசைகாப்பாளர்புகன்றனர்வேண்டலோடு
மொருவருங்கருணைமூர்த்தியுலககாரணனெனும்பெம்மான்
வருகுறுநகையனாகிவயிரவற்றோற்றினானே. (௧௧)

தோற்றியவடுகப்புத்தேடுணைமலரடியிற்றாழ்ந்து
போற்றியகையனாகிப்புரிபணியென்னையென்னச்
சாற்றியமலரோன்மாயோன்றலைக்குமேற்கொளுந்தருக்குக
காற்றியதினைத்தோமென்றனவனதுகருத்துட்கொண்டான். (௧௨)

முத்தலைச்சூலமேந்திமுண்டகன்மால்கலாய்க்கு
மத்தலையடைந்தானாகவனைவருந்தொடர்ந்துசென்றா
னித்தலையினையனெய்தற்கேதுவென்னென்றுள்ளஞ்சிந்தி
தத்தலையுறங்குமாயோன்மறைந்துவைகுந்தஞ்சார்ந்தான். (௧௩)

அதுகண்டுமச்சுறுமலம்புயன்வடுகற்பார்த்தென்
முதுமைந்தவருதியென்றான்மொழிந்தவாவருவேனென்று
கதுமெனச்சினந்துசென்றுகையுகிரொன்றனாலப்
பதுமனோர்தலையிடந்துவீழ்த்தினான்பதறிவீழ்ந்தான். (௧௪)

வீழ்ந்தவனுய்யவையன்பினைந்தருள்செயவெழுந்து
தாழ்ந்தனனிற்பவெள்ளுந்தலையிழந்ததனையோர்ந்து
வாழ்ந்தனையிருதியென்றமடிதலைகையிலேந்திச்
சூழ்ந்தவைகுந்தம்புக்கான்றேற்றினான்விடுவச்சேனன். (௧௫)

அனையனைச்சூலத்தேற்றேயச்சுதன்முன்புசென்று
முனையவச்சூலந்தன்னாற்கோதண்டந்திறப்பமொய்த்து
வனையவாய்வழியுநெய்த்தோர்வண்கரக்கபாலத்தேற்றா
னினையநாள்பல்லசெல்லவிளைத்துமூர்ச்சித்துவீழ்ந்தான் (௧௬)

மங்கலந்தருதியென்றுமாமகளிரந்துவேண்ட
வங்கவட்கிரங்கியுன்னாற்காருயிர்கொடுத்துப்பின்னர்
மங்கியவிடுவச்சேனன்றனக்குமுன்மாட்சிநல்கிக்
கங்கைசூழ்கிடந்ததெய்வக்காசிமாநகரமுற்றான். (௧௭)

உற்றவன்விசுவநாதனாண்மலர்ப்பாதம்போற்றக்
கற்றவர்புகழ்வோயிந்தக்காசிமாநகரின்மேலாய்
நற்றவர்வணங்கவென்றுநாமமர்தானமொன்று
மற்றதுபொன்னிசூழுமாயூரமென்பதம்மா. (௧௮)

ஆயவத்தலத்தையண்மியாங்கெமைப்பூசையாற்றி
நேயமிக்கிருத்தியென்னநெரோலெனவடுகப்புத்தே
ளேயமெய்த்தவமுள்ளாரேசூழுமாயூரஞ்சார்ந்தா
னாயன்முற்பொலியாநிற்குநலத்தகுதீர்த்தநதோய்ந்தான். (௧௯)

விள்ளலைக்குறிநதுநின்றமேன்மையோருளத்தினீங்கா
வள்ளலைக்கருணைச்செல்வியஞ்சனாயகியைமாறா
துள்ளலைத்தெழுபேரன்பாலுருகுபுபோற்றிநின்றான்
றெள்ளலைக்குறிக்குமையனெதிர்ந்திதுசெப்புகின்றான். (௨௦)

மைந்தநீயின்றுதொட்டுவயிரவகாலனாகி
யுந்துகேத்திரத்துக்காவலொருங்குபூண்டமர்திகையிற்
சந்தமாங்கபாலநெய்த்தோர்தங்கினகணத்தார்கொண்டு
நந்தநன்களித்தியென்றான்வடுகனுமதுநயந்தான். (௨௧)

கேத்திரத்துறந்தோர்தம்மைக்கிளர்நமன்கைக்கொடாது
மாத்திறல்வடுகத்தேவையாயிடைவழுத்துவோர்க
ளேத்துறுநரகவாதையிடர்ப்படார்பாவரோனு
மூத்தவனாயவன்னான்முருக்கிடவுயர்வரன்றே. (௨௨)

வயிரவபூசைப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௪௦௦௧.

# திருமாலவதாரமூர்த்திகள் பூசித்தபடலம்.

சோமகனென்னுமசுரன்முன்னாட்சுருதியனைத்துங்கவர்ந்துகொண்டு
பாமநெடுங்கடலபுக்ககாலைப்பார்ப்பனமாக்கள்வெரீஇயிரப்ப
காமமழுப்படையெம்பிரான்செய்நல்லருள்பெற்றுநறுந்துழாய்ப்பைந்
தாமமுகிலொருமீனமாகித்தாந்திரைமோதுஞ்சலதிபுக்கான். (௧)

புக்குத்தகுவனுயிர்சவட்டிப்போற்றிடுவேதமனைத்துங்கொண்டு
நெக்குக்கசிவுளத்தார்கரத்துநீட்டிபுசிறயைத்ததருக்குமேவித்
திக்குக்கலங்கப்புவிகலங்கத்தேவருலகுநிலைகலங்கப்
பக்குப்பிலமும்வெரீஇக்கலங்கப்பாயதிரையாழிகலக்கினானால். (௨)

ஆயபொழுதுபிரமனாதியமரரெல்லாருங்கயிலைநண்ணி
மேயமுற்றும்பரமபரற்குவிண்ணப்பஞ்செய்யக்கைமுகிழ்த்து
மாயமகரவலிசிதைத்துவம்மெனச்சாத்தனையேவினனத்
தூயவன்மீன்வலைவீசுவோனாய்த்தொக்கதிரைக்கடல்வாய்ப்புகுந்தான். (௩)

நாறுந்துழாயணிமீன்பிடித்துநலியச்சவட்டிவிழியெலும்பு
தேறும்படியிடந்தேகியெங்கள்சினமயனங்கைவிரலிற்சேர்த்தான்
பாறுமமரர்கலக்கந்தீர்ந்தாரைம்பொற்றிருமறுமார்பினானு
மேறுபிழைக்குக்கழுவாயாற்றவெண்ணிமாயூரமடைந்தனனே. (௪)

வள்ளியநாதன்றிருமுனமேயமாப்பெருநதீர்த்தத்திடைப்படிந்து
தெள்ளியவாலயத்துட்புகுந்துதேவர்தந்தேவனைச்சின்மயனை
யுள்ளியயோகியருள்ளத்தானையொப்புயர்வில்லாவொருவன்றன்னை
நள்ளியவன்பிறைஞ்சித்தொழுதுபோற்றநாதன்மகிழ்ந்திதுகூறலுற்றான். (௫)

ஆற்றியதீமையனைத்துநீத்தாயற்புதமாயித்தலத்துமேவிச்
சாற்றியதீர்த்தம்படிந்துநம்பொற்றாள்வழிபட்டதகவினாலே
போற்றியகாவற்றொழிலுமுன்போற்பூண்டுநின்பேருலகெய்திவாழென்
றேற்றியசேக்கொடியானிசைத்தானேறுத்தொழுதகன்றான்முகுந்தன். (௬)

அதிதிமகாருந்திதிமகாருமார்கலிமுன்னர்க்கடைந்தகாலை
மதிதோடுமந்தரவெற்பழுந்தவள்ளற்பரமன்கருணைபெற்றுப்
பொதிவலிமாலோர்கமடமாகிப்பொறபழுதின்றிச்சுமந்து
பதியுமமிர்தமெடுத்தபின்னார்த்தருக்கிப்பரவைகலக்கினானால். (௭)

அந்தப்பொழுதுதொழுதுதேவரமலற்குரைப்பவனையனும்மோர்
தந்தப்பிரானமுகநோக்கியாமைதருக்குமுழுதுமுருக்குகென்னக்
கந்தப்பகன்றைத்தொடையலானுங்கருதும்பரதவனாய்ப்போகி
முந்தப்பிடித்தொருகச்சபத்தைமுருக்கித்திருக்கிக்கருக்கினனே. (௮)

மற்றதனோடுமெயர்த்தவந்துமாதேவன்மார்பிலணிந்துபோனான்
சொற்றகவுததுவமார்பினானுந்தோற்றுப்புரிபிழைத்தீர்வுதேர்ந்து
கற்றவர்போற்றுமாயூரமெய்திக்காமருதீர்த்தம்படிந்தெழுந்து
பொற்றபிரான்முன்னர்ச்சென்றுதாழ்ந்தான்போற்றிசயசயபோற்றியென்றான்.

மாறுக்கருணைமுழுமுதலேவான்விட்டொளிகெழுமாமணியே
தேறுச்சிறியன்புரிபிழையைச்சிந்தைகொள்ளாதருள்செய்தியென்ன
நீறுப்புரம்பொடிசெய்தபெம்மானேர்ந்துநின்றீமைகழிந்துபோய
தாறுப்பொலிநம்மருட்டிலக்காயமொனமாலுந்தொழுதுபோனான். (௧௦)

பின்னுமோர்காலத்திற்செம்பொற்கண்ணன்பெற்றவரத்தின்வலியினாலே
துன்னுபுடவிமுழுதும்பாயிற்சுருட்டிப்பிலம்புக்கொளித்தகாலை
மன்னுமுயர்பதிதன்னருளான்மாயோன்சுவேதவராகமாகிக்
கொன்னுமங்குற்றவனைச்சவட்டிக்கோட்டின்மண்கொண்டுமுன்போலவைத்தான்

ஆயவோர்காலைத்தருக்குமேவியண்டமனைத்துநடுநடுங்கப்
பாயவளைகண்மருப்பறபிற்கோத்துப்பற்பலவாகவெடுத்துவீசத்
தீயதுவந்ததுலகிற்கென்றுசிந்தனைசெய்துவானாடர்யாரு
மேயகயிலைப்பிரானைத்தாழ்ந்துவிண்ணப்பஞ்செய்துவிளம்பினாரோ. (கஉ)

கேட்டபிரானுமுறுவலித்துக்கேகயமூருநறுங்கடப்பந்
தோட்டணிமார்பன்வதனநோக்கித்துண்ணெனவிப்பொழுதேயடைந்து
கோட்டடலேனக்குறும்படக்கிவருதியெனவக்குமரவேளு
நாட்டஞ்சிவந்தோர்கிராதனாகிநடந்தனன்கோலத்தினேரெதிர்ந்தான். (கங)

கண்டபொழுதேசினந்துகோலங்காருங்கடலுநடுங்கவார்த்துக்
கொண்டவளைகள்பலமருப்பிற்கோத்துப்புவனங்குலையவீச
வண்டமனைத்தும்புரக்குஞ்செவ்வேளத்தனையும்பொடியாகநூறி
மண்டமுடுகியெதிரநுடறிமற்றதன்கோடுபிடுங்கினானே. (கச)

கோடுபறித்தெழுந்தெங்களையன்கோமளமார்பிலணிந்துபோனா
னாடுவராகனிதயத்தெண்ணிநாமெவன்செயதாமெனக்கவன்று
கூடுமாயூரத்தலத்தடைந்துகோகமகம்பொலிதீர்த்தமாடி
யாடுபிரான்பொன்னடிகள்போற்றியஞ்சலிசெய்துதுதித்தனனே. (கரு)

அன்பனையாளுங்கருணைவாழ்வேயாருமுறாநினுக்குமப்பாற்பொலிவோய
மன்பனையோடுமவிடாதமர்ந்துமன்னுயிர்யாவும்புரக்கும்வள்ளா
லின்பனைமாத்திரையேனுமில்லாவேழைத்தொழிலுவந்தேறருத்தோளி
லென்பனையிறசருமம்புனைந்தாயின்னருள்செய்துபுரத்தியென்றான். (கசா)

உற்றசெருக்கின்பிழையொழிந்தாயோங்குவைகுந்தநகரமேவிச்
செற்றம்விளைக்குநதருக்குநீத்துத்தெய்வநம்பேரருள்சிந்தைசெய்து
கற்றதிதிசெய்தமர்தியென்றான்காகுத்தனுங்கைதொழுதுபோற்றி
யற்றமகலவிடைபெற்றுப்போனானணைவழிநின்றினிதுவாழ்ந்தான். (கஎ)

வேறு.

மீட்டுமொருகாலத்துவெய்யவலியிரணியன்றன்
னாட்டுபெருந்தவத்தாலேநல்லவரம்பலபெற்று
வீட்டுமொருபகையின்றிவிரிபுவனந்தாட்படுத்துக்
கூட்டுநடுநடுக்கமுறக்கொடுந்தொழிலேதலைநின்றான். (கஅ)

அக்காலமவனைவெலற்காயதிறனுறத்தேர்ந்து
நக்காலமெடுத்தயின்றநம்பர்திருவருள்பெற்றுத்
திக்காலுமிர்ந்தபுகழ்த்திருமறுமார்புடையண்ணன்
முக்காலஞானமுணர்முனிவர்புகழவன்மைந்தன். (க௯)

பக்கமொருதன்கூறுபதியவிறுவினன்வலிமை
தொக்கரமடங்கலாய்த்தூணின்றும்வெளிவந்து
தக்கபகலிரவல்லாக்காலத்திற்றரைவானம்
புக்கவிடமல்லாதவிடத்தவனைப்புரிந்திருத்தி. (உ0)

நெஞ்சுபிளந்துறுசெந்நீர்நிரம்பமாந்தினனதனு
லஞ்சுவெறிதலைக்கொண்டாங்கமரர்களைவருத்திடலு
மஞ்சுபொலிகளத்தான்பொன்மலரடிவீழ்ந்தவரிரப்பத்
துஞ்சுபடர்வலிவீரற்பார்த்திதனைச்சொற்றனனால். (உக)

வயவீரவிப்பொழுதேநரமடங்கல்வெறிமாய்த்து
நயமாரவருதியெனநங்கள்பிரானருள்செய்யச்
சயவீரபத்திரனுஞ்சரபவுருக்கொண்டெழுந்து
புயனேருமுடம்பினரமடங்கலைவலிபொருதழித்து. (உஉ)

கண்டுசெருமங்கவர்ந்துகிளர்பெருமான்பெரும்பியலிட்
டாண்டுவணங்கினன்போனனறிவுதிப்பமாயவனு
மீண்டுபிழைக்கென்செயவாமென்றிரங்கிக்கவலுற்று
வேண்டுபொருளருடிருமாயூரத்தைவிரைந்தடைந்தான். (உங)

மறமனைத்தும்பொடியாகருமாதீர்த்தம்படிந்தாடித்
திறமனைத்துமருள்வள்ளல்சேவடிமேற்பணிந்தெழுந்து
நிறமனைத்துந்தழாய்புனைவோய்நின்பிழைதீர்ந்ததினி புலரா
வறமனைத்துந்தவிர்ததோம்பிவாழெனக் கூறினன். (உச)

வேறுமொருகாலத்துவெய்யமாவலியென்பான்
மாறுதவிர்ததெய்வுலகும்வயங்கியதன்னடிப்படுத்துப
பேறுதருமொருவேள்விபெயாகுறச்செயகிடல்குறித்தா
சாறுகொளுமவனைவெலத்தம்பிரானருள்பெற்று. (உரு)

தூன்றதவக்காசிபற்குமதிதிக்குமொருமகவாய்த்
தோன்றவிகழ்குறளுருவிறறோனறிமகக்களம்புகுந்து
மூன்றடிமணகொடுவெனமுனமொழிந்தபடியவனகொடுப்ப
வேன்றனனோங்கினனறனாவிண்ணிரண்டடியுளனானான். (உசு)

ஓரடிமற்றவன்றலைமேலுறவைத்துப்பிலத்தழுத்தி
பாரமிகுசெருக்கடைந்தான்பண்ணவர்மற்றதுதேர்ந்து
நாரமலிசடையான்பானண்ணியிறைஞ்சினருரைப்ப
மாரனுடல்பொடித்தபிரானவடுக்கனைக்கூயேவினன். (உஎ)

அன்னவன்வந்துடன்றுசமராடிவலியறச்சவட்டி
யுன்னரியவுடம்பின்றோலுரித்தொருசட்டையிற்பூண்டு
பின்னமறவொளிர்சட்டைநாதனெனும்பெயர்பூண்டான்
றன்னமர்கையவன்முதுகந்தண்டெலும்புகவர்ந்தமைத்து. (உஅ)

பார்புகழுமொருதண்டபாணியெனும்பேர்பெற்றன
சீர்திகழுமொருகுதிகாற்சிறாந்நரம்பினைவாங்கித்
தார்பொருவணிந்துநரம்பணியனெனும்பெயர்தாங்கி
வார்தருதன்கடுங்கோபமாறறினன்வயிரவனே. (உகூ)

மாயனதுபெருழுதனைத்துமறவாமலுளத்துணர்ந்து
நேயமிறன்பிழையகலநெடுங்கழுவாய்செயக்குறித்துத்
தேயமெலாம்புகழ்ந்தேத்துந்திருமாயூரத்தடைந்தா
னுயபுகழபெருந்தீர்த்தமாடினனீறணிந்தான். (௩0)

கண்மணிமாலிகைபுனைந்துகருத்துறவைந்தெழுத்தெண்ணி
வண்மயிலைப்பெருமானைவள்ளலெனும்பெயரானை
யொண்மயிலோர்புறத்தானையுவந்தேத்திவழிபட்டான்
கண்மருவுநுதலானுந்திருவுள்ளங்களிகூர்ந்தான். (௩௧)

பற்பலகாற்பிழைசெய்துதண்டிக்கப்பட்டனையான்
மற்புயமாயவசிறியமதியொருவிவாழென்று
னற்புதனேயெல்லாநின்னருளென்றேயஞ்சலித்துக்
கற்புயர்மாமகள்கொழுநன்களித்தேத்திப்போயினனே. (௩௨)

திருநெடுமாலவதாரமைந்திடத்துஞ்செய்தபிழைப
பருவரன்மாய்த்ததுகவுரிமாயூரமெனும்பகரில்
வெருவருமத்தலம்போலவிண்ணிடத்துமுண்டுகொலோ
பொருவருமாமுனிவீர்காளபுந்தியுறத்தெளிவீரே. (௩௩)

திருமாலவதாரமூர்த்திகளபூசித்தபடலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௧0௪௨.

## தருமன்பூசித்தபடம்.

ஏதப்படுந்திறமெல்லாமொழிபநிமையவரு
மேதக்ககேள்விமுனிவோருஞ்சேவநுமயிந்துமெயோர்பான்
சாதத்தமைந்ததிருமாலுமுனளிக்கவணங்கி
யோதபபொலியுந்தருமகடவூரெனவொருதலமே. (௧)

அந்தத்தலத்தைம்படைமாரயிலங்கவணிசெய்குழை
சந்தச்செவியிற்பொலியச்சிறுதனடைகாரவிளங்க
வந்தற்புதத்துயர்மாறகண்டமொளாறும்மழமுனிவனை
கந்தப்புதுமலர்தூயப்பெருமாயனம்மடேந்தினனே. (௨)

செருநதிபுன்னகமாலிநதங்கூவிளஞ்செங்கழுநீர்
குருந்துமந்தாரந்துரோணமறுகதுப்பைமழை
இருநதுகடுக்கைகரவீரமாதிசெழுமலர்கொண்
டருந்தவமாமுனிபனனுஞ்பூசனையாற்றினனே. (௩)

இவ்வண்ணம்பூசனையாற்றிடுகாலையெமபுலிபந்
செவ்வண்ணமாயவுலோசனம்விசத்திருக்குளத்தோ
டவ்வண்ணமாயபெருமானருட்குரியானைவௌவ
தெவ்வண்ணமேவிமறலிபகடுமேற்சூழ்ந்தனனே. (௪)

கூற்றுவரக்கண்டுசங்கரயோகொடுநெஞ்சமுண்டு
போற்றுபிரமன்முதலோர்க்குயிர்கத்தபுண்ணியவோ
வேற்றுமிசையுவந்தொள்ளடியாரையெதிர்பவவோ
தோற்றுபயந்தவிர்த்தாள்புகலெனறுதுதித்தனனே. (௫)

துதிக்குமதனுக்கிரங்கிச்சுயம்பெருஞ்சோதிமறை
மதிக்குங்கருணைப்பிழம்பாயவன்வெளிவந்திந்நினைதீ
திதிக்கும்படியுற்றனமென்றருளிச்செறிந்துசின
முதிக்கும்படியெதிர்நின்றவன்மார்பிலுதைத்தனனே. (௬)

உதையொன்றுகொண்டுயிர்மாண்டானமன்பின்னுயிரளிப்பக்
கதையொன்றுகையொடெழுந்தினிச்செய்யக்கடவதென்னென்
றிதையொன்றுவெற்பத்தனைபாவமேனுமிறக்கும்வளந்
ததையொன்றும்பொழின்மாயூரமாத்தலஞ்சார்ந்தனனே. (எ)

சார்ந்துதிருமுனர்த்தீர்த்தம்படிந்துதவாதவினை
யீர்ந்துபொலிதிருவெண்ணீறுபூசியெழுத்தைந்தெண்ணி
யோராதுதிருப்பெருங்கோயிலைச்சார்ந்துருகிப்பணிந்து
தேர்ந்துபெருவள்ளலாரடிப்பூசனைசெய்தனனே. (அ)

புண்ணியமாரஞ்சனாயகிபாதமும்போற்றிசெய்து
கண்ணியவத்தலத்தீசானதிக்குக்கலந்துநயந்
தண்ணியமேன்மைச்சிவலிங்கமொன்றங்கமையநிறீஇத்
தண்ணியதீர்த்தமுநதொட்டரும்பூசைசமைத்தனனே. (கூ)

காலையிற்றான்செய்சிவலிங்கபூசைகதிர்ப்பச்செய்து
சோலையிறபூங்குழல்பால்வள்ளலாமுன்றுணைந்துவந்து
வேலையிற்றோன்றுநிறத்தானெப்போதும்விழைந்திறைஞ்சு
மாலையிற்போற்றித்துதிபலவாகவழுத்துவனே. (க0)

அத்தாவெனிலவர்தன்மையெண்ணாமலருள்சுரக்கும்
பித்தாகொடியவெனையுநன்காண்டருள்பேசரிய
சுத்தாதொழும்பர்தமெய்ப்பில்வைப்பேசுடரார்மணியே
முத்தாசெழும்பொழின்மாயூரமேயமுழுமுதலே. (கக)

காவாயெனிலவர்தன்மையெண்ணாதுகடைக்கணிக்குங்
கோவாயெனையுங்குறித்தாண்டுகொள்கொடுநஞ்சமுண்டுஞ்
சாவாய்மறைமுடிக்கெட்டாய்மெய்ஞ்ஞானத்தனிச்சுடரோ
மூவாய்செழும்பொழின்மாயூரமேயமுழுமுதலே. (கஉ)

அன்னாவெனிலவர்தன்மையெண்ணாமலருள்சுரக்கும்
பொன்னாவெனுஞ்சடையாயடியேனையும்பொறபுறவாள்
பன்னாதகவுந்தவிர்தரயாரும்பரிநதுதொழு
முன்னாய்செழும்பொழின்மாயூரமேயமுழுமுதலே. (கங)

என்றுதுதிக்குங்கொடுங்கூற்றுவன்முன்னெழுந்தருளிக்
கன்றுமிருகங்கரத்தேந்தினான்கொடுங்காலவனை
யொன்றுபிழைதவிர்ந்தாய்முன்னையாட்சியினொன்றிடுதி
பொன்றுதலின்னமைப்போற்றுநர்பாற்புகுதரினே. (கச)

அன்றியுமித்தகுமாயூரங்கண்டவராயெனினுங்
கன்றியுமின்னகர்காணப்பெறார்கருதாயெனினின்
வென்றியுமாக்கமுமாட்சியும்யாவும்விளிந்தொழிய
மொன்றியுமொன்றுக்கலப்புறுவார்க்கஃதுறுவதன்றே. (கரு)

கூடியவன்பினொருநீயருச்சித்தகோசத்தியா
நீடியபேரருளோடுறைவோர்மேக்கிறைகுறியும்
பாடியவாவியுமொருநின்பேராற்பரவுகவென்
றாடியகூத்தன்மொழிந்தான்மறைந்தனனவ்வயினே. (கசு)

புத்தியென்றேற்றுப்புணர்ந்துதன்னூர்ப்புகுந்தானியமன்
சித்திபெற்றெய்தியதோர்ந்துதற்சேர்ந்தகணங்கட்கெல்லாம்
பத்திசெய்வள்ளலருளெடுத்தோதிப்பரவுசெங்கோ
லெத்திசையுஞ்செலமுன்போனடாத்தியிருந்தனனே. (கஎ)

தருமன்வரம்பெற்றகாரணத்தாலத்தலம்பொலிந்து
தருமபுரஞ்சிவலிங்கம்பொலிந்துதருமலிங்கந்
தருமம்வளர்க்குந்தடமும்பொலிந்துதருமதடந்
தருமமுணர்ந்தவரொன்றேருதிடும்பெயர்சார்ந்தனவே. (கஅ)

காரீட்டநீலகண்டப்பெருமானமன்காய்ந்தியற்று
போரட்டகாரணத்தாலந்ததானமும்போற்றுமொரு
வீரட்டமாயதிமாயூரத்தெல்லையுண்மேவியது
பேரட்டமூர்த்தியங்கக்கோலங்கொண்டுபிறங்குவனே. (ககூ)

காலசங்காரப்பெருமானைக்காலன்பதிட்டைசெய்த
வாலமுண்டானையிடமோரிரண்டினுமண்ணித்தொழா
மூலபண்டாரமென்மாயூரத்தாதிமுனம்பணிவார்
சாலவுண்டாகுமின்பத்தினராகித்தழைபவரே. (உ0)

தருமன்பூசித்தபடலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் க0சுஉ.

---

# காமன்பூசைப்படலம்.

---

கனிவனப்புமை, பனிவரைத்தலைத், தனியுதித்தநாட், குனிபொருப்பினன். (க)

நாரவாவிமா, யூரமாநகர்ச், சாரவாயகா, லாரவாந்திசை. (உ)

ஆய்தருங்கடுக், காய்வனத்திடை, மாய்வில்யோகமுற, றேயிருந்தனன். (ங)

ஆயநாளுயி, ராயயாவையு, மாயபோகமற, றுயவைகின. (ச)

மாயனெண்ணுபு, நாயன்மேற்கணை, போயின்னேதொடு, சேயனேயென. (ரு)

மாரவேளுமோ, ரீரமார்கணை, நேரவாய்த்தொடுத், தாரவோடினன். (சா)

ஏறுசேவகன், கூறுமோர்விழி, வீறுதீயினு, னீறுபட்டனன். (எ)

இரதிமாழ்குற, வரவப்பூணினன், பரவுனங்களும், வரமளித்தனன். (அ)

உருவந்தறகலான். மருவிலானைக்கண், டொருமடந்தையுட், பொருமறீர்ந்தனள்.

மழைபொருங்களத், தழைகொள்கையற்குப், பிழைசெய்தாமென்றுக், குழையு
[நெஞ்சினன். (க0)

தாரமாதொடு, மீரவான்பொழி, லாரமேயமா, யூரமெய்தினன். (கக)

பாவநாசநீர், மேவமூழ்குபு, தேவதேவையைந், தேவன்போற்றுவான், (கஉ)

தஞ்சமேயென, வஞ்சலம்மையோ, டெஞ்சலின்றிவேண், மஞ்சன்போற்றுவான்.

போற்றுநாளிடை, நீற்றுமேனியா, றாற்றுபேரரு, ளேற்றுவாழ்ந்தனன். (௧௪)

கட்டமாடிசோ, பட்டவேளுடல், கட்டதானம்வீ, ரட்டமாயதே. (௧௫)

அந்தத்தானத்தை, முந்தப்போற்றிடி, னெந்தப்பேறுமே, வந்தத்தோயுமே. (௧௬)

பாரவாவுமா, யூரவெல்லையுட், சாரவானர்வா, யாரவேத்திட. (௧௭)

இட்டமாயவீ, ரட்டநான்கெனிற, பட்டமான்மியஞ், சட்டயார்சொல்வார். (௧௮)

காமன்பூசைப்படலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௧0௮0.

# தீர்த்தவிசேடப்படலம்.

கரவுதீர்மனம்புகுங்கணிச்சியங்கைவள்ளலா
ருரவுசேருமயிமுகத்தினூற்றுநாளுமுயர்புரம்
விரவுபரிவலியினமாயநகவெந்தழற்சுவாலையாம
பரவுமானமியக்குலாடபாவநாசதீர்த்தமே. (௧)

அட்டமூர்த்தியார்திரளிலப்பைதாங்குசூலத்தாற
னெட்டகாரணர்தெரிந்தசூலதீர்த்தமென்னவு
மிட்டவாதிநாளினுடனேணணியெண்ணிலாவளம்
பட்டவாதிதீர்த்தமென்னவும்பகர்ச்சிமேயதால (௨)

தேவதேவவள்ளலார்திருந்துசனணித்தலைப
பூவராதியாவரும்புகுந்துமூழ்கினமற்றவர
பாவநாசமாக்கலாற்பாவநாசதீர்த்தமென
றேவரும்புகழ்ந்துரைக்கநாமமெய்திற்றப்புனல (௩)

தருமமேவநல்கலாற்றருமதீர்த்தமிகுதியு
மருவருத்தநல்கலாலருத்ததீர்த்தமாணபுசால
பொருவில்காமநல்கலாற்காமதீர்த்தமபுனலைமதீர்த்
திருவுமுத்திநல்கலானமுத்திதீர்த்தமெனபரால. (௪)

செம்மைமேனிவள்ளலார்திருந்துசொற்றலைக்கொடு
மும்மைஞாலமீன்றதேவிமூழ்கமுன்னுருத்தரு
மெய்ம்மையானபெருந்தடத்திலங்குமான்மியம்பல
வெம்மையார்மறத்திணைக்கத்தமைக்கும்வீறுமிக்கதே. (௫)

கரையினமேல்விருக்கமேவுகாமமஞ்ஞைநீழலப
புரையில்வானியூடுதோன்றல்போர்த்துமுன்னமூழ்கிய
வரையின்மஞ்ஞையாதியாயமஞ்ஞையின்கணவாங்கிய
வினைகுலாமுடம்புதன்னுளவைத்திருத்தல்விழையுமே. (௬)

அன்னமாதியெண்ணிலபுட்களன்னநீர்ப்பயின்றிடன
முன்னமாமயூரமெண்ணிலார்ந்மூழ்கிதேவரு
ணன்னர்மேவுதிறனுணர்ந்தநாமமெய்தலாமெனுப
பன்னவாரிசப்புனற்பயிற்சியாற்றலொக்குமே. (௭)

துறைவிராயநான்முகன்றுறைந்தபூவிருக்கைபெற்
றிறைவிராயபல்லுயிர்ச்சிருட்டியன்னமேய்ந்துரு
மறைவிராயவொலிவிளக்கிமுளரியோம்புமாண்பினாற்
பொறைவிராயமண்படைத்தபுலவனொக்குமப்புனல். (௮)

சங்கநேமியேந்தலாற்றண்டுழாயளாவலாற்
பங்கயக்கண்மாவொடும்பார்மகட்டழுவலாற்
றுங்கவாமைமீனுருத்தொடர்ந்தவாந்திறத்தினு
லங்கண்ஞாலமுழுதுமோம்புமன்னனுங்கடுக்குமே. (௯)

இருவராலளந்திடாமையியைதலால்விலங்கலீன்
புருவராததோகைவந்துபண்பளாயுவுத்தலா
லருவராமல்யாருமண்மியடர்மலங்கழிததலாற்
பொருவராதபுண்ணியப்பிரானையொக்கும்பூம்புனல். (௧௦)

வே று.

இருந்தியபாவநாசத்தீர்த்தந்தோய்சென்னியெல்லாம்
பொருந்தியதெய்வக்கங்கைப்புண்ணியதீர்த்தநதோயு
மருந்தினுமினியநனீரிருகண்ணுனமகிழ்ந்துகாண்பார்
வருந்துதலொழிந்துமுக்கண்வாயப்பதறகையமின்றே. (௧௧)

புரவொன்றுபாவநாசப்புண்ணியப்பெருந்தீர்த்தத்தி
னரவொன்றோர்மண்டேகத்தையநகாநபற்றியுண்ண
விரவொன்றுகண்டமாதியியைந்தவத்தவனைபின்ன
ருரவொனறமதனைப்பூண்டதும்பராதியர்வியநதார். (௧௨)

பூதமோனாநதுளொன்றாய்ப்பொலிதனக்குள்ளதாய
வேதமில்குறிதெரித்தாங்கெங்கணுமலர்வகஞ்ச
மாதரம்பொலியமூழ்கினுதனமாதல்வேண்டி
மாதாமறறவையொருங்துவாய்ந்துசேர்ந்திருத்தன்மானும். (௧௩)

அன்னசெங்கமலமேலாலணிவளையமருங்காட்சி
மன்னவிங்கடுத்துமூழ்குமாட்சிமையாளரங்கை
பன்னமற்றிதுபோறபெற்றுப்பரிப்பதுமிதைத்தானெனறு
நன்னயம்பொலியயார்க்குமுணர்த்துமோர்நலமேபோலும். (௧௪)

திருந்தியபாவநாசத்தீர்த்தமேல்கரைபபாலையன்
பொருந்தியதிருமுன்வைகிப்பொறபமைசிராத்தஞ்செய்வோர்
பெருநதுயரளற்றிலாழும்பிதிரரைக்கலாயேறறிச்சீர்
தருந்திருச்சிவலோகத்திற்றங்கவேறறினவராவார். (௧௫)

மருவரும்பாவநாசவளம்பொலிதீர்த்தக்கோட்டிற
பொருவருஞ்சிராத்தஞ்செயயும்புண்ணியர்தருமெள்ளொன்றற்
கொருவருஞ்சிவலோகத்திலொருபத்துநூறாண்டெல்லை
வெருவரும்பிதிரர்மேவவிட்டவராவரம்மா. (௧௬)

வயங்குறுமாண்டின்றோறறமருவுமீரயனத்தோற்ற
நயங்கிளர்திங்கட்டோற்றநலமலியீருவாக்க
ளியங்கிருகதிரைநாகம்விழுங்குநாணிவைமுன்னுகப்
பயங்கிளர்விசேடநாளிற்படிதரிலதிவிசேடம். (௧௭)

தனுவைமண்ணுதிகொண்டுசமைதரச்சுத்திசெய்து
மனுவைநன்கியையவோதிமாண்புடைவிதிவழாமற்
புனிதவத்தீர்த்தமாடிப்புராதன்னடியார்கையி
லினிதலைமசெம்பொன்னுதியேன்றமட்டுதவல்வேண்டும். (௧௮)

புண்ணியவர்நீராடிப்பொருளள்ளவைக்குத்தக்க
கண்ணியதானஞ்செய்துகருதரும்வள்ளலார்க்கு
[illegible]ண்ணியவவர்பான்மேவிநகுமபயாம்பிகைக்குந்
தண்ணியவபிடேகாதிசமைத்திடிலதிவிசேடம். (௧௯)

வள்ளலாரநநீராடுமாண்புடைத்தினத்துமூழ்கி
யெள்ளலாகாதவன்னமினிதவரடியாருண்ண
நள்ளல்கூரனையதீர்த்தக்கோட்டின்வாய்நயப்பலூட்டுந்
தெள்ளல்கூமனத்தார்பேறியாவரோசெப்பர்பாலார். (௨௰)

அலையெறியனையதீர்த்தத்தமைந்தசோபானங்கட்கு
நிலைதபுகிலமுண்டாகினிலையுறப்புதுக்குவோரு
மலைதருதொள்ளிபோக்கிப்புனிதமேவயக்குவோரு
மிலைமலர்நநதனங்கள்களையுறவியற்றுவோரும். (௨௧)

கருணையங்கடலாம்வள்ளல்காமருபிராட்டியோடும்
பொருள்பெறுமகார்களோடும்புணைவிழைந்துலவுசாறு
பெருகவத்தீர்த்தத்துள்ளாற்பிறங்குறநடாத்துவோரு
மிருளறுசிவலோகத்தேபுகுநதுபேரினபநதுய்ப்பார். (௨௨)

இதுவரையுரைத்துவநதவறமியற்றுரோயேனு
முதுபுகழத்தீர்த்தத்தின்முயங்கனுசிதஞ்செயயாமை
யதுவுமோரறமேயாகுமவ்வறமேனுஞ்செய்க
சதுமுகன்முதலோர்போற்றுஞ்சிவபுரஞ்சாதலவேட்டார். (௨௩)

இன்னமாதீர்த்தந்தன்னிலெவ்வெத்தேயத்துள்ளாரு
நன்னர்வநதாடல்வேண்டுநடப்பதுமுற்றுதென்னி
லென்னவூர்தியினமேலேனுமிவர்நதுவந்தாடல்வேண்டுஞ்
சொன்னதுமுற்றுதெனனிற்சொல்லுதுமப்பாறகேண்மின. (௨௪)

வயங்குபொன்னுதவியந்நீரவரவழைத்தாடல்வேண்டு
மியங்குமற்றதுவுமொல்லாதெனிறபடிநதாடினோர்த
நயங்குலவடியிற்றாழ்நதுநயநதுளங்கசிதல்வேண்டும்
பயங்கிளரதுவுமுற்றுதெனறிடிற்பகரக்கேண்மின. (௨௫)

சாற்றுவண்பாவநாசத்தடம்புனறோய்நதுவந்த
காற்றுமேற்றேயுமாறுகனிவுடனேற்றல்வேண்டு
மாற்றுமற்றதுவுமேலாதெனிலநீர்ப்படிந்ததாகப்
போற்றுபாவனைசெய்தேனும்பொலிந்தினிதிருத்தனன்றும். (௨௬)

அன்னதுமொல்லாதென்னிலவர்க்குநாமுரைப்பதில்லை
தொன்னவில்சூலைகாசங்குட்டநோய்கரட்டுவாதம்
பன்னருங்குன்மமுன்னப்பற்பலகொடுநோயாவுஞ்
சொன்னவத்தீர்த்தத்துள்ளோர்துனிகொளிற்றொலைந்துபோமால். (௨௭)

ளர்புகழ்மிகுமாயூரகேத்திரத்தெல்லையுள்ளால்
வளர்பலதீர்த்தமின்னும்பற்பலவயங்கார்நிற்குந்
தளர்விலன்னவையாங்காங்குச்சாற்றுதுமுணர்ந்துகொண்மின
களர்முதன்மருவுமண்ணல்கழற்கன்புபூண்டுளீரோ. (உ௮)

திர்த்தவிசேடப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ககoஅ.

# அகத்தியர்பூசைப்படலம்.

பிரியமிருத்தவகாக்கலைசோலைபெருமுகின்மேறபோர்வை
யிரியவல்லாத்தலைச்சுற்றுவிண்கங்கையெனக்கொடிருமலயத்
தரியதவத்தினுயர்ந்தவனுயவகத்தியமாமுனிவன்
மரியபன்மாணவர்கூட்டநதழுவவயங்கியமர்தருநாள். (க)

வண்ணம்பொலியுமறைத்தலைமேவியமாயூரமாத்தலம்புக்
கெண்ணம்பொலியும்படிவள்ளலார்தமிணையடிச்சேவைசெயத்
தண்ணம்பொலியுந்திருக்கையவர்தநதவாவருளாலெழுந்தான்
திண்ணம்பொலியுமொருபன்னிருவருஞ்சேவித்துச்சூழ்தரவே. (உ)

கானமுங்குன்றுநதியும்பதியுங்கஞ்சுரமுங்கடவா
வீனமுந்துன்புமிலாதமாயூரத்தையெய்தியெண்ணில்லாச்சிவத்
தானமுந்தோய்ந்துவரும்பெரும்பொன்னித்தடநதிதீராடி
யேனமுமன்னமுங்காணரும்வள்ளலையெண்ணிவெண்ணீறணியா. (ங)

கண்மணிபூண்டைநதெழுத்துங்கணித்துக்கசிநதுமணல்கவரா
விண்மணிநேரமிளிர்பெருங்கோவிலுண்மேவிவிளங்கொருசார்
தண்மணிவீசுமொருபெருங்கோட்டுத்தலைவனுருப்புனையா
வண்மணிநேருமகத்தியமாதவமாமுனிபூசைசெய்வான். (ச)

பன்னிருமாணவரும்பணியேற்றுப்பகர்ச்சிவழியொழுகத்
தன்னிருகைகொடுமஞ்சனமாதிதயங்கநடாத்தியபி
னென்னிருவல்வினையுந்தபுத்தாளுமிறைவற்குத்தன்பெயரிட்
டென்னிருபாதம்வணங்கியெழுந்துநின்றேத்திடுவான்றுதியே. (ரு)

மண்ணவராதியர்சூழ்ந்தினிதேத்திடுமாமயிலாடுதுறைக்
கண்ணவர்செய்பணிகண்டருள்செய்யுமகத்தியவாரணமே
நண்ணவராகமுன்னுயவைமாற்றிநயநதருகற்பகமே
பண்ணவருட்கொள்சிந்தாமணியேநீபல்லாண்டுபல்லாண்டே. (சு)

எத்திக்குந்தன்னரையாடையெனப்புனையீசன்றிருமகனே
முத்திக்குவித்தெனயாவரும்பேசமுளைத்தவமொய்யமர்செ
யத்திக்கிரங்கியருள்பதித்தூர்நதவகத்தியவாரணமே
பத்திக்கினியபராபரனேநீபல்லாண்டுபல்லாண்டே. (எ)

வாசவுன்மாமலரோனெடுமான்முதல்வானவர்சூழ்ந்தேத்தப்
பேசரிதாமிடையூறுதவிர்த்துப்பெரிதருள்புண்ணியனே
யாசமையாச்சிவயோகருளத்துளகத்தியவாரணமே
பாசமொடங்குசமேந்தியகையாய்பல்லாண்டுபல்லாண்டே. (அ)

என்றுதுதித்துக்கணேசனுளைப்பெற்றேகுபுவள்ளன்முன
நன்றுதிருமஞ்சனமுதல்யாவுநயம்பெறச்சேகரியா
வன்றுபெருதவுளத்தொடுமோட்டுதலாதியினிதியற்றித்
துன்றுபன்மாணவரோடுமெதிர்நின்றுதோத்திரஞ்சொல்லுவனால். (௯)

## வேறு.

### ஒருபோகுமயங்கிசைக்கொச்சகக்கலிப்பா.

மாமேவுமுகிறவழும்வளமேவுபல்சிமயந்
தாமேவுசையமெனுந்தனிமேவுவரைநின்றும்
வயங்குபலமணித்திரளுமால்யானைக்கோடுகளு
மியங்குகதிர்புரைபொன்னுமெறிவிரைச்சந்தகிற்றுணியு
மிருகோடுஞ்செறியவெடுத்தெறிந்துதுவைத்தெவ்விடத்து
மருகோடும்புனற்பொன்னியாறுலாஞ்சோணாட்டிற்
காமருபல்வளம்பொலியுங்கவுரிமாயூரத்தின்
மாமருவுஞ்சுடர்பரப்புமணிக்கோயில்வீற்றிருப்போய்.

அடைப்பதுமத்தவனணுகியன்பினராதிக்கப்
படைப்பதுமற்றுனதென்றுபாங்குபெறக்கொடுத்தருளிக்
கலங்காவலவுணருளங்கலங்காமல்வந்திறைஞ்ச
நிலங்காவலுனக்கின்றுநேர்ந்தனமென்றருள்செய்து
புரந்தரன்முனெண்மர்களும்பொருந்துமலர்தூயிரப்ப
நிரந்தரமெண்டிசைக்காவனீர்புரிமினெனப்போக்கி
வானோருமிருகதிருமண்ணோரும்பாதலம்வா
ழேனோருந்தொழவியைந்தவினிதளித்தவருளோய்கேள்.

இவையிரண்டும் எட்டடித்தரவு.

அம்மையொருபறவையுருவாகவருள்புரிந்தனைநீ
செம்மையொருபறவையுருச்செறிந்தமைக்குத்தகல்குறித்தோ.
மயிலுருவப்பூசையினோமாதேவிபின்னாளும்
பயிலுருவப்பூசையினோபரம்பரநிற்கதிவிருப்பம்.
மயிலுருவப்பூசையெனில்வயங்குநின்மேனியினுமைமுன
பயிலுருவப்பூசைபோற்பஃறொடிக்கைதோயாதே.
தோகையாய்நடித்ததிலுஞ்சுந்தரிக்குமன்றிடைநின்
னோகையாய்நடித்ததுமிகவோகையாய்முடிந்ததே.
மாவடியின்வீற்றிருப்பாய்வடிவரியேனென்பாய்மென்
பூவடியாள்கொடுத்தவடுப்புநிசெய்வடுவன்றே.
யருளபயாம்பிகையைமணமாற்றினையாற்றுயேற்
றெருளமறைவிதித்தவிதிதெளிவிப்பாரிலையன்றே.

இவையாறுந்தாழிசை.

அரியயன்முதலியவமரர்பலருமுய- வருவிடமமுதுசெய்மணமலிகருணையை.
இமையவர்முதலியவெவருமுள்ளுலைதர- வமைதருதிரிபுரமழல்செயுமுறுவலை.
யுருவதுகருதலின்மறையவனிழிவுறா- தருதலைகரமுறுதகைபுரியுகிரினை. [லினை,
நிசிசரரிறைவன்மெய்நெறுநெறுநெறவென- வசியொடுவரைநிறுவடியொருவிர

இவைநான்குமராகம்.

